உ

சண்பக விநாயகர் துணை




# முகவுரை



அருந்தமிழ் உணர்ந்த அன்பர்காள்!

சோணசைலமாலை என்னும் இந்நூலை இற்றைக்கு 250 வருடத்திற்கு முன்னிருந்த நல்லாற்றூர் அல்லது துறைமங்கலம், ஸ்ரீ சிவப்பிரகாச சுவாமிகள் திருவண்ணாமலைக்குத் தரிசனார்த்தமாக எழுந்தருளிய காலத்துக் கிரிப்பிரதக்ஷிணஞ் செய்துவரும் பொழுதே தெய்வத் திருவருளால் காப்புச் செய்யுள் நீங்கலாக நூறு செய்யுட்கள் பாடியருளினர்.

இந்நூலின் முன்னிரண்டடியில் நூலாசிரியர் முறைப்பாடும், பின்னிரண்டடியில் அம் மலையைப்பற்றிய அதி விசித்திர கற்பனாலங்காரங்களும் அடங்கியுள்ளன.

இவ் வரிய நூல், தமிழில் அபிவிருத்தி அடையக் கருதும் நன் மாணாக்கர்களுக்குக் கல்வி அறிவு ஒழுக்கங்களை உண்டாக்கிச் சிவபத்தியை விளைக்கத் தக்கதாக உள்ளது. இந்நூலைக் கற்ற துணையானே சொற்சுவை பொருட்சுவை முதலியன நன்கு விளங்குமென விசேடித்து யான் எழுதுவது மிகை.

இத்தகைய நூல்களுக்கு உரை யெழுதப் புகுவோர் பற்பல நூல்களிற் பயின்று பெற்ற நுண்ணறிவுடையரா யிருப்பினன்றி அவருரைச் சிறவாதென்பதை அறிந்துவைத்தும், சிதம்பரம் - ஈசானியமடம், ஸ்ரீமத்-இராமலிங்கசுவாமிகள் அவர்கள் மாணாக்க

ருள் ஒருவராகிய, ம—ா—ா—ஸ்ரீ. க. வ. திருவேங்கட நாயுடு அவர்கள் எழுதிய பதவுரையையும், ம—ா—ா—ஸ்ரீ. புதுவை. சுப்பராய முதலியார் அவர்கள் எழுதிய பொழிப்புரையையும், யாழ்ப்பாணம்-ஸ்ரீலஸ்ரீ சாமிநாதபண்டிதர் அவர்கள் எழுதிய குறிப்புரையையும் தழுவி புத்துரையொன்று எழுதலாயினேன்.

இதில் பதவுரையும், பதசாரமும், இலக்கண விசேஷமும், சங்கநூற் செய்யுட்களும், அவற்றின் உரை விளக்கமும், இலக்கண அமைதியை வினாவிடைகளான் வற்புறுத்தலும், தொல்காப்பிய முதலிய இலக்கணச் சூத்திரங்களும், பல இலக்கியங்களும், சைவ சாத்திரங்களும், ஆங்காங்குச் சில செய்யுள்களுக்குப் பொழிப்பும் காணப்படும்.

இந் நூலின் பழையவுரைகள் அச்சிட்டு வெகுகால மாயினமையின் அவ் வுரைகள் கிடைக்கப்பெறாமையினால், ஓர் உரை எழுதும் வண்ணம் ம-ா-ா-ஸ்ரீ சை - சிவசங்கர செட்டியார், B. A., B. L. அவர்கள் எமக்குக் கட்டளை யிட்டமையால் யான் எழுதித்தர, இவ் வுரையை அச்சிட்டு வெளிப்படுத்தினர். இவ் வுரையை வாசிக்கும் மாணவர்களும் தமிழுலகமும் மனப்பூர்வமாக ஷை செட்டியார் அவர்கட்கு வந்தனம் செலுத்தி நன்றி பாராட்டக் கடவதாக.

இங்ஙனம்:

சென்னை, கோ. இராமலிங்கத் தம்பிரான்,
தமிழ்ப் பண்டிதர்.

உ

சண்பக விநாயகர் துணை

# சிவப்பிரகாச சுவாமிகள் சரித்திரம்

சோணசைலமாலை நூலாசிரியராகிய சிவப்பிரகாச சுவாமிகள், தொண்டைநாட்டிலே, காஞ்சீபுரத்திலே, எறக்குறைய இருநூற்றைம்பது வருடங்களுக்கு முன், தொண்டைமண்டலம் வேளாளர்க்குத் தக்ஷா குருவாகிய குமாரசுவாமி தேசிகர் என்பவர் திருவண்ணாமலையில் குருதேவரிடத்துத் தாரணதீக்ஷை செய்து கொண்டு வீரசைவ மதத்தினராய், அவரிடத்து விடை பெற்றுக் கொண்டு காஞ்சீபுரத்துக்கு வந்து வாழுநாளில் அவருக்கு அண்ணாமலையார் அருளால் பிறந்தனர். இவருடன் வேலாயுதம், கருணைப் பிரகாசம் என இரண்டு சகோதரர்களும், ஞானாம்பிகை என ஒரு சகோதரியும் உதித்தனர்.

சிவப்பிரகாச சுவாமிகள் முதலிய மூவரும் கல்வி பயின்று வருங்காலத்தில் தந்தையாராகிய குமாரசுவாமி தேசிகர் சிவலிங்கைக்கியமாயினார். பின்னர் மூத்தவராகிய சிவப்பிரகாச சுவாமிகள் தமது சகோதரர்களோடு திருவண்ணாமலைக்குப் போய்க் குருதேவரைத் தரிசித்து, அங்கே வாசஞ் செய்துகொண்டிருக்கு நாள்களுள் ஓர்நாள், அந்தச் சோணசைலத்தைப் பிரதக்ஷிணஞ் செய்து வரும்போதே, சோணசைலமாலை யெனப் பெயரிய நூலு செய்யுட்களால் அதனைத் தோத்திரம் பண்ணினார். பின்னும் பேரிலக்கணங்களைப் பெரிதுங் கற்பான் விரும்பித் தமது சகோதரர்களுடனே தக்ஷிண தேசத்திற்குப் பிரயாணமுற்று, வாலிகண்டபுரத்திற்குத் தென்பாகத்திலுள்ள துறைமங்கலம் என்னும் நகரத்தையடைந்து, ஒரு நந்தவனத்தில் சிவபூசை செய்துகொண்டிருந்தனர். அப்பொழுது கிராமாதிபதியாகிய அண்ணாமலை ரெட்டியார் என்பவர், சுவாமிகள் வரவைக் கேள்வியுற்று, அங்கு அடைந்து,

அவரைத் தரிசித்து, அவர்க்குப் பணிவிடை செய்து அநுக்கிரகம் பெறவேண்டுமென் றெண்ணிச், சுவாமிகளை நோக்கி, "இவ் விடத் திற் சில காலம் வாசஞ் செய்யவேண்டும்" என்று விண்ணப்பஞ் செய்து, சுவாமிகளது அநுமதி பெற்றுத் தங்கள் குருவாகிய சேன்னவசவையர் மடத்துக்கு மேற்றிசையில் ஒரு திருமடங் கட்டுவித்து, அதில் சுவாமிகளை எழுந்தருளச்செய்து, அகோராத் திரம் பிரிவின்றி அணுக்கத் தொண்டராய் அமர்ந்திருக்க, சிவப் பிரகாச சுவாமிகள் அண்ணாமலை ரெட்டியாருக்குச் சன்மார்க்கங்க ளைப் போதித்துக்கொண்டு, இரண்டு வருஷம் வரையில் அங்கே எழுந்தருளி யிருந்தார்.

அதன் பின்பு சிவப்பிரகாச சுவாமிகள், தாம் கொண்ட கருத் தை நிறைவேற்ற விரும்பித் திருநெல்வேலியை யடைந்து, தரும புரவாதீனத்து வெள்ளியம்பலத் தம்பிரானைக் கண்டு, தாம் இலக்கணம் கற்பான்வேண்டி வந்தமையைத் தெரிவித்துக்கொண் டனர். அத் தம்பிரான், சுவாமிகளுடைய இலக்கியப் பயிற்சியை யறிதற்பொருட்டு, "கு என்பதை முதற்கொண்டு, ஊருடையான் என்பதை இடைப் பெய்து, கு என்பதையே ஈற்றிலுங் கொண்டு முடியும்படி ஒரு வெண்பாப் பாடுக.!" என்று கூறச் சுவாமிகள்,

"குடக்கோடு வானெயிறு கொண்டாற்குக் கேழன்
முடக்கோடு முன்னமணி வாற்கு—வடக்கோடு
தேருடையான் றெவ்வுக்குத் தில்லைத்தோன் மேற்கொள்ள
லூருடையா னென்னு முலகு."

---

* (இ - ள்) மேற்றிசையை நோக்கி யோடுகிறவனாகிய சூரிய னது பற்களைத் தகர்த்தவரும், திருமாலாகிய பன்றியினது வளை வாகிய கொம்பை மதாணிப் பதக்கமாக முற்காலத்தி லணிந்தவ ரும், வடதிசையை நோக்கி யோடுகின்ற தென்றலாகிய தேரை யுடையவனாகிய மன்மதனது பகைவருமாகிய சிவபெருமானுக்குத் தில்லைநகரம் ஊராகும், யானைத்தோல் புலித்தோல்கள் வஸ்திர மாகும், ஊர்தல் இடபமாகும் என்று உலகத்தவர் சொல்லுவர். எ - று.)

என்னும் வெண்பாவைத் திருவாய்மலர்ந்தருளினார். அத் தம்பிரான் அவ் வெண்பாவை வியந்து பாராட்டிச், சுவாமிகளைத் தழுவித் தம் மருகிருத்திச், சுவாமிகள் சகோதரர்களாகிய வேலைய சுவாமிகள் கருணைப்பிரகாச சுவாமிகள் என்னும் இருவருக்கும் சிவப்பிரகாச சுவாமிகளுக்கும் பஞ்ச லட்சணங்களையும் பாடஞ்சொல்லி முடித்தார். அது கண்ட சுவாமிகள் பேருவகையுற்று, அண்ணாமலை ரெட்டியா ரென்பவர் தங்களுக்கு வழிச் செலவிற் குபகரித்த முந்நூறு பொன்னையும் குருதக்ஷிணையாக வைத்து உபசரிக்க, அத் தம்பிரான் "இது நமக்குவேண்டா; நம்மைத் தூஷித்தலையே இயல்பாகக் கொண்டு திருச்செந்தூரில் வசிக்கும் தமிழ்ப்புலவ ரொருவரோடு கல்வியில் வாதிட்டு அவரை வென்று அடிமையாக்கி அவர வந்து நம்மை வணங்கும்படி செய்வித்தலே குருதக்ஷிணையாகும்" என்று மறுத்தருளினார்.

அவர் கருத்தறிந்த சுவாமிகள் அதற் குடன்பட்டுத் திருச்செந்தூரை யடைந்து, அப் புலவரோடு கல்வியில் வாதிட்டு அவரை வென்று அடிமையாக்கி, அப் புலவர் தம்பிரானை வந்து வணங்கும்படி செய்வித்தனர். அதனைக் கண்டு அத் தம்பிரான் திருவுள மகிழ்ந்து, சிவப்பிரகாச சுவாமிகளைப் பார்த்து, "நீர் பாடிய வெண்பாவில் சிவபிரானுக்குரிய தலம் சிதம்பரமே யெனச் சுட்டிக் குறிப்பால் விளக்கினமையால் அத் தலத்திலே சில காலம் வாசஞ் செய்தருளுக" என்று விடைகொடுத் தனுப்பியருளினார்.

சுவாமிகள் அவ் விடத்தினின்றும் நீங்கிச் சிவஸ்தலங்கடோறும் சென்று சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு, சடையமங்கலத்தைச் சார்ந்து முன்போலவே அண்ணாமலை ரெட்டியா ரென்பவருக்குத் திருவருள் பாலித்து, அவருடைய வேண்டுகோளின்படி அவர் இருக்கையைப் பெயர்ந்த வாலிகண்ட புரத்தின் வடமேற் பாகத்தி

லுள்ள திருவெங்கைமா நகரத்திலே தம்பொருட்டு அவராற் கட்டப்பட்ட திருமடத்தில் வீற்றிருந்துகொண்டு அத் தலத்திலுள்ள பழமலைநாதர்மீது திருவெங்கைக் கோவை, திருவெங்கைக் கலம்பகம் முதலிய பிரபந்தங்களை இயற்றியருளினர். பின்பு தம்மிடத்து அன்பு பூண்ட அண்ணாமலை ரெட்டியாரோடு சிதம்பரத்திற்கு எழுந்தருளி, அங்கே ஒரு திருமடம் கட்டுவித்து, அதில் வீற்றிருந்து, சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு, நால்வர் நான்மணிமாலை, சிவப்பிரகாச விகாசம் முதலிய பிரபந்தங்களைச் செய்தருளி, அத் தலத்தை அருமையாக நீங்கிப் பிற தலங்களையும் வணங்கித், திருக்காட்டுப்பள்ளியை யடைந்து சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு அவ்விடத்துத் தங்கி யிருந்தனர். ஆங்கிருக்கும்போது, கல்வியிற் சிறந்த ஒரு பெண்மணிக்கு உண்மை ஞானமுண்டாகும்படி கிருபா நோக்கஞ் செய்தருளினர். அதன் பின்னர்க் காஞ்சீபுரத்தைத் தரிசிக்க விரும்பி அண்ணாமலை ரெட்டியாரோடும் பிரயாணப்பட்டு வரும்போது வழியிலே சாந்தலிங்க சுவாமிகளைக் கண்டு அவருடன் அளவளாவிக் களிகூர்ந்து பின்னர்ப் பொம்மைய பாளையத்தை யடைந்து சிவஞானபாலைய சுவாமிகள்மீது தாலாட்டு முதலிய பிரபந்தங்களைப் பாடி, அவர் திருச்சந்நிதியி லரங்கேற்றி, அச் சுவாமிகளிடத்து ஞானோபதேசம் பெற்று, அஞ் ஞானாசாரியரது கட்டளைப்படியே தமது தங்கையாகிய ஞானாம்பிகையைச் சாந்தலிங்க சுவாமிகளுக்கு விவாகஞ் செய்து கொடுத்துவிட்டு, அண்ணாமலை ரெட்டியாரைத் துறைமங்கலத்துக்குப் போகும்படி ஆஞ்ஞாபித்து, ஞானாசாரியரைத் தரிசித்துக்கொண்டு அவ் விடத்திற்றானே யிருந்தார்.

சிலகாலஞ் சென்றபின் ஞானாசாரியரிடத்தே விடை பெற்றுக்கொண்டு காஞ்சீபுரத்தை யடைந்து, சுவாமி தரிசனஞ் செய்து அங்கு வசிக்கும் நாளில், வேதாந்த சூடாமணி, பிரபுலிங்கலீலை

முதலிய பிரபந்தங்களைப் பாடியருளினார். ஞானசாரியார்மீது திருப்
பள்ளியெழுச்சி, பிள்ளைத்தமிழ் என்னும் இரண்டு பிரபந்தங்
களையும் செய்துகொண்டு, அக் காஞ்சியினின்றும் புறப்பட்டு
இடையிலுள்ள சிவஸ்தலங்களைத் தரிசித்துக்கொண்டு, திருக்கூவ
மென்னும் தலத்தை யடைந்தார். ஆங்குள்ள வேளாளர் முதலி
யோர் வேண்டுகோளின்படி திருக்கூவப் புராணம் பாடி அரங்
கேற்றி, அங்கு நின்றும் புறப்பட்டு மயூராசலத்துப் பாலசித்தர்
மடத்தை யடைந்து, ஞானசாரியாரைத் தரிசனஞ் செய்து, மேற்
சொல்லிய பிரபந்தங்கள் அனைத்தையும் அவர் சந்நிதியி லரங்கே
ற்றி யுடன் வசித்திருந்தனர். பின்னர் விருத்தகிரியை யடைந்து
பழமலைநாதரையும் தரிசித்து வணங்கி, அவ் விடத்திலே தம்பொ
ருட்டுச் சிதம்பரபூபதி என்பவரால் கட்டப்பட்ட திருமடத்தில்
வீற்றிருந்து, பழமலைநாதர்மீதும், பெரியநாயகி யம்மையார்
மீதும் முறையே பழமலையந்தாதி முதலியனவும், பெரியநாயகி
யம்மை விருத்தம் முதலியனவும் திருவாய்மலர்ந்தருளினர்.

இங்ஙனம் இருக்குநாளில், 'ஞானசாரியர் இஷ்டலிங்க பர
சிவத்திலே கலந்தருளினார்' என்பதை அறிந்த சிவப்பிரகாச சுவாமி
கள் மனங் கலங்கிப், பொம்மபுரத்தை யடைந்து, ஆசிரியர் ஒடுங்
கிய குகையுட் சென்று, பலமுறை நமஸ்கரித்துத் துதித்துத்,
தாம் இயற்றிய கலம்பகத்தையும் சந்நிதியி லரங்கேற்றி, ஞான
சாரியரைப் பாவனாரூபமாக வழிபட்டுக்கொண்டு அங்கே தங்கி
யிருந்தனர். அற்றை ஞான்று நன்னெறி வெண்பா என்னும்
நூலை யியற்றியருளினார். பின்னர், மூன்றாம் பட்டத்துச் சுவாமிக
ளாகிய ஞானசாரியரிடத்தே விடை பெற்றுக்கொண்டு, திருப்
பதிகம்பெற்ற திருத்தலங்கடோறும் யாத்திரை புரிந்துவந்தனர்.
அக் காலத்திலே சதுரகராதி செய்த வீரமாமுனிவர் என்பவர்
எதிர்ப்பட்டு ஏசுமதமாகிய தம் கொள்கையை நாட்டுகற் பொருட்

டுத் தருக்கஞ் செய்ய, உடனே அக் கொள்கையை மறுத்து ஏக மத நிராகரணம் எனப் பெயரிய ஓர் நூலை யருளிச் செய்தனர். பிறகு ஒவ்வொரு சிவஸ்தலங்களையும் இவ் விரண்டு வெண்பாக்களாற் ஸ்ரோத்திரஞ் செய்து முடித்து, அவற்றிற்கு க்ஷேத்திர வெண்பா எனப் பெயர் புனைந்து, நல்லாற்றூரை யடைந்து ஞானாசாரியரது திருமடத்தில் வீற்றிருந்தார். அங்கு வசிக்கு நாளில், சிவநாம மகிமையும், இஷ்டலிங்கப் பெருமான்மீது அபிஷேக மாலையும், நெடுங்கழி நெடிலும், குறுங்கழி நெடிலும், நிரஞ்சன மாலையும், சீகாளத்திப் புராணத்தில், கண்ணப்பச் சருக்கமும் நக்கீரச் சருக்கமும் செய்தருளி தன் மாணாக்கர்களுக்குக் கல்வி போதித்துச் சிவாநுபவச் செல்வராய்ச் சில காலம் வாழ்ந்திருந்து, முப்பத்திரண்டாம் வயதில், கன்னிமதியில், பௌர்ணமைத் திதியில் இஷ்டலிங்க பரசிவத்திற் கலந்தருளினார். அப்பொழுது, வேலைய சுவாமிகள்,

> "அல்லிமலர்ப் பண்ணவனு மாராய்ந் தறிகவிதை
> சொல்லு மிருவரிடைத் தோன்றியயான்—முல்லை
> யரும்பிற் பொலியு மணிமுறுவ னல்லாய்!
> கரும்பிற் கணுநிகர்த்தேன் காண்."

எனனும் வெண்பாவைப் பாடியருளினார்.

முற்றுப் பெற்றது.

சிவப்பிரகாச சுவாமிகள் திருவடி வாழ்க.

---

உ

கணபதி துணை

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

சோணசைலமாலை செய்யுள் முதற்குறிப்பு அகராதி
முற்றுப்பெற்றது.

உ

கணபதி துணை

# சிறப்புப் பாயிரம்

நேரிசை வெண்பா

ஏறூருஞ் சோண சயிலனுக் கெஞ்ஞான்றும்
பூணா மாலை புனைந்தணிந்தான்—மாறாப்
பவப்புணரி நீந்தியிடப் * பாரதிநூல் செய்த
சிவப்பிரகா சக்குரவன் றேர்ந்து.



* பாரதி - மரக்கலம். கடலைக் கடக்கச்செய்யு மரக்கலம் போலப் பிறவிக்கடலைக் கடப்பித்தலின், 'பாரதி நூல்' என்றார்.

உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிச்செய்த

# சோணசைலமாலை

## மூலமும் உரையும்.

சோணசைலமாலை என்பது, சோணசைலனது மாலையென விரியும். இது பொருட்பிறிதின்கிழமைப் பொருளதாகிய ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். இனி, இத் தொடர் மொழியை இரண்டனுருபும் பொருளும் உடன்றொக்க தொகையாகவும் கொள்ளலாம்; அதற்குப் பொருள், 'சோணசைலனைக் குறித்துப் பாடியதோர் மாலை' என்பதாம். சோணசைலன்-சிவந்த அக்கினிமலை யுருவாயுள்ளவன். சோணம் - செம்மை; அது பண்பாகுபெயராய் அக்கினியை யுணர்த்திற்று. மாலை - தொண்ணூற்றாறு பிரபந்தங்களுள் ஒன்று. அதன் இலக்கணம் - ஒரு விஷயத்தைக் குறித்துப் பல செய்யுள் கூறுவது. மலர்கள் கொண்டு தொடுக்கப்பட்ட பூமாலைபோலச் சொற்கள் கொண்டு தொடுக்கப் பட்ட பாமாலையாகிய பிரபந்த மென்க; எனவே, மாலை என்பது இங்கு உவமை யாகுபெயராய் நூலை யுணர்த்திற்று.

உ

கணபதி துணை

# சிறப்புப் பாயிரம்

## நேரிசை வெண்பா

ஏறூருஞ் சோண சயிலனுக் கெஞ்ஞான்றும்
பூணார மாலை புனைந்தணிந்தான்—மாறாப்
பவப்புணரி நீந்திடப் * பாரதிநூல் செய்த
சிவப்பிரகா சக்குரவன் றேர்ந்து.



* பாரதி - மரக்கலம். கடலைக் கடக்கச்செய்யு மரக்கலம் போலப் பிறவிக்கடலைக் கடப்பித்தலின், 'பாரதி நூல்' என்றார்.

உ

கணபதி துணை

திருச்சிற்றம்பலம்

துறைமங்கலம் சிவப்பிரகாச சுவாமிகள்

அருளிச்செய்த

# சோணசைலமாலை

## மூலமும் உரையும்.

சோணசைலமாலை என்பது, சோணசைலனது மாலை யென விரியும். இது பொருட்பிறிதின்கிழமைப் பொருளதாகிய ஆறும் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். இனி, இத் தொடர் மொழியை இரண்டனுருபும் பொருளும் உடன்றொக்க தொகை யாகவும் கொள்ளலாம்; அதற்குப் பொருள், 'சோணசைலனைக் குறித்துப் பாடியதோர் மாலை' என்பதாம். சோணசைலன்-சிவந்த அக்கினிமலை யுருவாயுள்ளவன். சோணம் - செம்மை; அது பண்பாகுபெயராய் அக்கினியை யுணர்த்திற்று. மாலை - தொண்ணூற்றாறு பிரபந்தங்களுள் ஒன்று. அதன் இலக்கணம் - ஒரு விஷயத்தைக் குறித்துப் பல செய்யுள் கூறுவது. மலர்கள் கொண்டு தொடுக்கப்பட்ட பூமாலைபோலச் சொற்கள் கொண்டு தொடுக்கப்பட்ட பாமாலையாகிய பிரபந்த மென்க; எனவே, மாலை என்பது இங்கு உவமை யாகுபெயராய் நூலை யுணர்த்திற்று.

சோணசைல வடிவாயுள்ள சிவபெருமானைக் குறித்துப் பாடிய தோர் நூல் என்பது கருத்து. இனி, சிவந்த அக்கினிமலை யுருவா யுள்ள சிவபெருமானது திருவடிகளிலே சூட்டுந் திருமாலை போலுதலால், சோணசைலமாலை எனப்பட்டது எனினும் அமை யும். சோணசைலன் + மாலை = சோணசைலமாலை என்றாயது, "சில விகாரமா முயர்திணை" என்றதனால். சோணசைலம் | மாலை எனப் பிரித்துப் பொருள் கூறின் 'அத்து'ச் சாரியை பெறல் வேண்டும், "திருவரங்கத்துமாலை" என்பது போல. இந் நூல், நூலின்புறமாக முதலிற் கூறிய காப்புச் செய்யு ளொன்றும், நூலின் இறுதியிற் கூறும் தற்சிறப்புப் பாயிரச் செய்யு ளொன் றும் நீங்கலாக நூறு செய்யு ளுடையது. இந் நூல் எழுசீர்க் கழி நெடிலடி யாசிரிய விருத்தத்தான் அமைந்தது.

---

## காப்பு

### நேரிசை வெண்பா

*சதுரனெழிற் சோண சயிலற் றுதிப்பன்*
*மதுரமொழி யன்பர் மனமாங்—குதிரைதிறை*
*கொண்டவனென் றேத்துங் குரைகழற்கால் யானைதிறை*
*கொண்டவனை யென்னுளத்தே கொண்டு.*

(பதவுரை) மதுரமொழி - இனிய சொற்களையுடைய, அன் பர் - அடியார்களது, மனம் ஆம் குதிரை - மனமாகிய குதிரை களை, திறை கொண்டவன் என்று - கப்பமாகக் கொண்டருளுபவ னென்று, ஏத்தும் - (உலகினர்) புகழும், குரை கழல் கால் - ஒலிக் கின்ற வீரக்கழலை யணிந்த திருவடிகளையுடைய, யானை திறை கொண்டவனை - யானை திறைகொண்டவ னென்னும் திருநாமம் வாய்ந்த விநாயகக் கடவுளை, என் உளத்து கொண்டு - எனது மனத்

திலே தியானித்து, (அக்கடவுளுடைய அருளால்) சதுரன்-சதுரப் பாட்டினை யுடையவராகிய, எழில் சோணம் சயிலன்-அழகிய சோணசைலேசுரரை, துதிப்பன்-(யான்) துதிப்பேன்; (என்றவாறு.)

(விசேடவுரை) காப்பு - காத்தல். அஃதிங்குக் காக்கின்ற கடவுள் விஷயமான வணக்கத்துக்குத் தொழிலாகுபெயராய்ப் பின்னர்க் காரியவாகுபெயராய்க் காப்புச் செய்யுளை யுணர்த்திற்று. சைவசமயிகள் யாதானும் ஓர் நூல் செய்யத் தொடங்குங்கால் முதலில் விநாயக வணக்கங் கூறுதல் மரபாதலால் இந் நூலாசிரியரும் ஆன்றோர் ஒழுக்கத்தின்படி காப்புச்செய்யுளில் விநாயக வணக்கங் கூறினர். இங்ஙனங் கூறுதல் யாதுக்கெனின், தாம் தொடங்கும் நூல் இடையூறின்றி இனிது முடியு மென்பது கருதியென்க. இடையூறு வாராமற் காத்தலால் விநாயகக் கடவுளுக்கு விக்கின விநாயகர் என்னும் பெயர் வழங்கும். இக் காப்புச் செய்யுளில் தெய்வ வணக்கமும் செயப்படுபொருளும் கூறப்படுதலான் இது தற்சிறப்புப்பாயிர மெனப்படும். இதனை,

> "தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும்
> எய்த வுரைப்பது தற்சிறப் பாகும்."

என்பதனால் அறிக. இதில், தெய்வ வணக்கமாவது விநாயகக் கடவுளை யுளத்தே கொள்ளுதல். செயப்படுபொருளாவது சோணசைலனைத் துதித்தல். இனி, வாழ்த்தல், வணங்கல், பொருளியல் புரைத்தல் என்னும் மூவகை வாழ்த்துள் இக் காப்புச் செய்யுள் வணங்கல் எனினும் அமையும்.

சதுரன் - சதுரப்பாட்டினையுடையவன்; ஈண்டுச் சிவபெருமானை யுணர்த்திற்று. சதுரப்பாடாவது ஆக்கலாதிய கிருத்தியங்களை அம்புயனாதியர் தமது சந்நிதியி லியற்றுநிற்பத் தாம் இறைமை பூண்டு வாளா விருத்தல். அன்றி, அரிபிரமர் தேடிக் காணு

சோணசைல வடிவாயுள்ள சிவபெருமானைக் குறித்துப் பாடிய தோர் நூல் என்பது கருத்து. இனி, சிவந்த அக்கினிமலை யுருவா யுள்ள சிவபெருமானது திருவடிகளிலே சூட்டுந் திருமாலை போலுதலால், சோணசைலமாலை எனப்பட்டது எனினும் அமை யும். சோணசைலன்+மாலை = சோணசைலமாலை என்றாயது, "சில விகாரமா முயர்திணை" என்றதனால். சோணசைலம்+மாலை எனப் பிரித்துப் பொருள் கூறின் 'அத்து'ச் சாரியை பெறல் வேண்டும், "திருவரங்கத்துமாலை" என்பது போல. இந் நூல், நூலின்புறமாக முதலிற் கூறிய காப்புச் செய்யு ளொன்றும், நூலின் இறுதியிற் கூறும் தற்சிறப்புப் பாயிரச் செய்யு ளொன் றும் நீங்கலாக நூறு செய்யு ளுடையது. இந் நூல் எழுசீர்க் கழி நெடிலடி யாசிரிய விருத்தத்தான் அமைந்தது.

---

## காப்பு

### நேரிசை வெண்பா

*சதுரனெழிற் சோண சயிலற் றுதிப்பன்*
*மதுரமொழி யன்பர் மனமாங்—குதிரை திறை*
*கொண்டவனென் றேத்துங் குரைகழற்கால் யானை திறை*
*கொண்டவனை யென்னுளத்தே கொண்டு.*

(பதவுரை) மதுரமொழி - இனிய சொற்களையுடைய, அன் பர் - அடியார்களது, மனம் ஆம் குதிரை - மனமாகிய குதிரை களை, திறை கொண்டவன் என்று - கப்பமாகக் கொண்டருளுபவ ரென்று, ஏத்தும் - (உலகினர்) புகழும், குரை கழல் கால் - ஒலிக் கின்ற வீரக்கழலை யணிந்த திருவடிகளையுடைய, யானை திறை கொண்டவனை - யானை திறைகொண்டவ னென்னும் திருநாமம் வாய்ந்த விநாயகக் கடவுளை, என் உளத்து கொண்டு - எனது மனத்

திலே தியானித்து, (அக்கடவுளுடைய அருளால்) சதுரன்-சதுரப் பாட்டினை யுடையவராகிய, எழில் சோணம் சயிலன்-அழகிய சோணசைலேசுரனை, துதிப்பன்-(யான்) துதிப்பேன்; (என்றவாறு.)

(விசேடவுரை) காப்பு - காத்தல். அஃதிங்குக் காக்கின்ற கடவுள் விஷயமான வணக்கத்துக்குத் தொழிலாகுபெயராய்ப் பின்னர்க் காரியவாகுபெயராய்க் காப்புச் செய்யுளை யுணர்த்திற்று. சைவசமயிகள் யாதானும் ஓர் நூல் செய்யத் தொடங்குங்கால் முதலில் விநாயக வணக்கங் கூறுதல் மரபாதலால் இந் நூலாசிரியரும் ஆன்றோர் ஒழுக்கத்தின்படி காப்புச்செய்யுளில் விநாயக வணக்கங் கூறினார். இங்ஙனங் கூறுதல் யாதுக்கெனின், தாம் தொடங்கும் நூல் இடையூறின்றி இனிது முடியு மென்பது கருதி யென்க. இடையூறு வாராமற் காத்தலால் விநாயகக் கடவுளுக்கு **விக்கின விநாயகர்** என்னும் பெயர் வழங்கும். இக் காப்புச் செய்யுளில் தெய்வ வணக்கமும் செயப்படுபொருளும் கூறப்படுதலான் இது தற்சிறப்புப்பாயிர மெனப்படும். இதனை,

"தெய்வ வணக்கமும் செயப்படு பொருளும்
எய்த வுரைப்பது தற்சிறப் பாகும்."

என்பதனால் அறிக. இதில், தெய்வ வணக்கமாவது விநாயகக் கடவுளை யுளத்தே கொள்ளுதல். செயப்படுபொருளாவது சோணசைலனைத் துதித்தல். இனி, வாழ்த்தல், வணங்கல், பொருளியல் புரைத்தல் என்னும் மூவகை வாழ்த்துள் இக் காப்புச் செய்யுள் வணங்கல் எனினும் அமையும்.

சதுரன் - சதுரப்பாட்டினையுடையவன்; ஈண்டுச் சிவபெருமானை யுணர்த்திற்று. சதுரப்பாடாவது ஆக்கலாதிய கிருத்தியங்களை அம்புயனாதியர் தமது சந்நிதியி லியற்றுவிற்பத் தாம் இறைமை பூண்டு வாளா விருத்தல். அன்றி, அரிபிரமர் தேடிக் காணு

தற்கரிய அனலுருவாய் நின்றமையுமாம். சோணசயிலன் - அக்கினி வடிவா யுள்ளவன். இதனை,

"நடுக்கமுறு முனிவரெலா மமரரெலாம்
பயந்தவிர நாக மீது
படுக்கைபுரி திருமாலும் பங்கயத்தி
லுறுமயனும் பகைமை தீர
வடுக்கியிடும் புவனமெலா மடுக்கழியா
திருக்கமனத் தருள்வ தாகித்
தடுக்கரிய தழலுருவத் தொருவரையா
யிருவரையுந் தடுப்ப தானான்."

என வரும் அருணசலபுராணத்தில் திருமலைச் சருக்கத்துச் செய்யுளா னுணர்க. 'சோணசயிலற் றுதிப்பன்' என்புழி, உயர் திணைப் பெயரி னீற்றுமெய் பொது விதிப்படி முடியாது இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சியாதலான், இயல்பாக வேண்டியது விகாரமாயிற்று. இதனை,

"பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்
வலிவரின் இயல்பாம்."

என்பதனானும்,

"இயல்பின் விகாரமும் விகாரத் தியல்பும்
உயர்திணை யிடத்து விரிந்துந் தொக்கும்."

என்பதனானும் அறிக. சைலன் என்பது சயிலன் எனப் போலியாயிற்று. 'துதிப்பன்' என்னும் பயனிலைக்கு யான் என்னும் எழுவாய் வருவித் துரைக்கப்பட்டது. துதிப்பன் என்புழி அன் விகுதி தன்மை யொருமை வினைமுற்று. இதனை, 'அன் என்னுந் தன்மை யொருமை விகுதி தொன்றுதொட்ட

தன்றி இலக்கியங் கண்டமையின் 'எதிரது போற்றல்' என்னு முத்தியால் தழீஇக் கொண்டதாதலின் அதனை வலியுறுத்திப் பின்னும் அன்னென விதந்தும்,'' எனவும், ''தன்மைக்கண்ணும் அன் விகுதி கொள்ளாதொழியின்,

''எழுத்தசைசீர், பந்த மடிதொடை பாவினங் கூறுவன்''

என்றற்றொடக்கத்தன அமையா'' எனவும் சங்கர நமச்சிவாயப் புலவர் கூறிய நன்னூல் விருத்தியுரையானு முணர்க.

'மதுரமொழி யன்பர்' என்பதற்கு, இனிய பாடல்களாற் றுதிக்கும் அடியவர்கள் எனினும் அமையும். அப்பொருட்கு மொழி கருவியாகுபெயராய்ச் செய்யுளின் மேலது. மனம் ஓரிடத்து நில்லாது பல விடங்களினும் வேகமாகக் குதிரைபோற் செல்லுத லியல் பென்பார், 'மனமாங் குதிரை' என்றார். இனி, ஐம்புல வீதி களினும் மறிபடாது தாவிப் பாய்தலால் மனத்தைக் குதிரை யென்றாரெனினும் அமையும். இந்நூலாசிரியரும்,

(இஷ்டலிங்க நெடுங்கழி நெடில்-ங)

''மனமெனும் வயமா வென்வயப் படாமன்
மயங்குறு மைம்புல வீதி,
மறிபடா தோடு கின்றது முறையோ''

எனப் பிறாண்டும் கூறினர்.

அக் குதிரைகளைத் திறை கொள்வது யானை திறைகொண்டவனை யன்றி ஏனையோர்க்கு அரிது என்பார், 'மனமாங் குதிரை திறை கொண்டவனென் றேத்தும் குரைகழற்கால் யானை திறை கொண்டவன்' என்றார். இது சிஷ்ட பரிபாலனமும் துஷ்ட நிக்கிரகமும் உடையனெனப் பொருள்பட்டு முரண் தொடையாய் நின்றது. (முரண் - பொருள்முரண்). திறை - இறைப்பொருள்

(கப்பம்). குரைகழல் - வினைத் தொகைநிலைத்தொடர். கழல் - வீரத்தின்பொருட்டுத் தரிப்பதோ ரணி. யானைதிறை கொண்ட விநாயகனை யுளத்தே கொண்டு சோணசயிலனைத் துதிப்பேன்; எனவே, யாதொரு இடையூறின்றிச் சோணசயிலனைப்பற்றிய மாலை இனிது முடியும் என்பதாம். இனி, விநாயகக் கடவுள் தம்மை வழிபடுவோர்க்கும் வழிபடார்க்கும் முறையே விக்கினங்களை நீக்குதற்கும் ஆக்குதற்கும் வல்லராகலின், விக்கின நிவிர்த்தியின் பொருட்டு அவரைத் தியானித்துத் துதிப்பேன் என்றபடியுமாம். உளத்தே என்புழி ஏகாரம் அசை. கொண்டு என்பது தியானித்தல் மேற்று. ஒவ்வொரு செய்யுளினும் வருவிப்பனவெல்லாம் இசையெச்சமெனக் கொள்க.

## யானைதிறை கொண்ட சரிதம்:—

வடதேசத்தினின்றும் வந்து திருவண்ணாமலையில் வசித்திருந்த முகிலன் என்னும் அரசன் சிவனடியார்களுக்கும் நகரத்தவர்களுக்கும் இடையூறு விளைத்தலைக் கேள்வியுற்ற குகை நமச்சிவாய தேசிகர்,

> "சூலங் காத்திருக்கச் சோதிமழு வாளிருக்க
> வாலமுண்ட காலத் தருளிருக்க—மேலே
> யெரித்த விழியிருக்க விந்நாட் சோணேசர்
> தரித்ததென்ன காரணமோ தாம்."

என்று துதித்தலும், சிவாஞ்ஞையால் விநாயகக்கடவுள் அன்றிரவிலே அம் முகிலனைப் பெரும் பயமுறுத்த, அவன் அஞ்சிச் சில யானைகளைத் திறையாகக் கொணர்ந்து விடுத்து, வழிபட்டமையால் யானை திறைகொண்ட விநாயகர் எனத் திருநாமம் பெற்றனர் என்பது. இதனை, குகை நமச்சிவாய தேசிகர் சரித்திரத்தா லுணர்க.

# நூல்

## எழுசீர்க் கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

1. அண்ணன்மா புகழ்மூ வரும்புனை யரும்பா
வன்றியென் கவியுநின் றனக்காம்
பண்ணுலா மிருவ ரிசைகொணின் செவியிற்
பாணிமா னொலியுமேற் றிலையோ
விண்ணுலா முடியின் மேருவின் வடபால்
வெயிலொரு புடையுற வொருபாற்
றண்ணிலா வெறிப்ப வளர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) வடபால் - வடக்கின்கணுள்ள, விண் உலாம் - ஆகாயத்தை யளாவிய, முடியின் - சிகரங்களை யுடைய, மேருவின்- மேருவைப்போல, ஒருபுடை - ஒருபால், வெயில் உற - (சூரியன்) தன் கிரணத்தை வீசவும், ஒருபால் - மற்றொருபால், தண் நிலா எறிப்ப-(சந்திரன்) தன் தண்ணிய சந்திரிகையை வீசவும், வளர்ந்தெழும் - (அரிபிரமர் பொருட்டுத் தென்பால் மேருவோ என்னும்படி உன்னதமாய்) வளர்ந்தோங்கிய, சோணசைலனே கைலை நாயகனே - சோணசைல வடிவரே! கைலைமலைக்கு நாயகரே!, அண்ணல் - பெருமை வாய்ந்த, மா புகழ் - மிக்க புகழையுடைய, மூவரும்-திருஞான சம்பந்தமூர்த்தி நாயனார், திருநாவுக்கரசு நாயனார், சுந்தரமூர்த்தி நாயனாராகிய சமய குரவர்கள் மூவரும், புனை அரு பா அன்றி - (நமக்கு) அணிந்த அரிய திருப்பாடல்களை யன்றி, என் கவியும் - எனது புன் கவியும், நின் றனக்கு-நமக்கு, ஆம் - அங்கீகாரமாகும்; (யாதினாலெனில்), இருவர் - இருவர்களுடைய, பண் உலாம் - பண்ணமைந்த, இசை கொள் - இசையை யேற்கும், நின் செவியில் - உமது திருச்செவியில், பாணி மான்

ஒலியும் - (நுமது) திருக்காதமைந்த மாணினது கந்தலையும், மற நிலையோ - அங்கீகரித்திலீரோ? (இவ்வேறுவிருேல்); (எ-று.)

(வி-ரை) கந்தருவ ரிசையினுக்கும் விலங்கி னுெலியினுக்கும் எத்துணை உயர்வு தாழ்வு உண்டோ அத்துணை உயர்வு தாழ்வு மூவர் மொழிக்கும் தம் மொழிக்கும் உண்டேனும், மாெனுலியும் ஏற்றமையால் தம் மொழியும் அங்கீகரிப்பர் என்பது கருத்து. 'மூவர்'என்றது திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர், திருநாவுக்கரசு நாயனுர், சுந்தாமூர்த்தி நாயனுராகிய சமயகுரவர்களே. சிவபெருமான் மூவர் அரும்பாவில் விருப்புடையர் என்பதை,

(தாயுமானவர், கல்லாலின், கஉ)

"மூவர்சொலுந் தமிழ் கேட்குந்திருச்செவி"

என்பதனு லறிக.

'மூவரும் புனே யரும்பா' எனவே என் கவி புன்பா எனப் போதரும்: போதரவே, அவையடக்கமும் கூறலாயிற்று. இவ்வாறே பிற ஆசிரியரும் நூன்முகத்தே குறிப்பாக அவையடக்கம் கூறுதலை,

"திருவா ரணங்கு மணமகன் பூசித்த செல்வர்வெள்ளைக்
கருவா ரணங்குமி றும்பண்ணே சூழ்மறைக் காடரிசை
மருவா ரணங்கு திரையாரைப் பாடுமேன் வாய்க்கவிதைக்
கிருவா ரணங்குசெய் பூண்முலைப் பாமயி லென்றனேயே."

என வரும் செய்யுளில், 'என்வாய்க் கவிதை' எனவும் 'மென்வாய்க் கவிதை' எனவும் பொருள்பட்டு நிற்றலை அறிக. 'என் கவியும்' என்புழி உம்மை இறந்தது தழீஇயதோடு இழிவு சிறப்புமாம். 'இருவர்' என்றது இரு கந்தருவரை. அவராவார் கம்பள அசுவதரர். இதனை,

(புள்ளிருக்கு வேளூர்க் கலம்பகம்-க)

"கந்தருவரை யிருகாதிற் சேர்த்தனை"

என வரும் செய்யுளானு முணர்க.

'இருவர்' தும்புரு நாரதர் என்னலும் ஒன்று. இதனை,

"தும்பைவகை மாலைசெறி வில்லமொடு
கொன்றைமலர் சூதமறு கேகமழ்தருஞ்
செம்பவள வேணிமிசை திங்கணதி சூடியருள்
செம்பொன்வட மேருவனையா
னும்பர்மணி யாழினொடு தும்புருவு நாரதனு
முருகியிசை பாடவருள்கூ
ரம்பையுட னேவிடையின் மீதொளிர நின்றதனை
யஞ்சலிசெய் தன்பொடுதொழா."

என வரும் பாரதச் செய்யுளானு முணர்க. ஆகா, ஊகூ என்
னும் கந்தருவரைக் கூறுதலு முண்டு. இதனை,

"உரகர்கந் தருவ ரிராக்கதர் சித்தர்
யோகிக ளாசைகாப் பாளர்
நிரைமணி மோலி பாதுகை வருட
நிகழுமா காவுட னாகூ
விரிபுக ழேனை வீணைவல் லவரும்
விருதெடுத் தோதியாழ் தடவ
விருவிசும் பகத்தி னினிதெழுந் தருளி
யுலவின னென்னையா ளுடையான்."

என வரும் காஞ்சிப்புராணத்தில் சனற்குமாரப்படலச் செய்யு
ளானு முணர்க. 'பாணிமான் ஒலியும்' என்பதற்குக் 'கங்கையின்
ஒலியும், மானின் ஒலியும்' எனப் பொருள் கூறுதலும் ஒன்று.
(பாணி - கங்கை). ஒலியும் என்பதில் உம்மைக்குப் பொருள் 'என்
கனியும்' என்பதிற்போல 'எற்றிலையோ' என்புழி ஓகாரம் வினாப்

பொருளாது. 'விண் உலாம் முடி' என்பதற்கு 'மேகங்கள் தவழும் முடி' எனினுமாம்; (விண்-மேகம்). உலாவும் என்பது உலாம் எனவாயது,

"செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலும்"

என்பதனால். 'விண்ணுலாம்' என்பதும் அது. ஒரு புறம் சூரிய னணுகுங்கால் மற்றொரு புறம் சந்திர னணுகலின் முறையே பக லிரவு நிகழப்பெறும் மேருபோலச் சோணசைலத்தும் ஒரு புறம் வெயில் உறவும் மற்றொரு புறம் தண்ணிலா வீசவும் உளவென்பார், 'மேருவின் வெயிலொரு புடையுற வொருபாற், றண்ணிலா வெறிப்ப வளர்ந்தெழுஞ் சோணசைலனே' என்றார். மேருவின் என்புழி இன் - ஐந்தனுருபு ஒப்புப்பொருளது. 'வடபால் மேரு' என்றதனால் சோணசைலம் தென்பால் மேரு எனப்பட்டது. இனி, 'வெயில் ஒருபுடை யுற ஒருபாற் றண்ணிலா வெறிப்ப' என்பதற்குச் 'சூரிய நேத்திரம் ஒருபால் வெயிலை வீசலும், மற்றொரு பால் சந்திர நேத்திரம் தண்ணிய சந்திரிகையை வீசலும்' எனப் பொருள் கோடலும் ஒன்று. அப்பொருட்குச் சோணம்-செம்மை; அது ஆகுபெயராய் அக்கினியை யுணர்த்தினமையால் சோண சைலமென்பதற்கு அக்கினிமலை யெனப் பொருள்பட்டு, அவ் வக்கினியே பால நேத்திர மாதலின் மற்றிரு நேத்திரமும் சூரிய சந்திர ரென்க. (பால நேத்திரம் - நெற்றிக் கண்).

'அண்ணல் மா புகழ் மூவரும்' என்பதற்குப் 'பெருமையும் மேன்மையும் புகழுமுடைய மூவர்' எனினுமாம். இம் மூவரும் தேவார மூர்த்திகளாதலான் இம் மூவர்க்கும் மூன்று அடை கொடுத்துப் புனைந்து கூறினர். இனி, இத் தொடர்க்குத் 'தெய்வத் தன்மையினை யுலகத்தாக்கிய மிக்க புகழினையுமுடைய மூவர்' எனப் பொருள் கூறலுமாம். அதனை,

"பின்னாலுங் கதிர்ச்சடிலப் பிஞ்ஞகனா ரடித்தொண்டின்
பெருக்க வீறு
பொன்னாலும் பெண்ணாலு மறிவுறுத்திவ் வுலகினிடர்
பொன்றி யாண்ட
அந்நால்வர் பதகமல மகந்தழீஇப் புகழ்ந்திறைஞ்சி
யரந்தை தீர்வாம்."

என வரும் தணிகைப் புராணத்துக் கடவுள் வாழ்த்தில் சமய குரவர் துதியா னுணர்க. 'மாப் புகழ்' எனற்பாலது,

"இடையுரி வடசொலி னியம்பிய கொளாதவும்
போலியு மரூஉம் பொருந்திய வாற்றிற்கு
இயையப் புணர்த்தல் யாவர்க்கு நெறியே."

என்பதனால், 'மா புகழ்' என்றாயது. ஆதலான், 'மிக்க புகழ்' எனப் பொருள் கூறப்பட்டது முன்னுரைக்கு என்க. நூன் முகத்து 'அண்ணல்' எனக் கூறியது மங்கல மொழியாதலான். இச் செய்யுள் முதல், மூன்று, ஐந்து, ஆறாஞ்சீர்கள் விளச்சீர்களும் மற்றவை மாச்சீர்களுமாகிய எழுசீ ராசிரிய விருத்தம். மற்றைச் செய்யுட்களையும் இங்ஙனமே சீர் வரையறுத்துக்கொள்க.

கம்பள அசுவதரர் சரிதம்:—

கம்பளன் அசுவதரன் என்னும் கந்தருவர் இருவர் சிவபெருமானைக் குறித்துப் பலநாள் தவஞ் செய்து அவர் அருளால் தோடென்னும் காதணி வடிவாகி அச் சிவபெருமானது காதுகளிற் பொருந்தி எப்பொழுதும் கையில் வீணையை வைத்துக்கொண்டு பாடுகின்றனர் என்பதாம். இதனை,

மீனாட்சியம்மை பிள்ளைத்தமிழில்

"பகரு மிசைதிசை பரவ விருவர்கள்
பயிலு மியனெறி வெள்ளைத் தோட்டினர்." எனவும்,

காசிக் கலம்பகத்தில்

"பகருமி னமிர்தென வுருகிரு கவிஞர்கள்
பனுவலின் மதுரவி சைக்குக் குழைந்தன." எனவும்,

டிை கலம்பகத்தில்

"மற்றென், குறைவிரித் தோரிரு வரிசை
கூட்டுண்ணுந் திருச்செவிக்கே கூறு வீரே."

எனவும் வருதல் காண்க.

2. துவக்கற வறிந்து பிறக்குமா ரூருந்
துயர்ந்திடா தடைந்துகாண் மன்று
மூவப்புட னிலைத்து மரிக்குமோர் பதியு
மொக்குமோ நினைக்குநின் னகரைப்
பவக்கடல் கடந்து முத்தியங் கரையிற்
படர்பவர் திகைப்பற நோக்கித்
தவக்கல நடத்த வுயர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) பவம் கடல் கடந்து-பிறப்பாகிய கடலைக் கடந்து, முத்தி அம் கரையில் - மோட்சமாகிய அழகிய கரையில், படர்பவர் - அடைய விரும்புவோர், திகைப்பு அற நோக்கி - (அங்ஙனம் கடக்குங்கால் நிகழும்) கலக்கமற நோக்கிக்கொண்டு, தவம் கலம் நடத்த-தவமாகிய மரக்கலத்தை நடத்துதற்கே, உயர்ந்து எழும் - உயர்ந்தோங்கிய, சோணசைலனே கைலைநாயகனே-சோணசைலரே! கைலைநாயகரே!, அறிந்து - (பின் சரீரம் வாராத நிலைமையளிக்கும் தகைமை) அறிந்து, துவக்கு அற - அச் சரீரம் ஒழிதற் பொருட்டு, பிறக்கும் ஆரூரும் - பிறக்க விரும்பும் திருவாரூரும்,

துயர்ந்திடாது அடைந்து - (பின்னும் பிறவித்) துயா முறுதபடி (சரீரம் ஒழிதற் பொருட்டு) அடைந்து, காண் மன்றும் - தரிசித் தற்குரிய திருச்சிற்றம்பலமும் (கனக சபையும்), உவப்புடன் நிலை த்து-(சரீரம் ஒழிதற் பொருட்டு) மகிழ்வுடன் வசித்து, மரிக்கும் ஓர் பதியும் - இறத்தற்குரியதொரு காசிப்பதியும், நினைக்கும் நின் நகரை - (நினைத்த மாத்திரையே முத்தி பாலிக்கத் தக்கதென அறிஞரால் சரீரம் ஒழிதற் பொருட்டுத்) தியானிக்கத்தக்க நமது நகரை, ஒக்குமோ - நிகர்க்குமோ? (நிகராகா); (எ-று.)

(வி - ரை) 'துவக்கற' என்பது மூவிடத்துங் கூட்டப்பட் டது. துவக்கு-தோல்; அது கருவியாகுபெயராய் உடலை யுணர்த் திற்று. ஆரூர் முதலிய தலங்களில் பிறத்தல் முதலியவற்றால் முத்தி என்பதனை,

(அருணாசல புராணம், திருநகரச் சருக்கம், சரு)
"தில்லையைக் காணக் காசியி லிறக்கச்
சிறக்குமா ரூர்தனிற் பிறக்க
வெல்லையில் பெருமை யருணையை நினைக்க
வெய்தலா முத்தி."

என வரும் செய்யுளானு முணர்க.

உடலொழிவே பந்த நிவர்த்தியாகிய முத்தியாகலின், முத்தி சித்திக்க வென்பார், 'துவக்கற' என்றார். இனி, மரண சமயத் தில் அர்த்த தார புத்திர ஈஷணாதிகள் நீங்கவேண்டு மென்பார், 'துவக்கற' என்றா ரெனினு மமையும். அச் சமயத்தில் நினைப்பவை யுடன் எய்து மென்பது தோன்ற 'அறிந்து பிறக்கும்' என்றார். இதனை,

(வைராக்கிய சதகம் - உ௦)
"ஆமு னிச்சையே மேலுமே லும்பிறப்
பளிக்கும்வித் தெனநெஞ்சே" எனவும்,

(திருக்குறள் - ௩௬௧)

"அவாவென்ப வெல்லா வுயிர்க்கு மெஞ்ஞான்றுந்
தவாஅப் பிறப்பீனும் வித்து."

எனவும் வருவனவற்றாற் காண்க.

பிறக்க விரும்புதலைப் 'பிறக்கும்' என வுபசரித்தார். பிறத்தல் முதலியவை இயல்பாகக் கிடைப்பினல்லது முயலினும் கிடைப்ப தரிதாக, இருந்தவிடத்தி லிருந்தே நினைத்தல், யாவர்க்கும் எளிது முடிவதாதல் பற்றி, 'ஆரூரும், மன்றும், மரிக்குமோர் பதியும் ஒக்குமோ நினைக்குநின் னகரை' என்றார். 'ஒக்குமோ' வென்பதில் ஓகாரம் எதிர்மறை. 'நின் நகர்' என்றது அருணையை. இக் கருத்துப் பற்றியே,

"ஆரூர்ப் பிறத்த னேர்படி னல்லது
செயற்கையி னெய்து மியற்கைய தன்றே
அதாஅன்று
காசியி னிறத்த லேனக்கித் தேசம்விட்
டறந்தலைத் தந்த வரும்பொரு டாங்கிப்
பிறன்பொருள் கொள்ளாப் பேரறம் பூண்டு
கழிபெருங் கான நீங்கி வழியிடைத்
தீப்பசிக் கிரங்கி நோய்ப்பிணிக் கொதுங்கிப்
பல்பிணிக் குடைந்து செல்லுங் காலத்
திடைச்சுரத் திறவா தின்னுயிர் தாங்கிக்
கிடைத்தன னாயி னடுத்தநல் லொழுக்கமோ
டுடல்விடு காறுமத் தடநகர் வைகி
முடிவது கடைபோக முடிவதோ வரிதே."

எனக் கூறியுள்ளார் குமரகுருபர சுவாமிகளும் சிதம்பர மும்மணிக்கோவையினுள். காம வெகுளி மயக்க மென்னும் முக் குற்றங்களைக் கடிந்து தரிசிக்கவேண்டு மென்பது தோன்றத் 'தூயர்

ந்திடா தடைந்துகாண் மன்று' என்றார். காண்-முதனிலைத் தொழிற்பெயர். ஒன்றற்கொன்று காரண காரியத் தொடர்ச்சியாய்க் கரையின்றி வருதலின் பிறவியைப் 'பவக்கடல்' என்றார். இதனை,

> "பிறவிப் பெருங்கட னீந்துவர் நீந்தா
> ரிறைவ னடிசேரா தார்."

என்னுந் திருக்குறளில் 'பிறவிப் பெருங்கடல்' என்பதற்குப் பரிமேலழகர் கூறிய உரை விசேடத்தானு முணர்க. கடலிற் கப்பலோட்டுவோர் திசைப்பற அதனைச் செலுத்தற்குக் கரையில் ஓர் குறிப்பினைக் குறித்துச் செல்லுமாறு, இதனை இலக்காகக் கொண்டு தவக்கலம் நடத்தாநிற்பர் என்பது கருத்து. பிறவியாகிய கடலின்கண் தவமாகிய மரக்கலங் கொண்டு முத்தியங் கரையிற் செல்வார்க்கு மாயை யென்னும் அந்தகாரத்தாற் றிசை தப்பாது நினைத்தவா றடைவதற்கு இத் தரிசனம் காரணம் என்பது தோன்ற, 'திசைப்பற நோக்கித் தவக்கல நடத்த வுயர்ந்தெழுஞ் சோணசைலனே' என்றார். நின்னருணைப் பதியானது, பிறத்தல் முதலிய மூவகைப் பிரயாசையு மின்றி நின்றுழி யொருகாற் சிந்தித்தளவில் எளிதின் முத்தியைத் தருமென்க. முத்தியங்கரை என்புழி, அம் - சாரியையுமாம்.

3. நீங்கருந் துயர்செய் வளிமுதன் மூன்ற
   னிலையுளே னவைதூரந் திடுமுன்
வாங்கிநின் றனிவீட் டுறைகுவான் விரும்பி
   வந்தன னின்குறிப் பறியே
னுங்குறை மதியே தாங்கியென் றலக
   மறைகுறை யறநிறை மதியுந்
தாங்கிய முடியோ டோங்கிய சோண
   சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) குறை ஆம் மதியே-குறைந்த பிறை மதியையே, தாங்கி என்று - சூடினவரென்று, உலகம் அறை குறை அற - உலகத்தோர் கூறுகின்ற குறைவு நீங்க, நிறைமதியும்-பூரணசந்திரனையும், தாங்கிய முடியோடு - தரித்த திருமுடியுடனே, ஓங்கிய சோணசைலனே கைலைநாயகனே-ஓங்கி விளங்கிய சோணசைலரே! கைலைநாயகரே!, நீங்கு அரு - நீங்குதற்கரிய, துயர் செய் - துயரைச் செய்கின்ற, வளிமுதல் மூன்றன் நிலை உளேன் - வாத பித்த சிலேஷ்மங்களாகிய மூன்றனது இடமாகிய சரீரத்திலிருக்கும் யான், அவை தூரந்திடுமுன்-அம் மூன்றும் என்னைத் தூரத்துதற்கு முன்னரே, நின் தனி வீடு வாங்கி - (முத்தி யெனப்படும்) உம்முடைய தனி வீட்டைச் சுதந்திரமாகப் பெற்று, உறைகுவான்-(அதில்) நிலைபெறுக வசிக்கும்பொருட்டு, விரும்பி வந்தனன் - விருப்பமுற்று அடைந்தேன்; நின் குறிப்பு அறியேன் - நுமது திருவுள்ளம் எங்ஙனமோ? உணரேன்; (எ-று).

(வி - ரை) உயிரானது, வாத பித்த சிலேத்துமமென்னும் நோய்களானவை இருக்க அமைந்த ஞான்று இருந்தும்; அவை வெகுண்ட ஞான்று போயும், ஒருடம்பினும் நிலைபெறாது வரும் என்பார், 'நீங்கருந் துயர்செய் வளிமுதன் மூன்ற னிலையுளேன்' என்றார். உயிர் உடலில் ஒதுக்கிருப்ப தென்பதனை,

(திருக்குறள் - கூ௪௰)

"புக்கி லமைந்தின்று கொல்லோ வுடம்பினுட்
டுச்சி லிருந்த வுயிர்க்கு."

என்பதனானும் அறிக.

நீங்கு - முதனிலைத் தொழிற்பெயர். அருமை - இன்மைப் பொருளது. நிலையுளேன் - வினைப்பெயர். வாத பித்த சிலேத்துமமென்னும் நோய்களுக்குரிய உடலில் ஒதுக்கிருக்கும் தான் அம்

மூன்றும் மூளுதற்கு முன்னரே நிலைபேறுடைய வீட்டைப் பெற அவாவெய்தி யடைந்தமை அறிவித்தபடி. இனி, இவ் யாக்கை நீர்மேற் குமிழிபோன்று நிலையில்லாததாகலின் அரிதிற் பெற்ற இம் மானுட தேகம் நீங்குதற்கு முன்னர் ஒப்பற்ற மோட்சவீட்டைப் பெறவேண்டு மென்பதாம். 'அவை தூரந்திடுமுன் வாங்கி' என்பதற்கு 'அம் மூன்றும் என்னைத் தூரத்துதற்கு முன்னரே அவற்றினின்றும் நீங்கி' எனப் பொருள் கோடலும் ஒன்று. 'தூரந்திடு' என்பது 'விண்டு' என்பதுபோலச் செய்வதன் றொழிற்கும் செய்விப்பதன் றொழிற்கும் பொது. தனிவீடு - ஒப்பில்லாத வீடு. உறைகுவான் - வானீற்று வினையெச்சம்.

குறிப்பு-எண்ணம். குறை ஆம் மதியே தாங்கி - குறையாகிய மதியையே தரித்துக்கொண்ட சிவபெருமான். இதனை,

(திருக்கோவையார்-25)

"கலைச்சிறு திங்கள் மிலைந்தசிற் றம்பல வன்கயிலை
மலைச்சிறு மான்விழி யாலழி வுற்று மயங்கினரே."

என வரும் திருக்கோவையாரானு முணர்க.

'மதி தாங்கி' என்பது 'ஆத்திசூடி,' 'மானேந்தி' என்பன போலப் பெயர். இவை வினையடியாக நிற்றலான் தொழிலடியாகப் பிறந்த பெயர் எனக் கூறுதல் மரபே யன்றி வினைக்குறிப்புப்பெயர் எனக் கூறுதல் மரபன் றென்க. 'நிறைமதியும் தாங்கிட முடியோடோங்கிய சோணசைலன்' என்றது பௌர்ணிமைக் காலவருணனை என்றபடி. 'நிறைமதியும்' என்புழி உம்மை இறந்தது தழீஇயது.

சிவபெருமான் குறைமதி தாங்கின வரலாறு:—

தக்கனுடைய புத்திரிகளாகிய அசுவினி முதலிய இருபத்தேழு பெண்களையும் மணம் புரிந்துகொண்ட சந்திரன் அவர்களில்

உரோகணியினிடத்து மாத்திரம் மிக்க காதல் கொண்டு அவளு-டனே எப்போதும் கூடிக் களித்திருக்க, இச் செய்தியைத் தன் புதல்வியரால் உணர்ந்த தக்கன் சந்திரனை நோக்கி, "உன் கலைகள் குறைக!" எனச் சபிக்க, அச் சாபத்தால் சந்திரன் பதினைந்து கலைகளும் குறைந்தபோது, 'மற்றோர் கலையையும் இழக்கவரும்' எனப் பயந்து சிவபெருமானைச் சரண மடைந்தான். அப் பெருமான் இரங்கி ஒற்றைக் கலையோடும் கூடிய சந்திரனைத் தமது சடையி லணிந்து மீண்டும் கலைகள் வளரும்படி அநுக்கிரகித்தனர் என்பது.

4. கனிமலை துவர்வாய்க் கோதையர்க் குருகுங்
கன்மனக் கொடியனுக் கென்னீ
துனிமலை பிறவி தவிர்த்தனை யெனநிற்
சுளிபவ ரிலையெனக் கிரங்காய்
பனிமலை கதிர்வந் துறநிலை யாடி
பயின்றபீ டிகையென வுதயத்
தனிமலை யிருப்ப வளர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) பனி மலை கதிர் - பனியைப் போக்காநின்ற சூரியன், தனி உதயம் மலை வந்து உற - ஒப்பற்ற உதயகிரியிற் றோன்றுங்கால், நிலை ஆடி பயின்ற பீடிகை என - (அம் மலை) நிலைக் கண்ணாடி அமைத்துவைத்த பீடம்போல, இருப்ப - (கீழ்த்திசையில்) எதிர் நிற்க, வளர்ந்து எழும் சோணசைலனே கைலைநாயகனே - (இறைமை பூண்டு) ஓங்கி விளங்கும் சோண சைலரே! கைலைநாயகரே!, கனி மலை துவர் வாய் கோதையர்க்கு-கொவ்வைக் கனியையும் கீழ்ப்படுத்தும் சிவந்த வாயினையுடைய மங்கையர் பொருட்டு, உருகும் கல் மனம் கொடியனுக்கு - வருந்திநிற்கும் (நின்பால்) கல் போலும் மனத்தையுடைய கொடியவனுக்கு, துனி

மலை - துன்பத்தைக் கொண்ட, பிறவி-பிறப்பை, என் நீ தவிர்த்திலை என - 'யாது காரணத்தால் நீர் நீக்கியருளினீர்?' என்று, நின் கனிபவர் இலை - உம்மைக் கோபிப்பவர் (இவ் வுலகின்கண் ஒருவரும்) இல்லை; (ஆகையால்) எனக்கு இரங்காய் - அடியேனுக்கு அருள்புரிவீராக; (எ-று.)

(வி - ரை) கனி மலை துவர்வாய் - கொவ்வைக் கனியைப் பொரும் செவ்வாய். மலைதல் - சண்டைப்பொருதலும் இயைதலும். கனி - வீழிக் கனியுமாம். இது,

"ஆமே பவளமாக் காம்பன் முருக்கிலவம்
பூமெல் விதழ்வீழிப் பொற்கனியாந்—தாமமணிக்
குல்லையருந் தொண்டை கொடித்தூ துளைகோப
முல்லை முருந்தெயிறு முத்து."

என வரும் இரத்தினச்சுருக்கச் செய்யுளில் விளங்கும். இனி, 'கனிமலை துவர்வாய்' என்பதற்குக் 'கொவ்வைக் கனியையும் பவளத்தையும் ஒத்த வாய்' எனலும் ஒன்று. (துவர்-பவளம்.) அன்றிக் 'கொவ்வைக் கனியை மலைந்து பவளத்தை யொக்கும் வாய்' என்றலும் ஒன்று. இப் பொருட்கு, மலை என்னும் பகுதி வினையெச்சப் பொருளதாய் 'வரிப்புனை பந்து' என்பதுபோலக் கனிமலைத் துவர் வாய் என ஒற்று மிகாது எதுகை நோக்கி இயல்பாயிற்று. மங்கையர் மயலின் மயங்குவார்க்கு வீடுபேறு இன்றென்பதும், சிவபெருமான் ஒருவரே ஒப்புயர்வில்லாத முதற்கடவுளாகையால் அவர் திருவுளம் பெறில் அம் மயலைக் கடத்தல் எளிதென்பதும்,

(தாயுமானவர் பாடல், சுகவாரி, 3)

"வல்லான் வகுத்ததே வாய்க்கால்"

என்பது பெருவழக்காதலால் அவர் அருளின் அதை மாற்றவல்லுநரின்றென்பதும் குறிப்பித்தபடி. காமத்திற் படில் கடு நிரயத்

திருவது வேதநூற் றுணிபாதலானும், சிவபெருமா னொருவரே முதற்கடவுளாதலான் அங்ஙன மியற்றுவ அவர் அருள் புரியின் அதனை மாற்றி அவரைக் கோபிப்பா ரின்மையானும், 'கோதையர்க் குருகுங் கண்மனக் கொடியனுக் கென்னே, தனிமலை பிறவி தவிர்த்தனை யெனநிற் சுளிபவரிலை' எனக் கூறினார் எனினும் அமையும். தனிமலை பிறவி-துன்பத்தைக் கொண்ட பிறவி; மலை போலத் துன்ப மிக்க பிறவி என்றலும் ஒன்று. அப் பொருட்கு ஏதுவை நோக்கி வலி யியல்பாயிற்று. 'இரங்காய்' என்பது விதி வினைக்கும் மறைவினைக்கும் பொதுவினை யாயினும் ஈண்டு விதி வினை மேற்று. பனிமலை கதிர் - பனியைக் கெடுக்குஞ் சூரியன். சூரியன் நிலைக்கண்ணாடிக்கும், உதயகிரி அது நிறுவிய பீடத்திற்கும் ஒப்பு. இறைவராவார் தம் அழகு நோக்கி உவக்கும்படி அவர்க் கெதிரே நிலையாடி நிறுவல் இயல்பாகலால் இங்ஙனம் உருவகித்தார். எனவே, இச் சோணசைலப் பிரானது எதிர் நிறுவிய நிலைக் கண்ணாடிப்பீடம் போல்கின்றது சூரிய னுறுங்கால் உதயகிரி என்றவாறு. உதயத் தனிமலை - ஒப்பில்லாத உதயகிரி (தனி - ஒப்பின்மை). ஒப்புயர்வில்லாத காருண்ணிய மூர்த்தியாதலான் இழிவிற் சிறந்த அடியேனுக்கும் பிறவி யொழிக்கவேண்டு மென்பது கருத்து.

5. சுடரிலை நெடுவேற் கருங்கணார்க் குருகித்
துயர்ந்துநின் றலமரு மனநின்
னடனவில் சரண பங்கய நினைந்து
நைந்துநைந் துருகுநா ளுளதோ
மடலவிழ் மரைமாட் டெகினென வருகு
மதியுறக் கார்த்திகை விளக்குக்
கூடமுடி யிலங்க வளர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலை நாயகனே.

(ப - ரை) மடல் அவிழ் - இதழ் விரிந்த, மரைமாட்டு - செந்தாமரை மலரினருகே, எகின் என-அன்னந் தங்கி நின்றாற்போல, கார்த்திகை விளக்கு அருகு - கார்த்திகைத் தீபமானது தனது அருகே, மதி உற - சந்திர னிருக்கும்படி, தட முடி இலங்க - விசாலித்த திருமுடியிலே விளங்கும்வண்ணம், வளர்ந்தெழும் சோணசைலனே கைலை நாயகனே - வளர்ந்தோங்கிய சோண சைலரே!, கைலைநாயகரே!, சுடர் இலை நெடு வேல்-காந்தி பெற்ற இலை வடிவமைந்த நீண்ட வேல் போன்ற, கரு கணார்க்கு உருகி- கருங் கண்களை வாய்ந்த மகளிர்கள் மயலால் உருகி, துயர்ந்து நின்று அலமரும் மனம் - துயரடைந்திருந்து சுழலாநின்ற என் மனமானது, நடம் நவில் - நடனஞ் செய்யாநின்ற, நின் பங்கய சரணம் - நுமது செந்தாமரை மலர்போன்ற திருவடிகளை, நினைந்து - (பலகால்) நினைந்து, நைந்து நைந்து உருகும் - மிகக் குழைந்து உருகுகின்ற, நாள் உளதோ - காலமும் உளதோ? (அருள்வீராக); (எ - று.)

(வி-ரை) ஆடவர் உயிரைக் கவர்கின்றமையால், 'சுடரிலை நெடுவேற் கருங்கண்' என்றார். 'சுடர்இலை நெடுவேல்' என்பதற்கு 'எரிகின்ற இலைத் தொழிலையுடைய நெடிய வேல்,' எனத் திருமுருகாற்றுப்படையில் நச்சினார்க்கினியர் கூறிய வுரையா னுணர்க. இலை - வெற்றிலையுமாம். (இலைத்தொழில் - தகட்டு வடிவின் தொழில்.) கருங்கணார்க்கு -கருங்கண்கள் வாய்ந்த மக ளிர்களால்; மூன்றனுருபு நிற்கவேண்டிய விடத்து நான்கனுருபு நின்றமையால் வேற்றுமை மயக்கம். கருங் கண் - மை தீட்டிய கண்; கொடிய கண்ணுமாம். (கருமை+கண்) அலமரும் என்புழி, அலமர - பகுதி. அலமரல் - சுழலல். நவிலல் - செய்தல்; இது.

"இடம ருங்குதனி நாயகி காண
வேழ்பெ ரும்புவன முய்ய வெடுத்து

நடந வின்றருள் சிலம்பொலி போற்று
நான்ம றைப்பதியை நாளும் வணங்க."

என வரும் பெரியபுராணச் செய்யுளுள் இனிது விளங்கும். சரணபங்கயம்-உருவகம். நைந்து நைந்து - மிகுதிக்கண்ணதாகிய அடுக்கு. 'உளதோ' என்புழி ஓகாரம் இரக்கப்பொருள்பட வினுவின்க ணிற்பதோ ரிடைச்சொல். இங்ஙனம் வருமிடந்தோறும் கொள்க. கார்த்திகை விளக்கு மதியுற மரைமாட்டு எகின் எனத் தடமுடி யிலங்க வளர்ந்தெழும் சோணசைலனே என முடிக்க. (விளக்கு இலங்க என்க.) கார்த்திகைத் தீபம் செந்நிறம் வாய்ந்து மேலோங்கியும், பிறை வெண்ணிறம் வாய்ந்து கூனியு மிருத்தலால் தாமரை மலரும் அன்னமும்போல உருவகித்தனர். மதி - ஈண்டுப் பிறை மேற்று. இனி, கார்த்திகை விளக்கு அருகு-கார்த்திகைத் தீபத்தினது சமீபத்தில், மதி உற-சந்திரன் பொருந்த, தடமுடி-பெரிய முடியானது, மடல் அவிழ் மரைமாட்டு எகின் என-இதழ்கள் விரிந்த தாமரை மலரிடத்துள்ள அன்னம்போல, இலங்க வளர்ந்து எழும் சோணசைலனே - விளங்க வளர்ந்தெழுகின்ற சோணசைலரே!, எனலும் ஒன்று. இப் பொருட்கு மதி - பூரண சந்திரன். இதழ் விரிந்த தாமரை மலரிடத்து அன்னம் இருந்தாற்போலச் சமீபத்தில் முழுமதி பொருந்தியிருக்க வுயர்ந்த முடியின்கண் கார்த்திகைத் தீபமானது பிரகாசிக்க வளர்ந்தோங்கிய சோணசைலரே என்பதுமாம். இதுவும் பௌர்ணிமை கால வருணனை கூறிற்று. துன்பத்திற்குரிய சிற்றின்பத்தை மறந்து பேரின்பத்திற்குரிய திருவடியை யிடைவிடாது சிந்திக்க வேண்டு மென்பது.

6\. அருங்கவி வாத வூரனே முதலோ
ரன்பிலே மென்றது வேண்டி
யிரங்குதல் பொய்ம்மை யன்பிலே னையா
னியம்பலே மெய்யெனக் கருளாய்

கருங்கட முமிழு மீர்ங்கவுட் பனைக்கைக்
    கரியுரி கஞ்சுகங் கடுப்பத்
தரங்கமுண் டெழுகார் முகில்பயில் சோண
    சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) கரு கடம் உமிழும் - கரிய மதசலம் பொழிகின்ற, ஈர் கவுள் பனை கை - குளிர்ந்த கன்னங்களையும் பனை போலும் துதிக்கையையுமுடைய, கரி உரி கஞ்சுகம் கடுப்ப-யானையினது தோலாகிய சட்டையை (மலையுருக் கொண்ட இப்பொழுதும் அணிந்திருந்தல்) நிகர்ப்ப, தரங்கம் உண்டு - அலைகளையுடைய சமுத்திர நீரைப் பருகி, எழு கார் முகில் - எழுகின்ற கரிய மேகங்கள், பயில் சோணசைலனே கைலை நாயகனே-படிகின்ற சோணசைலரே! கைலைநாயகரே!, அரு கவி வாதவூரன் முதலோர் - (திருவாசகம் திருக்கோவையா ரென்னும்) அரிய திருப்பாடல்களை யருளிய திருவாதவூரி லவதரித்த மாணிக்க வாசக சுவாமிக ளாதியோர், அன்பு இலெம் என்று - (நம்மிடத்து அன்புடையரா யிருந்தும்) அன்பையுடையோ மல்லோமென்று, அது வேண்டி-அவ் வன்பைப்பெற விரும்பி, இரங்குதல் பொய்ம்மை - வருந்துதல் உண்மையன்று; அன்பு இலேன் என - அன்புடையே னல்லே னென்று, யான் இயம்பலே மெய் - யான் விண்ணப்பஞ் செய்தலே உண்மை; எனக்கு அருளாய் - (ஆகையால்) எனக்கு அவ் வன்பை அருள்புரிவீராக; (எ - று.)

(வி-ரை) சிவபெருமானே அந்தணவுருவங் கொண்டு அனுகியெழுதுதற் குரிய பொருளமைதி யுடையனவாய் ஓதுவார்க்கும் கேட்பார்க்கும் ஒருங்கு சிவபத மளிக்கும் தகுதியன வாகலின், 'அருங்கவி' என்றார். வாதவூரன் என்றது மாணிக்கவாசக சுவாமிகளை; அவர் திருவாதவூரின்கண் அவதரித்தமையால் அப் பெயர் இவர்க்கு இடப்பட்டது. 'வாதவூரனே' என்புழி ஏகாரம் சிறப்

பின்கண் வந்தது, 'புதியன புகுதலும் வழுவல' என்பதனால். பெறாத பேறெல்லாம் பெற்றிருப்பினும் தம்மை இழித்துக் கொள்ளுதல் சன்மார்க்க ரியல்பு; அவ்வாறு வாதவூரடிகளாதி யோர் தம்மை இழித்து மொழிந்ததல்லது உள்ளபடி பத்தியில் லாதவரல்லர்; யான் உள்ளபடி யில்லாதவனே யாகையால், எனக்கு அருளல்வேண்டு மென்பது கருத்து. இதனை,

(நால்வர் நான்மணிமாலை: 20 - 28)

"வேண்டுநின் னடியார் மெய்யன் பெனக்கு
மருளிச்செய் சிவனே யலந்தே னந்தோ
முறையோ முறையோ விறையோ னென்
றழுது செம்பொ னம்பலக் கூத்த
னருளாற் பெற்ற வன்பினி லொருசிறி
துடைய னேற்கு மருளல் வேண்டும்
பேதை கோட னின்னருட் பெருக்கிற்
கேற்ற தன்று." எனவும்,

'பகிர்மதி தவழும் பவளவார் சடையோன்
பேரருள் பெற்றும் பெறாரி னழுங்கி
நெஞ்சநெக் குருகி நிற்பை நீயே
பேயேன் பெறாது பெற்றார் போலக்
களிகூர்ந் துள்ளக் கவலைதீர்ந் தேனே." எனவும்,

இவ் வாசிரியர் இரண்டிடம் கூறியவற்றா னுணர்க.

இனி, அன்பிற்கே யன்றி யிரங்காத அவர்கள் திருவுள்ளம் அந் நால்வருஞ் சிந்தித்தபடி நரியைப் பரியாக்கியும், அங்கத்தை மங்கையாக்கியும், சிலையைப் புணையாக்கியும், முதலைவாய் மதலையைத் தந்தும், மற்றும் வேண்டியாங்கு அருளின் அவர்கள் அன்பிலே மென்றது உபசாரம், யான் அவ்வாறு இரங்காமையின்

அன்பிலே லென்றது உண்மை யாதலான் எனக்கு அருளல் வேண்டுமென்பது கருத்து எனக் கூறுதலு மொன்று.

இரங்குதல் - வருந்துதல். 'யானியம்பலே' என்புழி ஏகாரம் பிரிநிலைக்கண் வந்த தேற்றம்; அடியார் குழுவினின்றும் பிரித்தமையோடு தெளிந்தமையால். முகில் கஞ்சுகங் கடுப்பப் பயில் என இயையும். கஞ்சுகம் - சட்டை. தாங்கம் - இருமடி யாகு பெயர்; அலையின் பெயர் முந்திக் கடலை யுணர்த்திப் பின்றி அதன் நீரை யுணர்த்தினமையால்.

7. புரத்துறு மவுணக் குழாமும்வண் டிசைகூர்
பூங்கணை மதனுமுன் பெறுநின்
சிரித்தலின் னகையு முதல்விழி நோக்குஞ்
சிறியனே னிருண்மலம் பெறுமோ
கருத்தினுங் கருத வரியநுண் ணியனென்
கடனற வுலகெலாங் காண்பான்
றரித்ததி தூல வடிவுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) கருத்தினும் - கருத்தாலும், கருத அரிய-கருதற் கரிய, நுண்ணியன் என் - சிற்றுருவன் என்று கூறும், கடன் அற - முறைமை நீங்கும்படி, உலகு எலாம் காண்பான் - உலக முற்றும் எளிமையிற் கண்டு தரிசிக்கும்வண்ணம், அதி தூலம் வடிவு - மிகப் பருத்த திருவுருவை, தரித்து உறும் - கொண்டு விளங்குகின்ற, சோணசைலனே கைலை நாயகனே-சோணசைல ரே! கைலைநாயகரே!, புரத்து உறும்-திரிபுரவாசிகளான, அவுணர் குழாமும் - அவுணர்கள் கூட்டமும், வண்டு இசை கூர் - வண்டுக ளிசை பாடுகின்ற, பூ கணை மதனும் - புட்ப பாணங்களையுடைய மன்மதனும், முன் பெறும் - முன்னே (நும்மிடமாகப்) பெற்ற,

நின் சிரித்த வெள் நகையும்-நின்று நகைத்த வெண் நகையையும், நுதல் விழி நோக்கும்-நெற்றிக்கண் பார்வையையும், சிறியனேன் இருள் மலம் பெறுமோ - சிறியேனது இருள் மயமான ஆணவ மலம் பெறுமா? (பெற விரும்புகின்றனன்.); (எ-று.)

(வி-ரை) புரம்-திரிபுரம்; முன் மொழி கெட்ட பின் மொழி நிலையல். அவுணர்+குழாம்='அவுணக் குழாம்' என்றாயது,

"சிலவிகாரமா முயர்திணை."

என்றதனால். 'அவுணக் குழாமும் பூங்கணை மதனும் பெறுநின் சிரித்த வெண்ணகையும் நுதல்விழி நோக்கும்' என்பது நிரனிறைப் பொருள்கோ ளாதலால் 'அவுணக் குழாம் பெறுநின் சிரித்த வெண்ணகையும்' 'பூங்கணை மதன் பெறுநின் நுதல்விழி நோக்கும்,' என இயைத்துப் பொருள் கொள்க. திரிபுரங்களைப் புன் முறுவலாலும், பூங்கணை மதனை நெற்றிக் கண்ணினாலும் அழித்ததுபோலச் சிறியனேனது ஆணவமலத்தையும் அழிக்க வேண்டு மென்பார், "அவுணக் குழாமும் பூங்கணை மதனும் பெறு நின் சிரித்த வெண்ணகையும் நுதல்விழி நோக்கும் சிறியனே னிருண்மலம் பெறுமோ" என்றார். இருண்மலம் - ஆணவமலம். இது சுத்த விருளா யிருப்பதொன் றாதலான் 'இருண்மலம்' எனப்பட்டது.

ஆணவமலத்தான் வரும் துன்பத்தை,

(சங்கற்ப நிராகரணம்: 6 - 10)

"அறிவில னிதச் செறிவிலென் றுரைத்த
நின்மொழி விரோதமும் பின்மொழி மலைவு
மன்வயி னிகழா மலமிரு ணிறையொளி
யான்மா விளக்கிற் றருமருட் கலாதிக
ளீனமி லிவனிடத் தெவ்வா றிசைந்தன." எனவும்,

(தணிகைப் புராணம்-நந்தி யுபதேசப் படலம்: 105 - 106)

"உறுதி பயக்குங் காரியங்க ளொருகா லத்துஞ் செயவொட்டா
திறுதி பயக்குங் காரியமே யெக்கா லத்து நிகழ்விக்குஞ்
செறியு'முயிரி'னல்லறிவை யெக்கா லத்துஞ் சிதைத்துவரு
மறிய வுயிர்க்குப் புகரறிவை யெக்கா லத்தும் வளர்ப்பிக்கும்."

எனவும்,

"தூய நினைவைத் தூமொழியைத் தூய தொழிலைத் தோற்றுது
தீய நினைவைத் தீமொழியைத் தீய தொழிலைத் தவத்தோற்று
மாய தனியா ணவப்பகையி னாட்டைத் தணிப்ப வுயிரடுக்கு
மாயை யிரண்டு திறனுகுஞ் சுத்த மசுத்த மெனமாதோ."

எனவும் வருவனவற்று னுணர்ந்து ஒழித்தல்வேண்டு மென்றபடி.

இருண்மலம் ஒழித்தலைப் பிறரும் கூறி யிருத்தலை,

(தணிகைப் புராணம்: 131)

"இருண்மல மொன்றே பற்று மிருவினை யுடையேற் கந்தோ
மருண்மலி மாயை கன்மந் திரோதான கரியை மல்கும்
பொருண்மலி தருமா மாயைப் புகர்மல நான்குந் தந்து
மருண்மலி யருளிற் றீரா வற்புதத் தொழின்மை போற்றி."

என வரும் செய்யுளா னுணர்க.

(சிவப்பிரகாசம் - இரண்டாஞ் சூத்திரம்-2)

"ஏகமாய்த் தங்கால வெல்லைகளின் மீளு
மெண்ணிய சத்தியதா யிருளொளிர விருண்ட
மோகமாய்ச் செம்பிலுறு களிம்பேய்ந்து நித்த
மூலமல மாயறிவு முழுநினையு மறைக்கும்
பாகமாம் வகைநின்று திரோதான சத்தி
பண்ணுதலான் மலமெனவும் பகர்வாது பரிந்து

நாகமா நதிமதியம் பொதிசடையா னடிக
ளனுகும்வகை கருணைமிக ம[illegible]ருந் தானே.''

எனவும், சிவபெருமான் சூக்குமத்திலும் அதி சூக்ஷும சரீரியென்னும் சாஸ்திர முறை கடந்து பேரருள் வசத்தால் உலகெல்லாம் கண்டு உய்யுமாறு கொண்ட அருள் வடிவமே இம்மலை வடிவமென்பார், 'கருத்தினும் கருத வரிய நுண்ணியனென் கடனுறவுலகெலாம் காண்பான் றரித்ததி தூல வடிவுறும் சோணசைலனே' என்றார்.

கருத்து - மனம். கருதுதல் - நினைத்தல். நுண்ணியன் - நுட்பமானவன் எனினுமாம். கடன் - முறைமை. 'உலகம்' என்றுச் சீவான்மாக்களை யுணர்த்திற்று; ஆகுபெயர் முகத்தான் கொள்ளினு மமையும். 'கருத்தினும்' என்புழி உம்மை உயர்வு சிறப்புப் பொருட்டு; கருதுதற்கரிய வுயர்வை மனம் கொண்டமையால்: ''[illegible]றவரும் மருளுங் குன்றம்'' என்பதிற்போல. காண்பான்- பானீற்று வினையெச்சம். 'அதி' என்பது வடசொல்லுள் மிகுதிப் பொருளதோ ரிடைச்சொல். 'அதிநுட்பம்' என்பதிற்போல.

அவுணரும் மதனும் நகை யழலும் விழியழலும் பெற்றமை,

(திருக்கோவையார்: (152-70)

'வரையன் றொருகா லிருகால் வளைய நிமிர்த்துவட்கார்
நிரையன் றழலெழ வெய்துநின் றோன்றில்லை யன்னநின்னூர்
விரையென்ன மென்னிழ லென்ன வெறியுறு தாதிவர்போ
துரையென்ன வோசிலம் பாநலம் பாவி யொளிவனவே.''

எனவும்,

'பருங்கண் கவர்கொலை வேழப் படையோன் படப்படர்ந்
தருங்கண் ணுதற்றில்லை யம்பலத் தோன்றட மால்வரைவாய்க்

*கருங்கண் சிவப்பக் கனிவாய் விளர்ப்பக் கண்ணுரளியின்*
*வருங்கண் மலைமலர் சூட்டவற் றேமற்றவ் வான்சுனையே."*

*எனவும் வரும் செய்யுட்களானும் விசிதமாகும்.*

*அவுணரும் மதனும் நகையழலும் விழியழலும் பெற்று நாச மடைந்ததுபோல, அடியேனது ஆணவமலமும் அவற்றைப் பெற்று நாசமடைய வேண்டுமென்பது கருத்து.*

## புரத்துறு மவுணக்குழாம் சிரித்த வெண்ணகை பெற்றமையை:—

*தாரகன் [சூரபன்மன் தம்பி] புத்திரர்களாகிய* **தாரகாக்கன், கமலாக்கன்,** *வித்துன்மாலி யென்னும் அசுரர் மூவரும் கோடி யாண்டு தவமியற்றி, பிரமதேவராற் பொன் வெள்ளி இரும்புகளா ளாகிய மூவரண்கள், முறையே சுவர்க்கம் பூமி, பாதலம் என்புழி நிலை பெற்றிருந்து வேண்டு மிடங்கட்கு உடன் வரவும், அவை ஆயிரம் யாண்டுக் கோர்கால் ஒரு முகூர்த்த நேரம் ஒருங்கு சேர்தாக வும், அக் காலத்தில் ஒரு கணை விடுத்து அழிப்பினன்றி வேறெவ் வகையானும் அழியாதிருக்கவும், திருமாலாதியர் எதிர்ப்பினும் தோற்றோடவும் வரமேற்று, மயன் வகுத்த மாளிகைகளோடு கூடிய அவ் வரண்களினுற்று, விபூதி ருத்திராக்ஷம் இலிங்கதாரணம் பஞ் சாக்ஷர செபமு முடையவராய்ச் சிவபிரானை வழிபட்டாரேனும், தேவாதியர்க்கு இடுக்கண் புரிதலுடைமை பற்றி, அச்சுத மூர்த்தி புத்த குருவாய்ச் சென்று மயக்க, அக் கொள்கையின் மயங்கிச் சிவபத்தியில் வெறுப்புற்ற ஞான்று, சிவபெருமான் தேவர்கள் வேண்டுகோளுக் கிரங்கி, பூமி தேராகவும், சூரிய சந்திரர் இரு சக்கரங்களாகவும், நான்கு வேதங்கள் நான்கு குதிரைகளாகவும், பிரமன் சாரதியாகவும், மந்திரம் கடிவாளமாகவும், பிரணவம் பூட்டையவும், ஆதிசேடன் நாணாகவும், திருமால் பாணமாக*

வும், வாயு அம்பிற் கட்டிய சிறகாகவும் கொண்டு திரிபுரத்தை யடைகையில், தேவர் ஒவ்வொருவரும் தம்மாலேயே திரிபுர தகனம் நிறைவேறுவதாகத் தருக்குற்றனர். அதனை யுணர்ந்த சிவபெருமான் நகைக்க, அதனால் அற்றை ஞான்று திரிபுரம் தீப் பற்றி எரிய அப் புரத்திலுள்ள அவுணக்குழாமும் எரிந்தது என்னுஞ் சரிதத்தா லுணர்க.

பூங்கணை மதன் நுதல்விழி நோக்குப் பெற்றமையை:—

சூரபன்மன் முதலியோரால் இடுக்கணுற்ற இந்திரன் வேண்டு கோளுக் கிரங்கிப் பிரமதேவர் மன்மதனை நோக்கி, "எங்கள் பொருட்டு நீ கைலைக்குச் சென்று, பரமசிவன் மோன நிலையில் நீங்கி உமாதேவியை மணக்கச் செய்யவேண்டும்" என்று கட்டளை யிட்டு அம் மன்மதனை அனுப்பினார். அவன் கைலையை யடைந்து நந்திதேவரை வணங்கி நின்றான். அவர், மன்மதனை நோக்கி "நீ இங்கு வந்ததற்குக் காரணம் யாது?" என்று வினவத் தான் பிரமன் இந்திரன் முதலிய தேவர்களால் ஏவப்பட்டு வந்த செய்தி முழுதும் மறைக்காமற் சொல்ல, நந்திதேவரும் அங்ஙனமே "நீ மேலை வாயில் வழியாகச் சென்று இறைவன் சந்நிதியை அடையக்கடவாய்" என்று நியமிக்க, மன்மதனும் அவரை வணங்கி விடை பெற்றுச் சென்று, இறைவன் மோன நிலையில் இருப்பதைக் கண்டு சரபத்தைக் கண்ட சிங்கம்போல நடுநடுங்கி உடல் முழுதும் வெயர்த்துத் துன்பக்கடலுள் ஆழ்ந்தனன். அப்பொழுது மன்மதன் "நான் நினைத்து வந்த காரியத்தைச் செய்து முடிப்பதே தகுதி" என்று ஒருவாறு துணிந்து தனது புட்ப பாணங்களைந்தையும் பரமசிவன் மேல் பிரயோகித்தான். அவை இறைவன் திருமேனியிற் படுதலும், அவ் விறைவன் ஒரு சிறிது விழி திறந்து நோக்கினான். அங்ஙனம் நோக்குதலும் மிக்க அனலைச் சொரியும் நெற்றிக் கண்களி லுண்டான தீப்பொறி மன்மதனது

உடல் முழுதும் சுட்டு நீறாக்கிவிட்டது என்னுஞ் சரிதத்தா லுணர்க.

8. ஆர்த்தெழு திரைகள் சுருண்டெறி கடனஞ்
 சமுதுசெய் பெரும்புகழ்த் தனிமை
தீர்த்திட வுளங்கொண் டவலனேன் றனைநின்
 றிருவடிக் கன்பனாக் கிலையே
கார்த்திகை விளக்கு மணிமுடி சுமந்து
 கண்டவ ரகத்திரு ளனைத்துஞ்
சாய்த்துநின் றெழுந்து விளங்குறுஞ் சோண
 சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) கார்த்திகை விளக்கு - கார்த்திகைத் தீபத்தை, மணி முடி சுமந்து - அழகிய முடியிலே தாங்கி, கண்டவர் - (அத் தீபத்தையும் அதனைத் தாங்கிய நும்மையும்) தரிசித்தவர்களுடைய, அகத்து இருள் அனைத்தும் - மனவிருள் முழுமையும், சாய்த்து - கெடுத்து, நின்று எழுந்து விளங்குறும்-உயர்ந்தோங்கி விளங்குகின்ற, சோணசைலனே கைலைநாயகனே-சோணசைலரே! கைலைநாயகரே!, ஆர்த்து எழு திரைகள் - முழங்கி யெழுகின்ற அலைகள், சுருண்டு எறி - மடங்கி வீசுகின்ற, கடல் நஞ்சு-கடலிற் றோன்றிய விடத்தை, அமுது செய் - திருவமுதாகக் கொண்டருளிய, பெரும் புகழ் தனிமை - பெரும் புகழ்ச்சியின் தனிமையை, தீர்த்திட - நீக்க, உளம் கொண்டு - திருவுளத்தே சிந்தித்து, அவலனேன்தனை - பயனற்றவனாகிய என்னை, நின் திருவடிக்கு-நுமது திருவடிக்கு, அன்பன் ஆக்கிலையே - அடிமையாக்கிக்கொண்டீரில்லையே! (என் செய்வேன்?); (எ-று.)

(வி - ரை) தேவரீர் அருந்திய கடலின் நஞ்சுபோலும் கொடிய என்னையும் ஆண்டருளின் அந்நஞ்சு அருந்துதலி னுண்டா

கிய புகழ்ச்சி யொத்த மற்றொரு புகழ்ச்சி அதற்கினமாக உண்டா மென்பார், 'ஆர்த்தெழு திரைகள் சுருண்டெறி கடனஞ் சமுது செய் பெரும்புகழ்த் தனிமை, தீர்த்திடவுளக்கொண் டவமேனென் றனைநின் திருவடிக் கன்ப னாக்கிலையே' என்றார். 'கடனஞ்சு அமுதுசெய் பெரும்புகழ்' என்பதற்குக் 'கடலிற் றோன்றிய நஞ்சால் அமிர்தத்தைச் செய்த பெரும்புகழ்' எனவும், 'நஞ்சினை லோர் போனகத்தைத் தனக்குச் செய்துகொண்ட பெரும்புகழ்' எனவும் பொருள் கூறினும் அமையும். அப்பொருட்கு மூன்றாவ தன் றொகை. நஞ்சால் அமிர்தத்தைச் செய்தல் என்றது நஞ்சின்றன்மை யொழிந்து அமிர்தஞ் செய்யுங் காரியத்தைச் செய்தல் என்றபடி. இதனை,

> "ஆலத்தி னாலமிர் தாக்கிய கோன்றில்லை யம்பலம்போற்
> கோலத்தி னாள்பொருட் டாக வமிர்தங் குணங்கெடினுங்
> காலத்தி னம்மழை மாறினு மாறாக் கவிகைநின்பொற்
> சீலத்தை நீயு நினையா தொழிவதென் றீவினையே."

என வரும் திருக்கோவையார் செய்யுட்குப் பேராசிரியர் கூறிய உரையானு முணர்க.

'ஆர்த்தெழு திரைகள் சுருண்டெறி கடல்' என்பதற்கு 'ஆர வாரித் தெழாநின்ற அலைகளைச் சுருட்டி வீசுங் கடல்' எனப் பொருள் கோடலும் ஒன்று. அப்பொருட்குச் 'சுருண்டு' என்பது பிறவினைமேற்று. மெலித்தல் விகார மென்பார்க்குப் பிறவினைப் பகுதியாதலே யன்றி வினையெச்ச வாய்பாடாகாமை யறிக. பகுதி வினையெச்சப்பொருள் தாராதோ? எனின், அது "வரிப்புனை பந்து" என்பதுபோலத் தன்வினைப் பகுதியா யிருத்தல்வேண் டும். எறிகடல்-வினைத் தொகைநிலைத்தொடர். இனி, நஞ்சத் தைத் தரும் விடத்தை யுண்ட பெரும்புகழுக்கு இயையாகத் துன்

பமே வடிவமாகிய அடியேனையும் அன்பனுக்கிக் கொளின் புகழ் இணைந்து விளங்கும் என்பது தோன்ற, 'பெரும்புகழ்த் தனிமை கீர்த்திட வுளங்கொண் டவலனேன் றனைநின் றிருவடிக் கன்பனுக் கிலையே' என்றார் எனினுமாம். தனிமை - ஒன்றுந் தன்மை. உலகிலுள்ள தீபம் தான் புகுந்தவிடத்துப் புறத்திரு ளொன்றே ஒழிக்கும் அதுபோலாது, கார்த்திகைத் தீபமும் அதனைத் தாங்கும் இச் சோணசைலமும் அடைந்து சேவித்தவரது அகத்திருள் முழுமையும் நீக்கும் ஆற்றலுடையன வென்பார், 'கார்த்திகை விளக்கு மணிமுடி சுமந்து கண்டவ ரகத்திரு ளனைத்துஞ் சாய்த்து நின் றெழுந்து விளங்குறுஞ் சோண சைலனே' என்றார்.

'கார்த்திகை விளக்கு' என்றது கார்த்திகை மாதம் பூர்வ பக்கம் கார்த்திகை நட்சத்திரத்தில் கொளுத்தும் தீபத்தை. இனி, புறத்திருளை நீக்கு மேனைய தீபம் போலாது தரிசித்தவரது அஞ்ஞான விருளையு நீக்கு மென்பது தோன்ற, 'கண்டவ ரகத்திரு ளனைத்துஞ் சாய்த்து நின்று' என்றார் எனினுமாம். 'அகத்திரு ளனைத்தும்' என்றது ஆணவ முதலியவற்றை. 'அனைத்தும்' என்புழி உம்மை முற்றுப்பொருளது.

*"மடநடைப் பறவையு மாய விலங்கு
மடிமலர் முடிக்கா டவைமுறை போகா
துறழுபு காண்டுமென் றுறீஇத் திரிந்து
தேவயாண் டாயிர நேடியு முணராப்
பரஞ்சுடர் மலைக்கட் கருந்தடங் கண்ணி
காணுபு விளக்குங் கார்த்திகை விளக்கை
மாணப் பெறீஇயவிர் மணிக்கோ விழியே
யல்லன மரங்கற் பீலி யேனம்
நிலமிவற் றுழைபோ மாசின வாகலிற்
பல்சான் றீரே! பல்சான் றீரே!



வீழ்நாட் படாமை வியற்பய னுறுவான்
சென்மின் காண்மின் றிருவிளக் கருளே.”

எனக் கார்த்திகைத் தீபத்தின் சிறப்பை மதுரைச் சங்கப் புலவருள் ஒருவராகிய பொய்கையாரும் கூறியுள்ளார். இனி,

“தார்ப்பொலி தரும தத்தன் றக்கவா றுரைப்பக் குன்றிற்
கார்த்திகை விளக்கிட் டன்ன கடிகமழ் குவளைப் பைந்தார்
போர்த்ததன் னகல மெல்லாம் பொள்ளென வியர்த்துப் பொங்கி
நீர்க்கடன் மகரப் பேழ்வாய் மதனன்மற் றிதனைச் சொன்றான்.”

எனச் சிந்தாமணியினும், ஒல்காப் பெரும்புகழ்த் தொல்காப்பியனாரும் புறத்திணையியலின் மக்கட் பாடாண்டிணை கூறியவிடத்து,

“வேலி னோக்கிய விளக்கு நிலையும்”

என்றருளி யிதன் பெருமை குறிக்க வைத்தார். இதற்கு உரை செய்த உச்சிமேற் புலவர் கொளும் ஆசிரியர் நச்சினார்க்கினியரும், “இது கார்த்திகைத் திங்களிற் கார்த்திகை நாளின் ஏற்றிய விளக்கும் கீழும் மேலும் வலமும் இடமும் திரிபரந்து சுடர் ஓங்கிக் கொழுந்துவிட் டெழுந்ததென்று அறிவோ ராக்கம் கூறப்படுவதாம்” என்றுரைத்தார். அவ்வாறே சங்கப் புலவர்களும்,

“மைம்மிசை யின்றி மலைவிளக்குப் போலோங்கிச்
செம்மையி னின்றிலங்குந் தீபிகை—தெம்முனையுள்
வேலினுங் கோடாது வேந்தன் மனைவிளங்கக்
கோலினுங் கோடா கொழுந்து.” எனவும்,

“வளிதுரந்தக் கண்ணும் வலந்திரியா பொங்கி
யொளிசிறந் தோங்கி வரலா—னளிசிறந்து

நன்னெறியே காட்டு நயந்தெரி கோலார்கு
மெய்ந்நெறி காட்டும் விளக்கு."

எனவும் கார்த்திகைத் தீபத்தின் பெருமையை நன்கு எடுத்துக் காட்டினர்.

## கார்த்திகை விளக்கின் வரலாறு:—

ஸ்ரீ கைலாயத்தில் உல்கமாதாவாகிய பார்வதியாரோடு சிவ பெருமான் எழுந்தருளியிருக்கும்போது, அவ் விடத்தில் ஏற்றி யிருந்த நெய்த் தீபங்களில் ஒரு தீபம் அணையுந் தருணத்தில் ஓரெலியானது அதிலிருந்த நெய்யை உண்ணப் போனபோது, அவ் வெலியின் முகமானது அணைந்துபோகிற வர்த்தியைத் தூண் டிய மாத்திரத்தில், பிரகாசம் அதிகரித்ததினால் சிவபெருமா னவர் கிருபை கூர்ந்து அவ் வெலிக்கு மானுடச் சரீரமும், அர சும், மற்றப் பேறும் தந்து பூமியில் பிறக்கும்படி கட்டளையிட்ட னர். அவ் வெலியானது மாபலிச் சக்கிரவர்த்தியாய்ப் பிறந்து சகல ஐசுவரியத்தையும் அனுபவித்திருக்குங் காலத்தில், ஒருநாள் சிவதரிசனத்துக்குப் போக எத்தனித்துத் தன் இராச சின்ன முதலிய சகல ஆடம்பர விபவத்துடன் சிவாலயத்திற்குட் பிரவே சித்துப் பிரதட்சணம் வருகையில், அவ் விடத்தில் ஏற்றியிருந்த தீபநெய்யின் ஓர் துளி இந்தச் சக்கிரவர்த்தியின் தேகத்தில் ஒழுகினவுடன், அந்தச் சக்கிரவர்த்தியின் தேக முழுமையும் இர ணங் கண்டு வெகு காலம் வருத்தப்பட்டுக்கொண் டிருக்கும்போது, ஒருநாள் சிவபெருமான் கிருபை கூர்ந்து "சக்கிரவர்த்தியே! நீ மிகவும் அகங்காரியாகையால் நம்மா லுனக்கு இத் துன்ப முண்டா யிற்று. நீ இன்றுமுதல் இத் துன்பத்தை யுணர்ந்து, நெய் முத லிய பொருள்களால் ஆலயங்களுக்குத் தீப மேற்றுவையேயானால் உனக்கு இந்த விரணந் தீர்ந்து சாயுச்சிய பதவி கிடைக்கும்" என்று

அசரீரியாய்த் திருவுளம்பற்றியதைக் கேள்வியுற்ற அச் சக்கிர வர்த்தியானவர் ஆனந்தமடைந்து அந்தக் கட்டளையின்படியே அன்றுமுதல் சிவாலயங்களிலும், மற்ற இருள் சூழ்ந்த ஆரணியங்களிலும் தீபம் ஏற்றிக்கொண்டு வருங்காலங்களில், ஒருநாள் சிவபெருமானானவர் திருவுள மிரங்கிக் கார்த்தி[illegible]மாதம் பூர்வ பட்சம் கார்த்திகை நட்சத்திரத்தில், இம் மலையின் உச்சியின்கண் தேஜோமயமா யெழுந்தருளி அச் சக்கிரவர்த்திக்குச் சாயுச்சிய பதமளித் தருளினார் என்பதாம்.

9\. தொடையுடைத் திரடோ ணமன்புறத் துடலந்
தொலைக்குமு னகத்துட லொலைத்துத்
தடையறத் திகழ்பே ரறிவுரு வாகத்
தமியனேற் கருளுநா ளுளதோ
புடையினிற் கரிக்கோ டிளம்பிறை புரையப்
பொங்குசோ தியங்கொடி விரிக்க
சடையெனப் படர்ந்து கிடந்தொளிர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) புடையினில் கரி கோடு - பக்கத்தி லிருக்கின்ற யானைக் கோடு, இள பிறை புரைய - குறைந்த பிறை மதியை ஒத்திருக்க, பொங்கு அம் சோதி கொடி - பிரகாசிக்கின்ற அழகிய சோதிக் கொடிகள், விரித்த சடை என - விரித்துவிட்ட சடையைப்போல, படர்ந்து - (நாற்புறமும்) படர்ந்து, கிடந்து ஒளிர் சோணசைலனே கைலைநாயகனே - கிடந்து திகழ்ப்பெற்ற சோணசைலரே! கைலைநாயகரே!, தொடை உடை திரள் தோள் - வெற்றி மலையையுடைய திரண்ட தோள்களையுடைய, நமன் - இயமனானவன், புறத்து உடலம் - எழுவகைத் தாதுக்களாலாகிய இப் புறவுடலை, தொலைக்கு முன் - ஒழிக்கு முன்னரே, தமியனேற்கு - அடியேனுக்கு, அகத்து உடல் - புரியட்டக மெனப்படும்

சூக்கும சரீரத்தையும், தொலைத்து - ஒழித்து, தடை அற - பந்த மகல, திகழ் - விளங்குகின்ற, பேர் அறிவு உருவு ஆக - மெய்ஞ் ஞானமே வடிவமாக, அருளும் நாள் உளதோ - பாலித் தருளு கின்ற காலமும் உண்டோ? (அறியேன்); (எ - று.)

(வி - ரை) கூற்றுவனின்றும் பிழைத்து ஓரிஇ அவன் எண்ணத்தைக் கடந்துபோய் உய்ந்தார் இவ் வுலகின்க ணில்லை யென்பார், 'தொடையுடைத் திரடோ ணமன்புறத் துடலந் தொலைக்குமுன்' என்றார். நமன் - இயமன். புறத்துடலம் என் றது எழுவகைத் தாதுக்களாலாகிய புறவுடலை, அது தூலதேகம். எழுவகைத் தாதுக்களாவன: இரதம் (மச்சை), உதிரம், எலும்பு, தோல், தசை, மூளை, சுக்கிலம் என்பன. இவற்றை,

"இரதமே யுதிர மென்பு
பரவுதோ லிறைச்சி மூளை பற்றுசுக் கிலந்தா தேழே."

என வரும் நிகண்டா னுணர்க.

'அகத்துடல்' என்றது புரியட்ட காயத்தை; அது சூக்கும சரீரம்; மனம் புத்தி அகங்காரங்களும், சத்த பரிச ரூப ரச கந்தங்க ளாகிய பஞ்சதன்மாத்திரைகளுங் கூடியது புரியட்டக மெனப் படும். இதனை,

(இறைவனூற்பயன்-பாசசாதகவியல்)

"வாய்ந்தமனம் புத்தியாங் காரந்தன் மாத்திரையு
மாய்ந்துபுரி யட்டக மென்றார்."

என்பதனு னுணர்க.

புரியட்ட காயம் பொன்றின் பேரறிவே யுருவா மென்பார், 'அகத்துட றொலைத்துத் தடையறத் திகழ்பே ரறிவுரு வாகத் தமியனேற் கருளுநா ளுளதோ' என்றார்.

சோணசைல வடிவாகிய இக்காலத்தும் பிறையுஞ் சடையும் நீங்காதிருத்தல் போல, யானைக்கோடும் சோதிக்கொடியும் விளங்காநின்றன வென்பது. கரிக்கோடு - யானைக் கொம்பு. சோதியங் கொடி-பகன் முற்றும் ஏனைக் கொடிகள்போ லிருந்து இரவில் சோதி மயமாய் விளங்கும் ஓர்விதக் கொடி. இத்தகைய மரத்தைச் சோதி மரம் என்பர். இது,

"செந்தழ லொளியிற் பொங்குந் தீபமா மரங்க ளாலு
மந்திகண் முழையில் வைத்த மணிவிளக் கொளிக ளாலு
மைந்துமா றடக்கி யுள்ளா ரரும்பெருஞ் சோதி யாலு
'மெந்தையார் திருக்கா ளத்தி மலையினி லிரவொன் றில்லை."

என வரும் பெரியபுராணத்தில் கண்ணப்ப நாயனார் புராணச் செய்யுளில் நன்கு விளங்கும்.

10. கண்புன லொளிப்ப வழற்படு மிழுதிற்
கரைந்துரு நெஞ்சினின் றனையே
பெண்பயி லுருவ மொடுநினைந் தெனது
பெண்மைய லகற்றுநா ளுளதோ
வண்புனல் வேந்த னார்கலிக் குடத்து
மணிமுகிற் கலயத்தின் முகந்து
தண்புன லாட்ட வாடுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) வண் புனல் வேந்தன் - வளமையுடைய புனலரசனான வருணன், ஆர்கலி குடத்து - கடலென்னுங் குடத்தினின்றும், முகில் மணி கலயத்தில் - மேகமென்னும் இரத்தின கலசத்தினால், முகந்து - மொண்டு, தண் புனல் ஆட்ட - தண்ணிய புனலை அபிடேகிக்க, ஆடுறும் சோணசைலனே கைலைநாயகனே - ஆடியருளப்பெறும் சோணசைலரே! கைலைநாயகரே!, கண்

புனல் துளிப்ப - கண்கள் ஆனந்த நீரைப் பொழிய, அழல் படும் இழுதின் - அழலிற் பட்ட வெண்ணெய்போல, கரைந்து உரும் நெஞ்சில் - கரைந்து உருகுகின்ற நெஞ்சத்திலே, நின்றனையே - தேவரீரையே, பெண் பயில் உருவமொடு - அம்பிகையார் ஒருபாலமர்ந்த உருவத்தினோடு, நினைந்து - தியானித்து, எனது பெண் மயல் - (பெண்களா லுண்டாகிய) எனது பெண் மயக்கத்தை, அகற்றும் நாள் உளதோ-ஒழிக்கும் காலமும் உண்டோ?; (எ-று.)

(வி - ரை) 'கண்புனல்' என்றது ஆனந்தக் கண்ணீரை. அழல் - நெருப்பு. இழுது-நெய்யுமாம். திருவருட் சத்தியை முன்னிட்டே சிவத்தைத் தியானித்துப் பெண் மயல் கடந்து பேரின்பம் பெறவேண்டு மென்பார், 'நெஞ்சினின் றனையே பெண்பயி லுருவ மொடுநினைந் தெனது பெண்மய லகற்றுநா ளுள்தோ' என்றார். பெண்பயி லுருவம்-அர்த்தநாரீச்சுர வடிவம். 'நின்றனையே' என்பதில் ஏகாரம் தேற்றத்துடன் பிரிநிலையுமாம்; தெளிந்தமையாலும் மற்றைத் தேவர்களினின்றும் பிரித்தமையாலும் என்க.

இனி, ஞான சத்தியோடு கூடிய நினது திருவுருவைச் சிந்தித்தா லன்றி யசுத்த மாயையின் காரியமாகிய பெண்ணாசை யொழியா தென்பது தோன்ற, 'நெஞ்சினின் றனையே பெண்பயி லுருவ மொடுநினைந் தெனது பெண்மய லகற்றுநா ளுளதோ' என்றார் எனலுமாம்.

அதிதூல வடிவமைந்த இப்பெருமானுக்கு வருணன் ஆட்டினாலன்றி வேறொருவரால் அபிடேகிக்க முடியா தென்பது தோன்ற, 'புனல் வேந்தனாட்ட ஆடுறும்' என்று வியந்து கூறினார். ஆர்கலி - நிறைந்த ஓசையை யுடையது; அது சமுத்திரம்: அன்மொழிக் காரணக்குறி. ஆர்கலிக் குடம்-கடலாகிய குடம்: உருவ

கம். மணிக்கலயம்-இரத்தினக் கலசம். 'மணிமுகில்' என்பதற்கு 'நீல மணிபோலும் கரிய முகில்' எனவும், 'முத்துக்களை யீனும் முகில்' எனவும் பொருள் கோடலும் ஒன்று. முகில் - மேகம். முகிற் கலயம் - மேகமாகிய கலசம்: உருவகம்.

11. வேலையந் துகில்சூழ் மலர்தலை யுலகின்
மெய்யினைப் பொய்யென் றுமவர்க்கே
யேலவந் தருள்வ தன்றிமெய் யினைமெய்
யெனுமெனக் கருள்புரிந் திடாயோ
காலநன் குணர்ந்து சினகரம் புகுந்து
காண்பரி தெனுநல சனைத்துஞ்
சாலநின் றுழியே கண்டிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) உலகு அனைத்தும் - உலகின ரனைவரும், காலம் நன்கு உணர்ந்து - தரிசித்தற்குரிய காலத்தை நன்றாக வுணர்ந்து, சினகரம் புகுந்து - ஆலயம் புகுந்தும், காண்பு அரிது எனு - காணுதலரிய திருவுருவமென்று வருந்தாவண்ணம், நின்றுழியே சால கண்டிடும் - நின்றவிடத் திருந்தே (கால முதலிய நோக்காது கண்களார)மிகவும் சேவிக்கத்தக்க, சோணசைலனே கைலை நாயகனே - சோணசைலரே! கைலை நாயகரே!, வேலை அம் துகில் சூழ் - சமுத்திரமாகிய அழகிய ஆடை சூழ்ந்த, மலர்தலை உலகில் - பரந்த இடமுடைய உலகின்கண், மெய்யினை பொய் என்னும் அவர்க்கே - உடலினைப் பொய்யென்று மதிப்பவர்க்கே, வந்து ஏல அருள்வது அன்றி-எழுந்தருளி மிகவும் அருள்பாலிப்பதல்லது, மெய்யினை மெய் எனும் எனக்கு - உடலினை நிலைத்ததென மதிக்கின்ற எனக்கு, அருள் புரிந்திடாயோ - நின தருளைப் பாலிக்கமாட்டீரோ? (அறியேன்); (எ - று.)

(வி - ரை) தேகம் மெய்யெனப் பெயர் பெறினும் பொய் யேயாய் அழிதலைச் சோதனையால் பிரத்தியட்சத் துணர்ந்து அதிற் அபிமான மற்றவர்க்கே யல்லது அதில் உண்மைப் பாவனையால் அபிமான மறாதார்க்கு அருள் பாலியாமை திண்ணமாகலின் அவ் வாறு புரியாது, தேகாபிமானம் அறும் வகை செய்து அநுக்கிரகிக்க வேண்டுமெனப் பிரார்த்தித்தபடி. இனி, மின்போன் றழிதற் குரிய மெய்யை அறிவாற் பொய்யென்று கண்ட ஞானிகளுக்கே யன்றி அஞ்ஞானத்தால் மெய்யை மெய்யென்று களித்திருக்கும் பேதையேனுக்கு அருளல் கூடாதாயினும் பூசா காலங்களில் ஆல யத்து வந்து தரிசித்தவர்களுக்கேயன்றி யாவரும் ஆங்காங்கு நின் றுழித் தரிசித் தருள்பெற எழுந்தருளிய கருணைநிதி யாதலின் அடி யேனுக்கும் அருளவேண்டு மென்பது கருத்து எனக் கோடலும் ஒன்று. 'வேலை யந்துகில்' என்புழி, அம்-அல்வழிச் சாரியையுமாம். 'சூழ்' என்னும் வினைத்தொகை, 'உலகில்' எனப் பிற பெயர் கொண்டது. கடலை நிலமகட்கு ஆடையாகச் சொல்வது கவி மரபு. மலர்தலை-பரந்த இடம். பொய்யை மெய் என்றது மங்கல வழக்கு. வானத்தில் தோன்றுகிற இந்திரவில் இப்பொழுது என்றும் இன் னபடி யென்றும் தெரியாமல் உண்டாகி உடனே உரு அழிந்து போவது போலவும், பெய்கின்ற மழைநீரில் உண்டாகும் குமிழி பலமுறையும் உண்டாகி யுடனே உரு அழிந்துபோவது போல வும் உடம்பும் உண்டாகி நிலையில்லாமல் அழிந்துபோவதனைத் திண்ணமா யறிந்தமையால், 'மெய்யினைப் பொய்யெனு மவர்க்கே' என்றார். அவர்க்கே என்புழி ஏகாரம் தேற்றத்தோடு பிரிநிலையுமாம்' அவர்க்கன்றி யேனையோர்க் கருளுவ தின்மையெனத் தெளிந் தமையானும், மற்றையோரினின்றும் பிரித்தமையானும் என்க. மெய்யைப் பொய்யென்பது,

"வானிடு வில்லின் வரவறியா வாய்மையால்" எனவும்

"படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்றிக்
கெடுமிதோர் யாக்கையென் றெண்ணி." எனவும்

வருவனவற்றுள் நன்கு விளங்கும். மெய்யினை மெய்யென்றது தேகாபிமானத்தை. காலம் - பூஜாகாலம். சினகரம்-கோயில். 'புகுந்து' என்புழி உம்மை விகாரத்தாற் றொக்கது; அது உயர்வுசிறப்பு. காண்பு - காணுதல்; தொழிற்பெயர். எனது - என்றது என்பதன் தொகுத்தல். 'உலகனைத்தும்' என்பதில் உலகு - ஆகுபெயர். உம்மை - எஞ்சாமைப்பொருட்டு. 'நின்றுழியே'-ஏகாரம், "ஓ ஓ கொடிது" என்புழிப்போல. இதில் மெய்யினைப் பொய்யெனு மவர்க் கருள்வதன்றி மெய்யினை மெய்யெனு மெனக்கு அருள் புரிந்திடாய் எனச் சமத்காரந் தோன்றக் கூறினர்.

12. மயலினா லழுந்தும் பிறவியா மளற்றை
வளர்தரு நின்பெருங் கருணை
வெயிலினா லுலர்த்தி யெனதுளக் கமலம்
விரிக்குமொண் பரிதிநீ யலையோ
பயிலுமா லயமோர் சைலமோர் சைலம்
பகைப்புல முருக்குகார் முகமோர்
சைலமா துலனா மெனக்கொளுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) பயிலும் ஆலயம் - தினமும் அமருமாலயம், ஓர் சைலம் - கைலைமலையாகும்; பகை புலம்-பகைவராகிற திரிபுராதிபர்களுடைய இடத்தை, முருக்கு கார்முகம்-அழிக்கும் வில், ஓர் சைலம் - மேருமலையாகும்; மாதுலன் - மாமனார், ஓர் சைலம் ஆம் என-இமையமலையாகுமென வியக்கும்படி, கொளும் சோண சைலனே கைலைநாயகனே-கொண்டு விளங்கும் சோணசைலரே! கைலைநாயகரே!, மயலினால் - மயக்கங் காரணமாக, அழுந்தும் - அழுந்துதற்குரிய, பிறவி ஆம் அளற்றை - பிறப்பென்னும் சேற்

றை, வளர்தரும் - வளர்கின்ற, நின் பெரும் கருணை வெயிலினல்- நமது திருவருளாகிய வெய்யிலினல், உலர்த்தி - உலரச் செய்து, எனது உளக்கமலம் - எனது இருதய கமலத்தை, விரிக்கும் - விகசிக்கச் செய்யும், ஒண் பரிதி நீ அலேயோ-அழகிய சூரியன் தேவரீரன்றோ? (ஆகையால், அருளல்வேண்டும்); (எ - று.)

(வி - ரை) தானல்லாதவற்றைத் தானென்றும், தனதல்லாதவற்றைத் தனதென்றும் அபிமானிக்கும் மயக்கத்தின் காரியமே பிறப்பாதலால், 'மயலினு லழுந்தும் பிறவி' என்றார். 'மயல்' என்பதற்கு 'ஐம்புலவாசை' எனப் பொருள் கூறுதலும் ஒன்று. பிறவி ஆம் அளறு - பிறவியாகிய சேறு. கருணை வெயில்-திருவருளாகிய வெயில். உளக்கமலம்-உளத்தாமரை (மனமாகிய தாமரை); இவை உருவகம். பெருமானைப் 'பருதி' என்றதும் அது. பிறவி வசப்பட்டோர் மேன்மேலும் அதி லழுந்தப் பெறுதலன்றி விலகரிதாதலால் பிறப்பை, 'அளறு' என்றார். அளறு - சேறு. பெருமான் திருவருட்குணத்தினலேயே இருதயதாமரை விரிதற்குரியதாதலால் அப் பெருமானைப் 'பரிதி' என்றார். அளறோடு கூடிய தாமரையை மலர்த்தும் ஏனைய பரிதிபோலாது பிறவியாமளற்றைக் கருணை வெயிலினல் உலர்த்தி உளக்கமலத்தை விரித்தற்குரியராதலால் அப் பெருமானை, 'ஒண்பரிதி' என்றார் எனக் கோடலும் ஒன்று.

இனி, கூம்பிய உளக்கமலத்தை நினது காருண்யத்தினன் மலர்வித்து அதனை யிடமாகக் கொண்டு ஜனனமரண மென்னுஞ் சேற்றைப் போக்கவேண்டு மென்பது தோன்ற, 'உலர்த்தியுளக் கமலம் விரிக்கும் ஒண்பரிதி நீயலையோ' என்றார் என்றுமாம். ஆலயமும் கார்முகமும் மாதுலனும் மலையெனக் கொண்டு தாமும் மலையுரு வாயினரென அவர் திருவிளையாடலை வியந்தமை யுணர்க. ஆலயம் - தங்குமிடம். கார்முகம் - வில். மாதுலன் -

மாமன் (மலையரையன்). மலையரையனை 'மலை' என்றது இலக்கணை.

13. புலம்புரி துயரங் கழன்றுநின் கழற்கால்
புந்தியஞ் சினகரந் திருத்தி
நலம்புரி புனிதர் பேரவை தமியே
னணுகுவா னருளுநா ளுளதோ
வலம்புரி மனிதர் கடலென வொலித்து
வளைவுற நடுவண்மந் தரம்போற்
றலம்புரி தவத்தி னின்றொளிர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) வலம் புரி மனிதர் - பிரதக்ஷிணஞ் செய்யும் அடியவர்கள், கடல் என ஒலித்து - கடல் போல (அரகரவென்று) துதித்துக்கொண்டு, வளைவுற - வளைந்திருக்க, நடுவண் - மத்தியில், மந்தரம் போல் - மந்தரமலையைப் போல, தவம் புரி - உலகினர் செய்த, தவத்தின் - தவத்தின் பயனாக, நின்று - ஓங்கி, ஒளிர் சோணசைலனே கைலைநாயகனே - விளங்குகின்ற சோணசைலரே! கைலைநாயகரே!, புலம் புரி - விஷயங்களால் விளைக்கப்படுகின்ற, துயரம் கழன்று - துயரங்களினீங்கி, நின் கழல் கால் - நுமது வீரக்கழலை யணிந்த திருவடிகளை, புந்தி அம் சினகரத்து - மனமாகிய அழகிய ஆலயத்தில், இருத்தி - அமர்த்தி, நலம் புரி மனிதர் - நன்மையைப் பாலியாநின்ற அடியவர்களுடைய, பேர் அவை - பெரிய கூட்டத்தில், தமியேன் - தனியனான யான், நணுகுவான் - அடையும்படி, அருளும் நாள் உளதோ - கிருபை செய்கின்ற நாளும் உண்டோ? (அறியேன்.); (எ - று.)

(வி - ரை) 'புலம்' என்றது ஐம்புல விஷயங்களை; அவையாவன: சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம் என்பன. 'புலம்புரி, நலம்

புரி, வலம்புரி, தலம்புரி' என்பவற்றிலுள்ள புரி நான்கும் வினைத் தொகைப்பொருளன. புலம்-இதுபோலியாய்ப் புலன் என வரும். 'துயரம்' இதில் அம்-சாரியை. புந்தியம் சினகரம் - இது உருவகம்; 'அம்'சாரியையுமாம். சினகரம்-ஆலயம்.

பேரவை: பெருமை + அவை. அவை-கூட்டம்; சபையுமாம். தமியேன் - வினைப்பெயர்; இதில் தமி - தனிமை. நணுகுவான்-நணுக; வான் - வினையெச்ச விகுதி. முத்திக்குக் காரணம் சாது சங்கமன்றி வேறு வழி கிடையாதென்பார், 'புனிதர் பேரவை தமியேன ணுகுவா னருளுநா ளுளதோ' என்றார். இதனை,

(தாயுமானவர் - ஆசையெனும் - 27)

"இடத்தைக் காத்திட்ட சுவானெனப் புன்புலா விறைச்சிச்
சடத்தைக் காத்திட்ட நாயினே னுன்னன்பர் தயங்கு
மடத்தைக் காத்திட்ட சேடத்தால் விசேடமாய் வாழ
விடத்தைக் காத்திட்டகண்டத்தோய் நின்னருள் வேண்டும்."

என்பதனு லறிக.

அரகரவென்னும் ஓசையும் தொகைப் பெருக்கும்பற்றி மனிதரைக் கடலாகவும், மந்தரம் கடைந்தோர்க்கு அமுது தந்ததுபோல அமுதென்னும் முத்தி வீட்டைத் தருதலால் சோணசைலத்தை அம் மந்தரமாகவும் கூறினர்.

14. நீரினி லெழுமொக் குளினழி யுடம்பு
நிலையென நிலக்குமா னந்த
வாரிதி படிய வறிந்திடா தழலு
மடமையே னுய்யுநா ளுளதோ
வேரியல் பகழுன் றேடுமக் கேழ
லின்றுநா டியகிளைத் திடல்போற்

*சாரலி னேன மருப்புழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.*

(ப - ரை) ஏர் இயல் - அழகமைந்த, பதம் - நுமது திருவடியை, முன் தேடும்-முன்னர்த் தேடிய, அ கேழல்-அந்தத் திருமாலாகிய பன்றி, இன்றும் - இதுபொழுதும், நாடிய கிளைத்திடல் போல் - (அத் திருவடியையே) தேட(ப் பூமியை)க் கிண்டுதல் போல, சாரலின் - பக்கங்களில், ஏனம்-பன்றியானது, மருப்பு உழும் - தனது கொம்புகளால் உழுதலைப் பெற்றுள்ள, சோண சைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, நீரினில் எழும் - நீரினிடத்தே தோன்றுகின்ற, மொக்குளின் - குமிழி போன்று, அழி உடம்பு - (காலநியதி யற்றதாய்) அழியக் கூடிய உடலினை, நிலை என - நிலையுடைய தென்று கருதி, நிலைக்கும் - அழியாத் தன்மையையுடைய, ஆனந்தம் வாரிதி - பேரின்ப சமுத்திரத்தில், படிய அறிந்திடாது - மூழ்கிநிற்க அறியாது, உழலும்-(விஷய வாசனையில்) உழலுகின்ற, மடமையேன் - அறியாமையுடைய யான், உய்யும் நாள் உளதோ - உய்யுங் காலமும் உளதோ (அறியேன்); (எ - று.)

(வி - ரை) மொக்குள் - நீர்க்குமிழி; இது தோன்றி விரைவில் அழிதற்கு உவமம். மொக்குள் இக் காலத்து அழியுமென்னும் நியதி யின்றி யழிதல் நிச்சய முடையதாய் நிற்றல்போல நிற்றலால் 'மொக்குளி னழியுடம்பு' என்றார். இக் கருத்துப்பற்றியே,

(நாலடியார் - யாக்கை நிலையாமை - எ)
"படுமழை மொக்குளிற் பல்காலுந் தோன்றிக்
கெடுமிதோர் யாக்கையென் றெண்ணித்—தடுமாற்றந்
தீர்ப்போம்யா மென்றுணருந் திண்ணறி வாளரை
நேர்ப்பாரியார் நீணிலத்தின் மேல்."

என்றார் பிறரும்.

இனி, உடலுக்கு அழியுடம்பென்று விசேடணங் கொடுக்கப் பட்டது என்றலும் ஒன்று. நிலையாததை நிலையென்று கருதி நிலையுடையதை விரும்பாது உழலுதலால், 'மடமையேன்' என்றார். மடமையேன்-வினைப்பெயர். உளதோ, உண்டோ என்பவற்றிற்கு அத்தகைய அநுபவங்களை உண்டாக்கவேண்டு மென்பது கருத்தாக வருமிடந்தோறும் கொள்க. (அத்தகைய அனுபவங்களாவன-உய்யுநாள் முதலியனவாம்.) ஏர் - அழகு.; அக் கேழல் என்புழி அகரம் சிறப்புப் பொருளது. கேழல் - பன்றி; ஈண்டுத் திருமாலாகிய பன்றி. 'இன்றும்' என்பதில் உம்மை இறந்தது தழீஇயது. 'நாடிய' என்பது செய்திய என்னும் வாய்பாட்டு வினையெச்சம். கிளைத்தல் - கிண்டுதல். ஏனம் - பன்றி. சரீரம் அநித்தியமெனக் கருதி நித்தியானந்தத்தை விழைந்தாலன்றி உய்யுநாளின்றாகலின், அது பெறவேண்டுமென்பது கருத்து.

**15.** கருத்திடை நினது கருணைமா மேனி
கண்டெழுத் தைந்துநா வியம்பச்
சிரத்தினி லமைத்த கரத்தொடு நினையான்
றினம்வலம் புரியுமா றருளாய்
வரத்திரு முடியின் மதிதிரு முடியின்
வனைந்துகந் தரத்தினி லிருள்கந்
தரத்தினி லிருத்தி விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) வரம் திரு முடியில் மதி - மேன்மை தங்கிய திருமுடியின்கணிருந்த சந்திரனை, திருமுடியின் வனைந்து - (இம் மலை வடிவம் கொண்ட இதுபொழுதும்) அழகிய உச்சியின்கண் சூடியும், கந்தரத்தினில் இருள் - முன் கண்டத்தி லமைத்த விடக் கருமையாகும் இருளை, கந்தரத்தினில் இருத்தி - (இதுபொழுது) குகைகளி னிடமாக இருத்தியும், விளங்குறும் சோணசைலனே

கைலைநாயகனே - பிரகாசிக்கின்ற சோணசைலரே! கைலைநாயகரே!, கருத்திடை - மனத்தின்கண், நினது கருணை மா மேனி கண்டு - நுமது கருணைமயமான சிறந்த திருமேனியைத் தியானித்துக்கொண்டு, ஐந்து எழுத்தும் - பஞ்சாக்கரங்களையும், நா இயம்ப - நா உச்சரிக்க, சிரத்தினில் - சிரத்தின்கண், அமைத்த கரத்தொடும் - குவித்த கைகளொடும், நினை - நும்மை, யான் - அடியேன், தினம் - நாடோறும், வலம் புரியுமாறு-பிரதக்ஷிணஞ் செய்து வாழும்படி, அருளாய்-அருள் புரிவீராக; (எ - று.)

(வி - ரை) தேவரீரை மனோ வாக்குக் காயங்களால் வழிபடல் அருளல்வேண்டு மென்பார், 'கருத்திடைக் கண்டு எழுத்து நா வியம்பச் சிரத்தமைத்த கரத்தொடு வலம்புரியுமாறு அருளாய்' என்றனர். கண்டு புரியுமாறு எனக் கூட்டுக. 'கண்டு' என்பது கண்டுத் தியானித்தல் மேற்று. ஐந்தெழுத்து - பஞ்சாக்கரம். 'புரியுமாறு' என்பது ஆறீற்று வினையெச்சம். வாம் - மேன்மை; வேண்டுவன கொள்ளுதலுமாம். மதி இதுபொழுதும் வினைத்தளை அது தவழப்பெறுதல். கந்தரம்=கண்டம்+குகை. திரிகரணங்களும் நின் பணி செய்யவேண்டு மென்பது கருத்து. இவ் வருணாசலத்தை வலம் புரிவோர் அடையும் பயனை,

> "அந்தமலை வலம்புரிந்தோர் சிவனிருக்குங் கயிலையினி
> னேகும் போதிற்
> சந்திரன்வெண் குடையெடுக்கு மிரவிவிளக் கெடுக்குமங்கை
> தருமந் தாங்கு
> மந்திரமே லிந்திரனூர் வழிக்குமலர்ப பாப்பிவொ
> னளைகைக் கோயான்
> வந்தனைசெய் தருகுவருங் கந்தமலர் மழைசொரிவர்
> வசுக்க டாமே."

என வரும் அருணாசலப் புராணத்தில் திருமலை வலம்புரி சருக்கத்தா னுணர்க.

16. பாரெலா மிகழு மிகழ்ச்சியும் புகழ்ச்சிப்
 பயனென வுணர்ந்துநா டொறுமா
ரூரனு ரவையி னிகழ்ந்தசொற் றுதியி
 னுவக்குநின் பதந்தொழ வருளா
யேருலா மண்டச் சுவர்மதின் மிசைப்பா
 விலங்குறு மண்டகோ ளகையாச்
சாருமா லயத்தி விலிங்கமாஞ் சோண
 சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) ஏர் உலாம் - அழகு பொருந்திய, அண்டம் சுவர் - இவ் வண்டச் சுவரே, மதில் - (ஆலயத்தின்) மதிலாகவும், இலங்குறும் அண்டம் கோளகை - பிரகாசிக்கின்ற அண்டத்தின் முடியே, மிசை பாவு ஆக-(அவ் வாலயத்தின்) மேற்பாவாகிய விமானமாகவும், சாரும் ஆலயத்தில்- சார்ந்துள்ள இவ் வண்ட மென்னும் ஆலயத்தில், இலிங்கம் ஆம்-இலிங்க வடிவமாக எழுந்தருளிய, சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, பார் எலாம் - உலக மெல்லாம், இகழும் இகழ்ச்சியும் - இகழ்கின்ற இகழ்ச்சி மொழியையும், புகழ்ச்சி பயன் என உணர்ந்து - புகழ்ச்சிப் பயனுடையனவாகத் தேவரீர் கொண்டருள்வீ ரெனத் தெளிந்து, ஆரூரன் - திருநாவலூரர், ஆர் அவையில் - (தக்கவர்கள்) நிறைந்த சபையின்கண், இகழ்ந்த சொல் - இகழ்ந்த சொற்களை, நாள்தொறும் - தினந்தோறும், துதியின் உவக்கும் - துதிபோல விரும்பி யருளுகின்ற, நின் பதம் - நுமது திருவடிகளை, தொழ அருளாய்-(அடியேன்) தொழத் திருவருள் பாலிப்பீராக; (எ-று.)

(வி - ரை) பார் - ஆகுபெயராய் உலகினரை யுணர்த்திற்று. 'இகழ்ச்சியும் புகழ்ச்சியும்' அவற்றின் சொற்களை யுணர்த்தினமையின் ஆகுபெயர். ஆரூரர் திருவெண்ணெய்நல்லூரில் மணப் பந்தரிலே "பித்தனோ பேயனோ" என்றிகழ்ந்தமையே யன்றி,

(திருவாரூரில்)

"வாழ்ந்து போதீரே" எனவும்,

(திருஓணகாந்தன்றளியில்)

"உங்களுக் காட்செய்ய மாட்டோம்" எனவும்,

(திருவொற்றியூரில்)

"மகத்திற் புக்கதோர் சனியெனக் காணாய்" எனவும்,

இவ்வண்ணம் பற்பல தலங்களில் துதித்தமை குறிப்பிப்பார், 'ஆரூர ராரவையி னிகழ்ந்தசொல்' என்றார். 'அவை' என்றது சுந்தரமூர்த்தி சுவாமிகளுக்குப் புத்தூரில் நடந்த திருமணப் பந்தரில் கூடிய பிராமணர்களது சபையை. 'உவக்கும்' என்னும் பெயரெச்சம் நின் என்பதன் முதல் வேற்றுமையாகிய நீ என்பதைக் கொண்டது. இகழ்ச்சியையும் புகழ்ச்சியாகக் கொள்ளும் தெய்வம் உம்மையல்லது கண்டிலே மாகையால் உமது திருவடி வழிபாடே வேண்டுமென்பார், 'நின்பதந் தொழ' என்றார்.

சிவபெருமான் மலைவடிவானமையின் அவ் வடிவுக் கியைந்த ஆலயம் இவ் வண்டமே என்பார், 'அண்டச் சுவர்மதின் மிசைப்பா விலங்குறு மண்டகோ ளகையாச் சாருமாலயம்' என்றார். மிசைப்பா - மேற்பரப்பு. 'மிசைப்பால்' எனப் பாடங்கொள்ளின் 'மேற்பகுதி' எனப் பொருளுரைக்க. அண்டகோளகை - அண்டமுடி. கோளகையா - ஈறு கெட்ட வினையெச்சம். நாடொறும் உவக்கும் என இயையும். நாடொறும் நின்பதந் தொழ என முடித்தலுமாம்.

"அடியா ரிழைத்த பிழைகோடி நெஞ்சி
லறியாத வாதி முதல்வன்" என்றபடி,

அடியார்கள் செய்யுங் குற்றமுங் குணமாகக்கொள்ளுங் கருணையு யாதலால் அடியேனுக்கும் அருளவேண்டு மென்பது கருத்து.

## ஆரூரன் அவையின் இகழ்ந்த சரிதம்:—

சுந்தரமூர்த்திநாயனார் திருமுனைப்பாடி நாட்டிலே, திருநாவலூரிலே, ஆதிசைவ குலத்திலே, சடையனார் என்னும் சிவாசாரியருக்கு, அவருடைய மனைவியாராகிய கற்பிலே சிறந்த இசைஞானியார் என்பவரிடத்திலே அவதரித்தனர். தாய்தந்தையர் நம்பியாரூரர் என்று நாமகரணஞ் செய்தார்கள். இவரது அரிய செயலைக் கண்டு திருமுனைப்பாடி நாட்டரசராகிய நரசிங்கமுனையரென்பவர் தாய்தந்தையார் உத்தரவு பெற்று இவரை வளர்த்துக்கொண்டார். நம்பியாரூரர் உபநயனஞ் செய்யப்பெற்று, வேதங்களை அத்தியயனஞ் செய்து, சகல கலைகளிலும் மகா பாண்டித்திய முடையராய், விவாகஞ் செய்தற்குரிய பருவத்தை அடைந்தார். அது கண்டு சடையனார், ஆதிசைவ குலத்திலே சடங்கவி சிவாசாரியருடைய புத்திரியை மணம் பேசி முடித்து, விவாகத்திற்குச் சுபதினமும் சுபமுகூர்த்தமும் நிச்சயித்துப் புத்தூருக்குச் சென்று நம்பியாரூரரை அலங்கரித்துத் திருக்கலியாணப் பந்தலில் ஆசனத்திலிருக்கச்செய்தார். நம்பியாரூரர், ஆசனத்திலிருக்குந் தறுவாயில் சிவபெருமான், தாம் கைலாசத்திலே இவ் வாலாலசுந்தரர்க்கு வாக்களித்தபடி, அவரை ஆட்கொள்ளும்பொருட்டு ஒரு வயோதிகப் பிராமண வடிவங் கொண்டு அவ் விடத்திற் கெழுந்தருளி, யாவரும்காண நம்பியாரூரரை நோக்கி, "எனக்கும் உனக்கும் ஒரு வழக்கிருக்கின்றது; அது முடிந்தபின்பே நீ விவாகம் நடத்தல்வேண்டும்" என்று அருளிச்செய்தார். நம்பியாரூரர் திடுக்கிட்டு, "அங்ஙனம் உளதேல் அதனை முடித்தன்றி யான் விவாகஞ் செய்யேன்" என்று சொல்ல, அந்தஐயர் யாவரையும் நோக்கி "இந்தத் திருநாவலூரன் எனக்கு அடியவன்; இவன் பாட்டன் எனக்கு எழுதித் தந்த அடிமை யோலை இதுவே" என்றார்.

உடனே நம்பியாரூரர் "பிராமணருக்குப் பிராமணர் அடிமையாதல் எங்கேனும் உண்டோ? நீ பித்தனோ, பேயனோ" என்று

சொல்லி இகழ்ந்து, அவர் கையிலிருக்கும் ஓலையை வாங்கிப் பறித்துக் கிழித்தெறிந்தனர். ஐயர், சுந்தரமூர்த்தியைப் பிடித்துக்கொண்டு சபையாரை நோக்கி "இது முறையோ" என்று ஓலமிட, சபையார்கள், பிராமணரே! நீர் எங்குள்ளவர்? என்ன, ஐயர் "நாம் இருப்பது இந்தத் திருவெண்ணெய்நல்லூர்" என்றனர். பிராமணர்கள் யாவரும் "நீர் இருப்பது இந்தத் திருவெண்ணெய் நல்லூராயின், அங்குத் தானே இவ் வழக்கைப் பேசித் தீர்ப்புச் செய்ய வாரும்" என்று சொல்ல, ஐயர் அவ்வாறே அவர்களுடன் திருவெண்ணெய் நல்லூருக்குச் சென்று பிராமணர்களுடைய சபையில் நடந்தவற்றைச் சொல்லி, மூல வோலையைக் காட்டி, அனுபவம் லிகிதம் சாக்ஷி என்னும் மூன்றினாலும் வழக்கை வென்று, தமக்கு இருப்பிடமாக அவ் வூரில் திருவருட்டுறை என்னும் சிவாலயத்தைக் காட்டி, அதனுட் புகுந்து மறைந்தனர். சென்ற பிராமணர்கள் யாவரும் ஐயரைக் காணாது திகைத்து நின்றார்கள். அப்போது, சுந்தரமூர்த்தி நாயனார், தம்முடன் வல் வழக்கிட்டுத் தம்மை அடிமைகொண்டவர் சிவபெருமானே எனத் தேர்ந்து, அத்தியந்த ஆசையோடு அவரைத் தனியே தொடர்ந்து போய்க் கூப்பிட, பெருமான் இடபவாகனத்தின்மேல் உமாதேவி சமேதராய் வெளிப்பட்டுச், சுந்தரமூர்த்தி நாயனாருக்கு, "நீ நமக்குத் தொண்டனாயிருந்து பெண்கள்மேல் இச்சை வைத்ததினால் நம்முடைய ஆஞ்ஞையின்படி பூமியிலே பிறந்தாய்; இப்பொழுது துன்பத்தைத் தருகின்ற சமுசாரபந்தமானது உன்னைத் தொடராதபடி நாமே வலிய வந்து ஆட்கொண்டோம்; நம்முடன் நீ வலிந்து பேசினமையால் வன்றொண்டன் என்னும் பெயர் பெற்றனை; நமக்கு அருச்சனையாவது பாட்டேயாதலின் "தமிழ்ப் பாக்களைப் பாடுக" என்று அருளிச்செய்தனர். அதற்கு நாயனார் "என் சொல்லிப் பாடுகேன்?" என்ன, கடவுள் "நீ முன்னே என்னைப் பித்த னென்றாய்; அதனையே அடியாக வைத்துப் பாடுக" என்ன உடனே நாயனார்,

"பித்தாபிறை சூடிபெரு மானேயரு ளாளா
வெத்தான்மற வாதேநினைக் கின்றேன்மனத் துன்னை
வைத்தாய்பெண்ணைத் தென்பால்வெண் ணெய்நல்லூ ரருட்டுறையு
ளத்தாவுனக் காளாயினி யல்லேனென லாமே."

என்னுந் திருப்பதிகம் பாடியருளினார். சிவபெருமான், நாயனாரை நோக்கி, "தொண்டனே! நீ இன்னும் நமது புகழைக் குறித்துப் பலவகையாகப் பாடுக" என்று அருள் செய்து மறைந்தனர். அங்ஙனமே சிவஸ்தலங்கடோறும் நாயனார் சென்று அவர் புகழைப் பாடினதே யன்றி,

(திருவாரூரில்)

'மீளா வடிமை யுமக்கே யாளாய்ப் பிறரை வேண்டாதே
மூளாத் தீப்போ லுள்ளே கனன்று முகத்தான் மிகவாடி
ஆளா யிருக்கு மடியார் தங்க ளல்லல் சொன்னக்கால்
வாளாங் கிருப்பீர் திருவா ரூரில் வாழ்ந்து போதீரே."எனவும்,

(திரு ஓணகாந்தன்றளியில்)

'திங்கடங்கு சடையின்மேலோர் திரைகள்வந்து புரளவீசும்
கங்கையாளேல் வாய்திறவாள் கணபதியேல் வயிறுதாரி
அங்கைவேலோன் குமரன்பிள்ளை தேவியார் கோற்றட்டியாளார்
உங்களுக்காட் செய்யமாட்டோ மோணகாந்தன் றளியுளீரே."

எனவும்,

(திருவொற்றியூரில்)

"மகத்திற் புக்கதோர் சனியெனக் கானாய்
மைந்தனே மணியே மணவாளா
அகத்திற் பெண்டுக ளொன்று சொன்னா
லழையேற்போ குருடா வெனத்தரியேன்

முகத்திற் கண்ணிழுந் தெங்ஙனம் வாழ்வேன்
முக்கணா முறையோ மறையோதி
உகைக்குந் தண்கடலோதம்வந் துலவு
மொற்றியூ ரெனுமூ ருறைவானே."

எனவும் இகழ்ந்தமையை யறிக என்பதாம்.

17. இந்தியங் கரண முடலம்வே றாக்கி
யிருண்மலப் படலமுங் கீறிக்
கந்தமு மலரு மெனநினை யென்னிற்
காண்பறக் காணுநா ளுளதோ
வந்தொரு களிறு முழுவையுங் கொன்ற
மலிபகை தவிர்ப்பவெண் ணிகந்த
தந்தியும் புலியும் வளர்த்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) வந்த ஒரு களிறும் உழுவையும் - (தம்மிடத்தும் பகைத்து) வந்த களிறொன்றும் புலியொன்றும், கொன்ற - கொன்றருளிய, மலி பகை தவிர்ப்ப - மிக்க பகையினை நீக்கிக் கொள்வதற்கே, எண் இகந்த-அளவிறந்த, தந்தியும் புலியும்-யானைகளையும் புலிகளையும், வளர்த்திடும் - வளர்த்திடுகின்ற, சோண சைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, இந்தியம் கரணம் உடலம் - பஞ்சேந்திரியம் அந்தக்கரணம் தேகம் ஆகிய இவற்றினை, வேறு ஆக்கி - (யானல்லவென்று) வேறுபடுத்தி, இருள் மலம் படலமும் - இருண்ட ஆணவமல மறைப்பினையும், கீறி - சேதித்து, நினை என்னில்-நும்மை என்னுள்ளே, கந்தமும் மலரும் என - மணமும் மலரும் போல, காண்பு அற - ஒன்றுமைப்பட, காணும் நாள் உளதோ - (ஊனக்கண்ணாலன்றி ஞானக் கண்ணால்) காணுங் காலமும் உண்டோ? (அறியேன்); (எ-று.)

(வி - ரை) இந்தியம் - இந்திரியம் என்பதன் சிதைவு; அவையாவன-மெய் வாய் கண் மூக்குச் செவி என்பனவாம். கர ணம் - மனம் புத்தி சித்தம் அகங்காரம். வெருக்குதல் - யானல்ல வென்று வெருக்குதல். இருண்மலம் - ஆணவமலம். படலம் - மறைப்பு. இருண்மலப் படலம்-ஆணவமலக் கூட்டமுமாம்; (படலம்- கூட்டம்.) ஆணவம், மாயை, காமியம் ஆகிய இம்மூன்றும் இருண் மலம் எனப்பட்டது. துவித பாவனை யற்றாலன்றி வீடு கூடாதெ ன்பார், 'கந்தமு மலரு மெனநினை யென்னிற் காண்பறக் காணுநா ளுளதோ' என்றார். கந்தம் - சிவத்திற்கும், மலர் - ஆன்மாவிற் கும் ஒப்பு என்க. அறியாமையால் ஆன்மாவென அபிமானிக்கப் பட்டிருந்த இந்திரியாதிகளை வெருக்கி, அவ் வபிமானத்திற்குச் சாதனமாயிருந்த இருண்மலப் படலத்தையும் கீறி, கந்தம் மலரில் அபேதமாக ஒற்றித்து நிற்றல்போல,ஆன்மாவில் தேவரீர் அங்ஙன மாக ஒற்றித்து நிற்றலைக் காணுமாறு அருளவேண்டும் என்ப தாம். காண்பறக் காணுதல் - துவித பாவனை யின்றிக் காணுதல். வெருக்கிக் கீறிக் காணும் நாள் என இயையும். 'வந்தொரு களிறு' என்பதில் பெயரெச்சத் தகரம் தொக்கது.

(திருக்குறள் - ௫௯)
"புகழ்புரிந் தில்லிலோர்க் கில்லை."

என்புழிப்போல. வந்த ஒரு களிறு என்க. களிறு - யானை. களிறென்றது கண்டிக் கயாசுரனை. இழிவு நோக்கி அஃறிணை யாற் கூறினார். உழுவை-புலி; தாருகவன முனிவர் யாகத்தினின் றுஞ் செலுத்திய புலி. துவித பாவனை யற்றாலன்றி வீடு கூடா தென்பது கருத்து. 'எண்ணிறந்த' எனவும் பாடம்.

சிவபெருமான் களிறும் உழுவையும் கொன்ற சரிதம்:—

முன்னொரு காலத்தில் கயாசுரன் என்னும் அசுரனொ ருவன் பிரமனை நோக்கித் தவஞ் செய்து அளவற்ற செல்வத்தையும் பெ

பெருமானொழிய மற்றவரை யெல்லாம் வெல்லத் தகுந்த வலிமையும் பெற்றான். அவன் உலகத்திலுள்ள சகல பிராணிகளையும் வருத்திக்கொண்டே வந்து காசியை யடைந்தான். அவனைக் கண்ட அந்த நகர வாசிகளும் மற்றையோரும் அஞ்சி யோடி விசுவநாதர் ஆலயத்தை யடைந்து முறையிட, அவர் அந்த யானை யுருவை யுடைய அவுணனைக் கொன்று அவன் தோலை யுரித்து அதனை உடலில் போர்த்துக்கொண்டு முன்போலவே ஆலயத்தில் எழுந்தருளி, அவர்களுடைய அச்சத்தை யொழித்தருளினர் என்பதனு லறிக:

தேவதாரு முனிவர் சிவபத்தியில்லாராய்த் 'தவமே சிறந்தது' என்றும், அவர் பன்னியர் 'கற்பே யுயர்ந்தது' என்றும் கருதி ஒருவரையும் மதியா தொழுகுவதை விலக்கச் சிவபிரான் பிக்ஷாடன வடிவமும், திருமால் மோகினி வடிவமுங் கொண்டு தாருவன மடைந்தனர். முனிவர் மோகினியைக் கண்டு தவநிலை விடுத்துக் காம மேலீட்டால் தத்தம் மனைவிமாரை நாடிச் சென்றனர். முனி மங்கையர் தம் வீதியில் திகம்பரராய் உள்ளாளக் கீதம் பாடும் பிக்ஷாடனரைக் கண்டு மையல்கொண்டு மதி மயங்கி உடை தளர, வளை சிதற வருந்தி நின்றனர். முனிவர்கள் தம் தவத்தை யழித்ததும் தம் மங்கையர் கற்பை யொழித்ததும் சிவபிரானே யென்றுணர்ந்து பலவாறு சபிக்க, அச் சாபங்கள் சிவபெருமானை யணுகாமையின், அபிசார யாகஞ் செய்து அதிற் றோன்றிய புலி முதலியவற்றை விடுப்ப, அவை இறைவனைக் கொல்ல அடைய, இறைவன் அப் புலியைக் கொன்று உரித்து அதன் றோலை இடையில் உடுத்தும், மானைக் கையி லேற்றும், முயலகனைக் காலின் மிதித்தும், மற்றவற்றை உடலி லணிந்தும் அடக்கினர் என்பதாம்.

**18.** முழங்குவண் டினங்கள் விருந்துணு மலங்கன்
மொய்குழன் மகளிர்தம் மயலாற்
புழுங்குமென் றனைநின் றிருவடி நிழலிற்
புகவிடுத் தளிக்குநா ளுளதோ

வழங்குவெண் டிரையா றவிர்சடை காப்ப
மணிமுடி நின்றிழிந் திடல்போற்
றழங்குவெள் ளருவி யிழிந்தொளிர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) அவிர் சடை காப்ப - விளங்கும் சடை மாத்திரம் மறையாகிற்க, வெள் திரை வழங்கு ஆறு - வெள்ளிய அலைகளைக் கொழிக்கும் கங்காநதி, மணி முடி நின்று - (மறைவின்றி) அழகிய முடியிலிருந்து, இழிந்திடல் போல் - ஒழுகுதல்போல, தழங்கு வெள் அருவி-ஒலிக்கின்ற வெள்ளிய அருவிகள், இழிந்து ஒளிர் - இழிந்து திகழும், சோணசைலனே கைலை நாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, முழங்கு வண்டு இனங்கள் - இசை பாடும் வண்டுக் கூட்டங்கள், விருந்து உணும்-புதிதாக வுண்ணும், அலங்கல் மொய் குழல் - (தேனிறைந்த) பூமாலை சூடிய கூந்தலையுடைய, மகளிர்தம் மயலால் - மங்கையர் மயக்கத்தால், புழுங்கும் என்றனை - வெதும்பும் என்னை, நின் திருவடி நிழலில் - நுமது திருவடி நிழலில், புக விடுத்து - அடைவித்து, அளிக்கும் நாள் உளதோ - காக்குங் காலமும் உண்டோ? (அறியேன்); (எ - று.)

(வி - ரை) சடை காணப்படுத லில்லாது அருவி மாத்திரம் காணப்படுதலால், இங்ஙனம் கூறினார். 'அவிர் சடைகாப்ப' என்பதற்கு 'விளங்காநின்ற சடையின்கண் ஒளித்துவைக்க' எனப் பொருள் கோடலும் ஒன்று. விருந்துணும் - (தேனை) விருந்தாக வுண்ணும் எனினுமாம். அலங்கல் - பூமாலை. 'மணி முடி' என்புழி 'இரத்தினங்களையுடைய முடி' எனலுமாம். நாரியர் மயலால் வரும் காமாதி துன்பந் தருதலால், 'புழுங்கும்' எனவும், தியான சமாதிகளா லடையுந் திருவடி பேரின்பம் தருதலால், 'நிழல்' எனவுந் தோன்ற, 'மகளிர்தம் மயலாற் புழுங்குமென் றனைநின் றிருவடி நிழலில்' என்றார். அப் புழுக்கத்தை யொழிக்கத் தேவரீர் திரு

வருள் செய்யவேண்டு மென்பார், 'புகலிடத் தளிக்குநா ளுளதோ' என்றார். புழுங்குவோனுக்கு நிழல் இன்றியமையாத தென்பதாம்.

19. குன்றுதோ றாடுங் குமரனே யெனவுங்
கொடுஞ்சிலை மதனவே ளெனவும்
புன்றொழின் மனிதர்ப் புகழ்ந்துபாழ்க் கிறைக்கும்
புலமைதீர்த் தெனக்கருள் புரியா
யொன்றொரு தினந்தோட் குட்குழைந் தனமென்
றுறுதுநா டொறுமக மேரு
தன்றலை தாழ்ப்ப வளர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) ஒன்று ஒரு தினம் - (திரிபுர சங்காரமான) ஒரு தினத்தில், தோட்கு உள் - இச் சிவபெருமான் திருக்கரத்துக்குள்ளே, குழைந்தனம் என்று-(வில்லாகக்)குழையப் பெற்றேம் என்று நினைவுற்று, உறுது - (அவ்வளவில் மகிழ்ச்சி) உற்றிராமல், மக மேரு - மகமேருமலை, நாள்தோறும் - தினந்தோறும், தன் தலை தாழ்ப்ப - தனது தலையைத் தாழ்த்துக் குனியுமாறு, வளர்ந்து எழும் - வளர்ந்தோங்கிய, சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, புன் தொழில் மனிதர் - அற்பச் செய்கையுடைய மனிதர்களை, குன்றுதோறு ஆடும் குமரனே எனவும் - மலைகடோறும் திருவிளையாடல் புரியும் குமாரக் கடவுளை ஒப்பானவனே என்றும், கொடும் சிலை மதனவேள் எனவும்- வளைந்த கருப்புவில்லை யேந்திய மன்மதனே என்றும், புகழ்ந்து- வியந்து கூறி, பாழ்க்கு இறைக்கும் - வீணே போக்கும், புலமை தீர்த்து-புலமைத்தன்மையை யொழித்து, எனக்கு அருள் புரியாய்- அடியேனுக்கு (நும்மைப் பாடும் பரிசு தந்து) அருள் புரியவேண்டும்; (எ - று.)

(வி - ரை) 'குன்றுதோறு' என்புழித் தோறும் - இடப் பன்மையை யுணர்த்துவதோ ரிடைச்சொல்; இதில் உம்மை செய்யுள் விகாரத்தாற் றொக்கது. முருகக்கடவுளையும் மன்மதனையும் ஒப்புக் கூறுவது இளமையும் அழகும் பற்றி என்க. இனி, வனப்பு, அறிவு, திறம், அருள் முதலியவற்றில் ஒருவரை யுயர்த்தக் கருதினால் முருகனை யுவமை கூறுவது இயல்பென்பார், 'குன்றுதோறாடுங் குமரனே' என்றார் எனக் கூறலும் ஒன்று. இதனை,

(தணிகைப் புராணம்)

"திருவி னங்கிய வனப்பினி லறிவினிற் றிறத்தினி லருடன்னி
லொருவர் தங்களை யுயர்த்தமுன் முருகனை யுவமை யாக்குவர்"

என வரும் செய்யுளா னுணர்க. இன்னும் ஆடவர்க்கு உவமை கூறப்படுவாரை,

"திருமான் முருக னளகேச னிந்திரன் சேண்முகிலே
பொருமாரன் வீமன் விசயன்மெய்க் கன்னன் புகழ்த்தருமன்
வருமான சீவகன் மூவேழு வள்ளல் வனசநிதி
தருமா மணிசங்கந் தேனுவைப் போலவுஞ் சாற்றுவதே."

என வரும் செய்யுளானும் அறிக. முருகன் - கட்டிளமையோன். 'கொடுஞ்சிலை' என்புழிக் கொடுமை வளைவுமேற்று; 'கொடுமையாகிய சிலை' எனினுமாம். மதனவேள் - இருபெயர்ப் பண்புத் தொகை; பிறிதினியைபு நீக்கிய விசேடணமுமாம்; முருகவேளை யொழித்தலான். 'மனிதர்ப் புகழ்ந்து' என்புழி, உயர்திணைப் பெயரி னீற்றுமெய் பொது விதிப்படி முடியாது இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சியாதலால், இயல்பாக வேண்டுமிடத்து விகாரமாயிற்று. கற்றதனாலாய பயன் கடவுளை வணங்கலே: அங்ஙனம் வணங்காக்கால் அக் கல்வியாற் பயனில்லை யென்பது தோன்றப், 'பாழ்க் கிறைக்கும் புலமை' என்றார். இதனை,

"நலமி லாதானை நல்லனே யென்று
நரைத்த மாந்தரை யிளையனே
குலமி லாதானைக் குலவனே யென்று
கூறி னுங்கொடுப் பாரிலைப்
புலமெ லாம்வெறி கமழும் பூம்புக
லூரைப் பாடுமின் புலவீர்கா
ளலம ராதம ருலக மாள்வதற்
கியாது மையுற வில்லையே."

என்னும் தேவாரத்தானு முணர்க. பாழ்க் கிறைத்தல் - வீண் போக்குதல்மேற்று. இனி, 'பாழ்' என்பது ஆகுபெயராய்ப் பாழ்ப் பட்ட பயிராதிகளை உணர்த்தியதெனக் கொண்டு, 'இறைத்தல்' 'நீரிறைத்தல்' என்னினும் ஒன்று. இனி, நாமுதலிய திரிகரணங் களையும் நரனிடத்திற் செலுத்தாது பரனிடத்திற் செலுத்த வேண்டு மென்பது தோன்ற,

"புன்றொழின் மனிதர்ப் புகழ்ந்து பாழ்க் கிறைக்கும்
புலமை தீர்த்தெனக் கருள்புரியாய்."

என்றார் எனினுமாம்.

ஒன்று ஒரு தினம்-நாண் மிகுதியின்மைக் குறிப்பினின்றது. திரிபுராதிகளை யழிக்கப்பொருந்திய ஒரு தினமுமாம். இனி, முன் னேர்ந்த திரிபுரசங்கார காலம் எனினும் ஒன்று. அப் பொருட்கு வினைத்தொகை. ஒன்றுதல் - பொருந்துதல். தோள்-கை; ஆகு பெயர். குழைதல்-வில்லாக வளைதல். 'முன் வலியிலே தோற்றுக் குழைவுற்றோம், இப்பொழுதும் வடிவிலே தோற்றுச் சிறுமையுற் றோம்' எனத் தினமும் நாணத்தால் மேரு தலை குனிந்து நிற்க, அதிக வுன்னதமாக வளர்ந்தோங்கியது சோணசைல மென்பது கருத்து.

20\. வெண்டிரு நீறு புனையுமா தவர்க்கு
விருந்துசெய் துறும்பெரு மிடியுங்
கொண்டநல் விரதத் திளைக்கும்யாக் கையுமிக்
கொடியனேற் கருளுநா ளுளதோ
வண்டுழுங் குவளை மலர்த்தடஞ் சுனையின்
மற்றைவா னவர்க்குரித் தன்றித்
தண்டியுண் மகிழ்ந்து கொளமலர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) வண்டு உழும் குவளைமலர் - வண்டுகள் கிண்டி யூதும் குவளைமலர்கள், தட சுனையில் - அகன்ற சுனைகளிலே, மற்றை வானவர்க்கு - பிற தேவர்களுக்கு, உரித்து அன்றி - உரிமையாகாது, சண்டி உள் மகிழ்ந்து - சண்டேசுர நாயனார் மனமகிழ்ந்து, கொள - தரித்துக்கொள்ளும்படி, மலர் சோணசைலனே கைலைநாயகனே - மலர்கின்ற சோணசைலரே! கைலைநாயகரே!, வெள் திருநீறு-வெண்ணிற விபூதியை, புனையும் மா தவர்க்கு- தரிக்கும் மிக்க தவமுடைய அன்பர்களுக்கு, விருந்து செய்து-அரிதாக அமுது செய்வித்து, உறும் பெரு மிடியும்-(அச் செலவினால்) சேர்ந்த பெரிய தரித்திரமும், கொண்ட நல் விரதத்து - மேற்கொண்ட நல்ல விரதானுஷ்டானத்தாலே, இளைக்கும் யாக்கையும்- மெலியும் சரீரத்தையும், இ கொடியனேற்கு-இத் தீமையேனுக்கு, அருளும் நாள் உளதோ - தந்தருளும் நாளும் உளதோ? (அடியேன்.); (எ-று.)

(வி - ரை) கற்பம் அநுகற்பகம் உபகற்பம் என்னுந் திருநீற்றின் வகையுள் கொடிய பிணியுண்டாக்கும் நீலநிற விபூதியும், வாழ் நாளைப் போக்கும் கருமைநிற மிகுந்த செம்மைநிற விபூதியும், புகழை நீக்கும் சிவப்புநிற விபூதியும் வறுமை யுண்டாக்கும் மஞ்சள்நிற விபூதியும் ஒழித்து, அளவில்லாத புண்ணியத்தைத் தரும் வெண்

ணிற விபூதியைத் தரித்தல்வேண்டு மென்பார், 'வெண்டிருநீறு புனையும்' என்றார். இதனை,

"கற்ப மென்றது கற்ப மென்றுப கற்பமென் றுஞ்
சிற்ப நன்றிரு நீறுமூன் றுகு மித்திறத்தின்
முற்ப கர்ந்தவெண் பொடிக ளுக்குரிய வாய்மொழிந்த
நற்ப சுக்கணம் வசுக்க ணங்காள் சிலமொழிவாம்." எனவும்

"நீலந் தீப்பிணி தூம்பிர மாயுக நீக்குங்
கோல மாஞ்சிவப் பிசையின்மை பீதநல் குரவா
மேலு மித்திற நிறம்படா தெடுத்திடு நீற்றிற்
சாலும் வெண்ணிற மெண்ணிலாப் புண்ணியந் தருமால்."

எனவும் வரும் செய்யுட்களா னுணர்க. இக் கருத்து,

(தணிகை - இராமனருள்பெறு படலம் - ௧௪, ௧௫, ௧௬)

"உலகருக் குரிய மறைவழி வேட்டு
மோங்கிய விரசையிற் பொடித்த
விலகுவெண் ணீறு வைதிக பூதி
யின்னது புத்தியே யளிக்கும்
மலமறு சத்தி பதிந்தவர்க் குரித்தாய்
வயங்குமா கமவழி தீக்கை
நிலவுசெங் கனலிற் பொடித்தவெண் பூதி
நிகரிலாச் சைவவெண் ணீறு."

"முத்தியே யன்றிப் புத்தியும் வெஃகின்
முகிழ்க்குமாற் சைவவான் பூதி
யத்தகு சைவ மூன்றதாங் கற்ப
மனுகற்ப முபகற்ப மென்ன

வுத்தம மான கற்பமென் றுரைப்ப
துரைத்தவான் மயமனு வோடும்
பைத்ததா மரைமெல் லடையின்வா னேற்றுப்
பரந்தமேல் வழும்பினை நீக்கி."

"கூட்டுமா னைந்தும் பொழிந்துறப் பிசைந்து
குவால்படத் திரட்டியோ மத்தி
னீட்டுநா வெரியிட் டெடுத்தரித் தாளா
நிறையமைத் திருத்தியோம் புவதாங்
காட்டுலா மயத்தை யிடித்துமுன் போலக்
காண்பதுதா மனுகற்ப மற்ற
தோட்டேரி மேய்ந்து வனம்படு நீற்றை
யுரைத்தவா றுஞற்றுவ தாகும்."

என வருஞ் செய்யுட்களில் விசிதமாகும்.

தரித்திர மில்லாமையும் சரீர மெலியாமையுமே உலகினர் விரும்பாநிற்க, அவ் வுலகினர் கொள்கைக்கு மாறாக அடியார் தமக் கமுது செய்வித்தலா லுண்டாகும் வறுமையையும் அரியவிரதாதிக ளால் இளைக்கும் யாக்கையும் தமக்கு அருளல்வேண்டு மென்பார், 'மா தவர்க்கு விருந்துசெய் துறும்பெரு மிடியும், கொண்டநல் விரதத் திளைக்கும்யாக் கையுமிக் கொடியனேற் கருளுநா ளுளதோ' என்றார். இதனை,

(திருஞான சம்பந்தர் புராணம்-௧௦அஎ)

மண்ணி னிற்பிறந் தார்பெறும் பயன்மதி சூடும்
அண்ண லாரடி யார்தமை யமுதுசெய் வித்தல்
கண்ணி னாலவர் நல்விழாப் பொலிவுகண் டார்த
லுண்மை யாமெனி லுலகர்முன் வருகென வுரைப்பார்."

எனவரும் செய்யுளானு முணர்க.

இனி, தானத்திற் சிறந்தது அடியாருக்குச் செய்யு மன்ன தானமும், தவத்திற் சிறந்தது சிவவிரதமு மென்பது தோன்ற, 'மா தவர்க்கு விருந்துசெய் தறும்பெரு மிடியும், கொண்டநல் விரதத் திளைக்குமியாக் கையு மளிக்குநா ளாதோ' என்றார் எனினு மமையும்.

அன்னதானம் சிறந்தமையை [திருவிளையாடற் புராணம் மூர்த்தி விசேடப்படலம் 8 - வது செய்யுள்,

"பொருப்பினுட் டலைமை யெய்தும் பொன்னெடுங் குடுமி மேரு
தருக்களிற் றலைமை சாருந் தண்ணருந் தெய்வ தாரு
விருப்புறு வேள்வி தம்முள் மேம்படும் புரவி மேதம்
அருட்படு தானந் தம்முள் விழுமிதா மன்ன தானம்."

என வருஞ் செய்யுளானு முணர்க.

சிவபெருமானே இம் மலைவடிவா யிருத்தலால், அவர்மேற் றோன்று மலர்களெல்லாம் அருச்சித்த புட்பங்களைப்போல நிர்மாலியமே யாதலால், ஏனைத் தேவருக்கு உரிமையின்றிச் சண்டிகேசுரருக்கே உரிமையாதல் தோன்றச் 'சண்டியுண் மகிழ்ந்து கொள' என்றார். 'இக் கொடியனேற்கு' என்புழி இகரச் சுட்டு இழிவுப் பொருளது. குவளைமலர் சுனையில் மலர் சோணசைல மெனக் கூட்டுக.

21. வந்துமா மறலி யெனதுயி ருண்பான்
 மயிலையுண் சிரவினிற் கின்றான்
முந்திநீ யெனையா ளத்தவா ரிதியின்
 மூழ்குற விடுத்தருள் புரியாய்
நந்துமா மலையே யென்றுசா திப்ப
 நனைமலர் வேங்கையு மசோகுஞ்
சந்துமேன் முளைப்பச் செய்துகொள் சோண
 சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) நந்தும் மா மலையே என்று சாதிப்ப - (சிவசொரூப மெனக் கொள்ளாது) வளர்ந்த பெரிய மலையே யென்று (அபக்குவிகள்) உறுதி கூறும்படி, நனை மலர் வேங்கையும்-தேன் செறிந்த மலர்களையுடைய வேங்கையும், அசோகும் சந்தும் - அசோகும் சந்தனமுமாகிய மரங்களை, மேல் முளைப்ப செய்துகொள் - மேலே உதிப்பச் செய்துகொண்டு விளங்கும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, மா மறலி - கரிய இயமன், வந்து-ஓடிவந்து, எனது உயிர் உண்பான் - எனது உயிரை அபகரிக்கும்படி, மயிலை உண் சிரலின் - மீனைக் கவர நிற்கும் மீன்குத்திப் பறவைபோல, நிற்கின்றான் - நிற்கின்றனன்; நீ முந்தி - தேவரீர் (அவ் வியமன் கவரும்) முன்னரே, எனை - அடியேனை, ஆனந்தம் வாரிதியில் - இன்பக் கடலில், மூழ்குற விடுத்து - மூழ்கிடச் செய்து, அருள் புரியாய் - அருள் புரிவீராக; (எ - று.)

(வி-ரை) வந்து மா மறலி - மா மறலி வந்து என மாற்றுக. வந்து - பகைத்து வந்துமாம். மா - கருமை; மா மறலி - சரீர பருமையுடைய இயமன் என்னலும் ஒன்று. இத் தேகம் ஒரு கணத்தும் நில்லாது அழியு மென்பது தோன்ற, 'மாமறலி யெனதுயிருண்பான் மயிலையுண் சிரலின் நிற்கின்றான்' என்றார். இதை,

"சென்றன சென்றன வாழ்நாள் செறுத்துடன்
வந்தது வந்தது கூற்று."

என்பதனால் அறிக.

மறலி - இயமன். மயிலை-மீன். சிரல் - மீன்குத்திப் பறவை. அம் மீன் நீரினழுந்தினல்லது சிச்சிலிக்குத் தப்பாததுபோல, பேரின்பத்தி னழுந்தினல்லது இயமனுக்குத் தப்பி யுய்த லின்றென்பது தோன்ற, 'முந்திநீ யெனையா னந்தவா ரிதியின் மூழ்குற

விடுத்தருள் புரியாய்' என்றார். நீருண் மூழ்கிய மீனைக் கவரும் ஆற்ற லில்லாது மீன்குத்திப் பறவை விலகுதல் போல், ஆனந்த சமுத்திரத்தில் மூழ்கிய என்னைக் கவரும் ஆற்ற லில்லாது இயம னகலும்படி அவ் வானந்த சமுத்திரத்தில் மூழ்குவித்தல்வேண்டு மென்பதாம்; எனவும், இச் சோணசைலம் சிவ சொரூபமே யெனப் பக்குவிகள் கொள்ளுதற்குக் கருவியாகச் சுருதிகளை நாட்டியதுபோல, அபக்குவிகள் மலையே யென்று சாதித்தற் குக் கருவியாக வேங்கையாதிய மரங்களை மேலே முளைப்பச் செய்துகொண்டு விளங்காநின்றனர் என்பதாம்; எனவும் கருத் தாகக் கொள்க. நந்தல்-வளர்தல். 'நந்துமாமலை' என்பதை வினைத் தொகையாகக் கோடலும் ஒன்று. 'நந்துளான் மலையே யென்று சாதிப்ப' என்னும் பாடத்திற்குத் திருமால் அடிதேடத் தொடங் கிய காலத்துச் செல்லச் செல்ல மலையாகவே காணப்பட்டமை பால் 'மலை யென்றே சாதிப்ப'எனப் பொருளுரைக்க. சாதித்தல்- சிவ சொரூபமாத லுண்மை தெளியாது உரைத்தல். நந்துளான் - சங்கினையுடைய திருமால். நந்து-சங்கு. சாதிப்பச் செய்துகொண் ணனக் கூட்டுக.

22\. பூமழை யமரர் பொழியமர் தவர்கட்
புனன்மறு கிடைப்பொடி யடக்கத்
தூமொழி மனைநீ தூதுபோம் பயனிற்
சொற்பதர் புடைத்திளைக் கின்றேன்
யாமுணர் மிகுபே ருருவமாய் வரினு
மிருவரு முணர்த்திடி னன்றித்
தாமுணர் கிலரென் றெழுந்துயர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) யாம் உணர் - நாம் (எல்லாராலும் எளிமையில்) அறியத்தக்க, மிகு பேர் உருவம் ஆய் வரினும்-மிக்க பெரிய வடிவ

ளுடையேமாய்த் தோன்றினும், இருவரும் - (பிரமவிட்டுணுக்கள்) இருவரும், உணர்த்திடின் அன்றி-(அகத்தே) உணர்த்தினு லன்றி, தாம் உணர்கிலர் என்று-தாமுணரும் ஆற்ற லிலரென்று, எழுந்து உயர் - (காட்டுவான்) ஓங்கி யுயர்ந்து நிற்கும், சோண சைலனே கைலைநாயகனே - சோணசைலரே!, கைலைநாயகரே!, அமரர் பூ மழை பொழிய-தேவர்கள் புஷ்ப வருஷம் வருஷிக்க வும், மா தவர் கண் புனல் மறுகிடை பொடி அடக்க-சிறந்த தவசிக ளுடைய கண்கள் (ஆராமையாற் பொழிந்த) ஆனந்த அருவி திரு வீதியிலுள்ள பொடிகளை அடக்கவும், தூ மொழி மனை-செவ்விய மொழிகளையுடைய பரவைநாச்சியாரது திருமனைக்கு, நீ தூது போம் - தேவரீர் தூதுபோகக் கூடிய, பயன் இல் - (அவ்வளவு) பொருட் பிரயோசன மில்லாத, சொல் பதர் - சொற்களாகிய பதர்களை, புடைத்து இளைக்கின்றேன் - தூற்றித் தூற்றி மெலி கின்றனன் (என் செய்வேன்!); (எ - று.)

(வி - ரை) சுந்தரமூர்த்தி நாயனாரது திருப்பாடல்களைக் கேட்டு அவர் விரும்பியபடி சென்ற சிவபெருமானது பெருமை தோன்ற, 'பூமழை யமரர் பொழிய மாதவர் கட்புனல் மறுகிடைப் பொடியடக்க' என்றார். பூ மழை - மலர் மாரி. அமரர் - தேவர்; மரணமில்லாதவர்: ஓர் கற்பத்தி லழியுமவரை 'அமரர்' என்றது மங்கல வழக்கு. கட்புனல் - கண்களினின்றும் பொழியாநின்ற ஆனந்தநீர் எனினுமாம். மறுகு-வீதி. பொடி-தூளி. அந் நாயனா ரது பொருட்பய னிரம்பிய சொற்களையுடைய துதியின் பெருமை தோன்றவும், அப்படிப்பட்ட பொருட்பயன் சிறிதும் பெறாத சொற்களாகிய பதர்களையுடைய தமது துதியின் தாழ்மை தோன்றவும், 'தூமொழி மனைநீ தூதுபோம் பயனில் சொற் பதர் புடைத்திளைக் கின்றேன்' என்றார். தூ மொழி - தூய்மை யாகிய மொழியையுடையாள் (பரவை நாச்சியார்); இது பண்புத்

தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. தூய்மை - பரிசுத்தம்; ஈண்டு இனிமை மேற்றுமாம்.

தூதுபோம் பயன் - தூதுபோதற் கேதுவாகிய பொருட் சிறப்பு. 'போம்பயன்' எனக் காரியத்தைக் காரணமாக வுபசரித்தார்; (தூதுபோதல் - காரியம், பயனில் சொல் - காரணம்.) 'போம்' என்னும் பெயரெச்சம் காரியப்பொருட்டு எனினு மமையும், 'நின்னைக் காணும் அவா' என்புழிப்போல. போகும் என்பது 'போம்' என்றாயது. புடைத்தல் - ஈண்டுச் செய்யுளாகத் தொடுத்த லின் மேற்று. 'பதர்' என்றதற் கேற்பப் 'புடைத்து' என்றார். நாயன்மார், தமது திருப்பாடல்கள் பெருமானை தூதுஞ் செல்லு தற் கேதுவாகிய பொருட்பய னிரம்பிய சொற்களை யுடைமையின் வேண்டிய பெற்றனர்; யானோ, அப்படிப்பட்ட பொருட்பயன் சிறிதும் பெறாது சொற்களாகிய பதர்களைப் புடைத்துப் பயன் யாதும் பெறாது மெலியாநின்றே னெனத் தம்மை யிழித்துக் கூறினவாறு. தனது தற்போதக் குறைவு தோன்றச் 'சொற் பதர் புடைத் திளைக்கின்றேன்' எனக் கூறுதலும் ஒன்று. 'யாம்' என்றது சிவபெருமானை. 'இருவர்' என்றது பிரமவிட்டுணுக் களை. 'உணர்கிலர்' என்பதில், கில் - ஆற்றலை யுணர்த்துவதோ ரிடைச்சொல். இவ் வெதிர்மறைமுற்றில் எதிர்மறை ஆகார விடைநிலை புணர்ந்து கெட்டது. இனி, 'கில்' என்பதனையே எதிர்மறையோடு ஆற்றலை யுணர்த்துவதோ ரிடைச்சொல் எனக் கோடலும் ஒன்று. யாம் வரினும் (யாம்) உணர்த்திடி னன்றி இரு வரும் தாமுணர்ந்திலர் என இயையும்.

23. கழைமொழிக் கொடியோர்க் கேவல்செய் துடலங்
கமருகு மமிழ்தின்மங் குறுமல்
விழைவறத் துறந்துன் றிருவடிக் கமலம்
விழைகுநர்க் கேவல்செய் திலனே

மழைமதக் களிநல் யானைமத் தகம்பாய்
வள்ளுகி ரோடுசெல் லரிமா
தழைசிறைச் சிம்புள் கொண்டெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) மழை மதம்-மழைபோலும் மதப் பெருக்கும், களி-செருக்குமுடைய, நல் யானை-(உத்தம) இலக்கண மமைந்த யானையினது, மத்தகம் பாய்-மத்தகத்திலே செலுத்திய, வள் உகிரோடு-கூரிய நகங்களோடு, செல் அரிமா-செல்கின்ற சிங்கத்தை, தழை சிறை சிம்புள் - தழைந்த சிறகுகளையுடைய சரபப்புள், கொண்டு எழும் - (அநிசுலபமாகக் காலி னகங்களால்) தூக்கிக்கொண்டெழுகின்ற, சோணசைலனே கைலைநாயகனே-சோணசைலரே! கைலைநாயகரே!, கழை மொழி கொடியோர்க்கு - கரும்பினிரசம் போலும் இனிய மொழிகளையுடைய பூங்கொடி போல்வாரான பெண்களுக்கு, ஏவல் செய்து - (அவரேவிய) ஏவற்றொழிலைச் செய்து, உடலம்-(அரிதிற் பெற்ற) இச் சரீரம், கமர் உகும்-பூமியின் வெடிப்பி லூற்றிய, அமிழ்தின் மங்குறுமல் - அமிர்தம்போல வீணே யழியாமல், விழைவு அற துறந்து - சகல பற்றுக்களையும் முற்ற வொழித்து, உன் திருவடி கமலம் - நுமது திருவடித் தாமரைகளையே, விழைகுநர்க்கு - விரும்பி நிற்கும் சரணர்கட்கு, ஏவல் செய்திலனே - திருத்தொண்டு செய்யாதவனாயினேன் (என் செய்வேன்!); (எ -று.)

(வி - ரை) கழை-கரும்பு; அத னிரசத்தை யுணர்த்தினமையால் ஆகுபெயர்; (பொருளாகுபெயர்.) கொடியோர் - பூங்கொடி போல்வாரான பெண்கள்; 'கொடுமையோர்' என மற்றொரு பொருள். 'கொடியோர்' என்பதற் கேற்க 'மங்குறுமல்' என வருந் திக் கூறினர். உடலம் - 'அம்' சாரியை. கமர் - பூமியின் வெடிப்பு. அறத் துறத்தல்-முற்றத் துறத்தல். 'விழைகுநர்' என்புழி, ந-

பெய ரிடைநிலை. அடியார் பெருமை தோன்ற, 'ஏவல் செய்தில னே' என இரங்கிக் கூறினார். இனி, கொடியோர்க்கு ஏவல் செய்தலினால் துன்ப மென்பது தோன்ற, 'மங்குறாமல்' என்றும், அடியார்க்கேவல் செய்தலினால் இன்பமென்பது தோன்ற, 'ஏவல் செய்திலனே' என்றுங் கூறினார் எனக் கோடலும் ஒன்று. மிர்தத்தை யொழித்து இன்ப மளிக்கும் அமிர்தத்தைப் பெற்றோர் தவறால் அதை வெடிப்பிற் சிந்திப் பயன்படா தொழிந்தாற்போல, இம்மானுட சரீரமும் தான் பெறும் பயனை பெறாது வீண் படாத படி நின் அடியார்கட்கு ஏவல் செய்தல்வேண்டும் என்பதாம்.

மழை மதம் - மழைபோலும் மதம்; இது உவமைத்தொகை. மதக்களி - மதமயக்கமுமாம். களி - செருக்கு. நல்யானை - உத்தம இலக்கண மமைந்த யானை. 'நல்' என்றது உத்தம இலக்கணத்தை. உத்தம இலக்கணமாவது நான்கு கால்களும் கோசமும் துதிக்கை யும் வாலுமாகிய ஏழுறுப்பும் நிலத்திலே தோய்தலும், காலில் வெண்மையான நகமும், வால் கால் உடம்பு துதிக்கை கொம்பு என்னு மிவற்றால் கொல்ல வல்லதும், தறுகண்மையும், செம்புள்ளி வாய்ந்த மத்தகமும், சுளகுபோன்ற செவியும், மும்மதமும் உடைத் தா யிருத்தல் முதலியவாம். இவற்றை,

(பிங்கல நிகண்டு - அநுபோக வகை-௩௬௨)

"காலோர் நான்குந் தனிக்கையுங் கோசமும்
வாலுறப்போ டேழு மாநிலந் தோய்வதும்
பாலுஞ் சங்கும் போலுங் காலுகிர்
காலினுந் தன்றனிக் கையினு மெய்யினும்
வாலினு மருப்பினும் கோறல்வல் லதுவா
யேழ்முழ முயர்ந்தொன் பான்முழ நீண்டு
பதின்மூன் றுமுழஞ் சுற்றுடைத் தாகித்
தீயுமிழ் சிறுகண்ணுஞ் செம்புகரு முடைத்தாய்

முன்ன் புயர்ந்து பின்ன் பணிந்தாய
தியானை யரசுவா வாகு மென்ப."

என வரும் சூத்திரத்தா னுணர்க.

பாய் உகிர் - வினைத்தொகை, வள் - கூர்மை. இது

"வயிரமும் வள்ளும் வசியும் வையு
மயிலு நிசிதமு மள்ளும் பூவு
மாருங் கூர்மையி னபிதா னம்மே."

என வரும் பிங்கலந்தைச் சூத்திரத்தான் விளங்கும். 'அரிமா' என்புழி இரண்டனுருபு விரிக்க; அரிமா - சிங்கம்; இருபெய ரொட்டு. சிம்புள்-சரபம்; (எண்காற்புள்). யானை மத்தகத்திலே பாய்ந்த நகத்தோடு அதனை யூர்ந்து செல்லுஞ் சிங்கத்தை அந்த யானையோடு சரபங்கொண்டு செல்லும்; அப்படிப்பட்ட சாரலை யுடையது இச் சோணசைல மென்பதாம் இதனால் யானைக்குப் பகை சிங்கமெனவும், அச் சிங்கத்திற்குப் பகை சரபமெனவும் விளங்குதலே யன்றி, எளியாரை வலியா ரடித்தால் அவ் வலியா ரைத் தெய்வமடிக்கும் என்னும் முதுரையும் விளங்குதல் காண்க.

**24.** கார்தரு சுருண்மென் குழற்சிறு நுதற்பூங்
கணைபுரை மதாரிக் கருங்கட்
டார்தரு குவவுக் கொங்கைநுண் மருங்குற்
றையலார் மையலென் றொழிவேன்
சீர்தரு மணியி னணிந்தன வெனக்கட்
செவியுமொண் கேழலின் மருப்புஞ்
சார்தரு முலக விளக்கெனுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) சீர் தரும் அணியின்-(முன்னே) சிறப்பமைந்த ஆப ரண மாக, அணிந்தன என-தரிக்கப்பட்டனபோல, கட்செவியும் *

பாம்பும், ஒண் கேழலின் மருப்பும் - அழகிய பன்றிக்கொம்பும், சார்தரும் - (இப்பொழுதும்) நிலைபெற்ற, உலகவிளக்கு எனும் - உலக தீபமெனக் கொண்டாடப் பெறும், சோணசைலனே கைலை நாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, கார்தரு - மேகம் போல, சுருள் மெல் குழல் - சுருளுற்ற மெல்லிய கூந்தலும், சிறு நுதல்-சிறிய நெற்றியும், பூ கணை புரை - கூரிய அம்பை யொத்த, மதர் அரி கருகண் - களிப்பு வாய்ந்த செவ்வரி பரந்த பெரிய கண்களும், தார் தரு குவவு கொங்கை - ஆரம் பூண்ட குவிந்த தனங்களும், நுண் மருங்குல் தையலார்-சிறிய இடையுமுடைய மகளிரால் (அணுகும்), மையல் என்று ஒழிவேன் - மயக்கங்களை என்று நீங்கப் பெறுவேன்?; (எ - று.)

(வி-ரை) 'கார்தரு' என்பதில் 'தரு'வும், 'அணிந்தனவென' என்பதில் 'என'வும் உவமவுருபிடைச் சொற்கள். சுருள் குழல் - வினைத்தொகை. 'பூங்கணைபுரைகண்' என்பதற்கு 'மன்மத பாணங்களுள் தாமரைமலர் குவளைமலர்களையொத்த கண்' எனலுமாம். மகளிர்க்கு மூன்றுறுப்புச் சிறுத்தும் மூன்றுறுப்புப் பெருத்துமிருத்தல் உத்தமவிலக்கண மாதலால், 'கார்தருசுருண்மென்குழற் சிறுநுதற்பூங்கணை புரைமதரரிக் கருங்கட், டார்தரு குவவுக்கொங்கை நுண்மருங்குற் றையலார்' என்றார். அவையாவன: சிறு நுதல், சிற்றிடை, சிற்றடி; தடங்கண், தடமுலை, தடவல்குல் என்பனவாம். இவற்றை,

(கலித்தொகை - முல்லைக்கலி)

"இகல்வேந்தன் சேனை யிறுத்தவாய் போல
நகிலல்குற் கண்ணென மூவழிப் பெருகி
நுதலடி நுசுப்பென மூவழிச் சிறுகிக்
கவலையாற் காமனும் படையிடு வனப்பினோ
டகலாங்க ணளைமாறி மலமந்து பெயருங்கா

னகைவல்லேன் யானென்றென் னுயிரோடு படைதொட்ட
விகலாட்டி நின்னை யெவன்பிழைத்தே னெல்லாயான்.

என வருஞ் செய்யுளா னுணர்க.

அணிந்தன என்பதில் படுவிகுதி தொக்கது. கட்செவி - கண்களையே செவியாகவுடையது (பாம்பு); அன்மொழிப் பெயர். ‘ஒண்மை, தையல்’ என்பன அழகு என்னும் பொருளன. ‘சார்தரும்’, ‘உலக விளக்கெனும்’ என்னும் பெயரெச்சங்கள் ‘சோணசைலன்’ என்னும் ஒரு பெயரைக் கொண்டன. உலகவிளக்கு - உலகனைத்திற்கும் மலவிருளை யோட்டி ஞானப்பிரகாசத்தை உண்டாக்குந் தீபம்.

25. நந்துகைத் தலத்து நாரணற் கயற்கு
நவமணிக் கரகநீ ரிருந்து
மைந்துறக் குறித்து மாட்டியுங் காண்பான்
மதித்திடா துனையெதிர்ந் திலரே
யைந்துகைத் தனிக்கோட் டொருபெருங் களிறு
மறுமுகம் படைத்தகே சரியுந்
தந்தெமைப் புரக்குங் கருணைகூர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) ஐந்து கை தனி கோடு ஒரு பெரு களிறும் - ஐந்து திருக்கரங்களையும் ஒற்றைக் கொம்பையுமுடைய (விநாயகக் கடவுளென்னும்) ஒரு பெரிய யானையினையும், அறுமுகம் படைத்த கேசரியும்-ஆறுமுகங்களையுடைய (சுப்பிரமணியக் கடவுளென்னும்) சிங்கத்தினையும், தந்து - தோற்றுவித்தருளி, எமை புரக்கும்-அடிமையாகிய எங்களைக் காத்தருளும், கருணை கூர்-கிருபை மிக்க, சோணசைலனே கைலைநாயகனே-சோணசைலரே! கைலைநாயகரே!, நாரணற்கு நந்து - விஷ்ணுமூர்த்திக்குச் சங்கமும்,

அயற்கு நவமணி கரகநீர்-பிரமதேவருக்கு நவமணி குயின்ற கமண்டல தீர்த்தமும், கை தலத்து இருந்தும் - திருக்கரங்களினிடத்து வாய்ந்திருந்தும், மைந்து உற குறித்தும் ஆட்டியும் - (முறையே உமது சந்நிதியில்) வளமை பொருந்த ஊதியும் திருமுடியில் திருமஞ்சனஞ் செய்தும், காண்பான்-(பத்தியால் உம்மைக்)காண, மதித்திடாது - மதியாது, உனை எதிர்ந்திலர் - (அகங்காரித்தமையால்) உம்மைக் காணாராயினர் (என்னே!); (எ-று.)

(வி - ரை) தேவரீரது சந்நிதானத்தில் பிரணவ நாதந் தோன்றுஞ் சங்கத்தொனி செய்தும் திருமஞ்சன முதலிய அபிடேகஞ் செய்தும் பூசிக்கின்ற அடியார்களுக்குத் தரிசனந் தருவது நிச்சயமாயிருக்க, அங்ஙனம் செய்யாது அவ் விருவரும் அகங்கரித்துத் தேடப் புக்கனர் என்பார், 'நந்துகைத் தலத்து நாரணற் கயற்கு நவமணிக் கரகநீ ரிருந்து, மைந்துறக் குறித்து மாட்டியுங் காண்பான் மதித்திடா துனையெதிர்ந் திலரே' என்றார். 'நந்து' என்றது பாஞ்சசந்நியத்தை. கரகம்-கமண்டலம். மைந்துறக் குறித்தல் - பலங்கொண்டு தொனிப்பித்தல். நாரணற்குக் கைத்தலத்து நந்திருந்தும் 'குறித்தும்' என்றும், அயற்குக் கைத்தலத்து நீரிருந்தும் 'ஆட்டியும்' என்றும் கூட்டிப் பொருள் கொள்க. இனி,

அன்பர்க் கெளியரும் அல்லார்க் கரியருமாதல் தோன்றக், 'குறித்தும் ஆட்டியும் காண்பான் மதித்திடாது, உனை யெதிர்ந்திலரே' என்றார் எனினுமாம். காண்பான் - காண; பானீற்று வினையெச்சம்.

26\. வினையருும் புகலிக் கிறைமணப் பந்தர்
 விருந்தினுக் குதவிமேலன் மூந்நிற்
றுனையிரந் திடுவான் வந்தனன் பதநீ
 யுதவியென் றுயரொழித் தருளாா

யினியபைந் தமிழின் பொதியமால் வரைபோ
 லிசைக்குரு காதிம மலையின்
றனையையின் றீஞ்சொற் குருகுறுஞ் சோண
 சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) இனிய பை தமிழின் - இனிய பசிய தமிழினை யுடைய, மால் பொதியம் வரைபோல் - பெரிய பொதிய மலை போல, இசைக்கு உருகாது - இராகத்திற்கு உருகாமல், இமம் மலையின் - பனிமலையின், தனையையின் - புத்திரியாராகிய அம்பி கையின், தீம் சொற்கு - இனிய சொற்கு, உருகுறும் - இளகுந் தன்மை வாய்ந்த, சோணசைலனே கைலைநாயகனே - சோண சைலரே! கைலைநாயகரே!, வினை அரு புகலிக்கு இறை - வினை யற்ற சீர்காழிக்குத் தலைவராகிய ஞானசம்பந்தப் பிள்ளையார், மணம் பந்தர் விருந்தினுக்கு - தமது திருமணப்பந்தரி லளித்த முத்தி விருந்தினுக்கு, உதவிலேன் - யான் அடையாமற் போயி னேன்; முந்திற்று - (அது அடியேன் இச் சரீர மெடுத்தற்கு) முற்காலத்தது (ஆயினமையின்), உனை இரந்திடுவான் வந்தனன்- தேவரீரை வேண்டி (அம் முத்தி பெற) அடைந்தனன்; நீ பதம் உதவி - தேவரீர் உமது பதவியளித்து, என் துயர் ஒழித்து-எனது துயரத்தை யொழித்து, அருளாய் - அருளல்வேண்டும்; (எ - று.)

(வி - ரை) 'வினையரும்' என்புழி 'அருமை' ஈண்டு இன்மை மேற்று. புகலி ஆளுடைய பிள்ளையாரால் சிறப்பெய்திற்றென்பார், 'புகலிக்கிறை' என்றார். புகலி - சீர்காழி. 'இறை' என்றது திரு ஞானசம்பந்தரை. மணப்பந்தர் என்றது ஆச்சாபுரத்தில் திருஞான சம்பந்தருக்கு நிகழ்ந்த திருமணப் பந்தரை. பந்தர் - பந்தல் என்ப தன் போலி. விருந்து - புதுமை; அது பண்பாகுபெயராய்ப் புதி தாண்பிக்கும் முத்தி யின்பத்தைச் சுட்டி நின்றது. உதவல் - தரு ணத்தில் அடையப் பெறுதல். சீர்காழிக்குத் தலைவராகிய திருஞான

சம்பந்தமூர்த்தி நாயனுர், திருமணங் காணவந்தவர் பரிசனர் நகர வாசிகளாதியரையே யன்றிப் பூப்படைந் தொதுங்கி நின்ற ஓர் கணிகையையும் சோதியிற் கலப்பித்துத் தாம் கலந்தாராதலின், யானும் அங்கிருப்பின் பிரார்த்தனை யின்றியே அச் சிவபதம் பெற் றிருப்பன்; அது முந்தினமையின் தேவரீரை யாசிக்கலாயிற்று என்பார், 'வினையரும் புகலிக்கிறை மணப்பந்தர் விருந்தினுக் குத விலேன் முந்திற்,றுனையிரந்திடுவான் வந்தனன்' என்றூர். இதனை,

ஆச்சாபுரப் புராணம்

"பொழில்புடைசூழ்ந் திடுபுகலிக் கவுணியர்தங்
குலத்துதித்த புனித ரந்த
வெழின்மருவு காரிகைதன் முகநோக்கிப்
பெருநெருப்புக் கீர மின்றூஞ்
செழுமையுறு மைந்தெழுத்தி னுருவதுவா
மினையநெடுந் தீர்த்த மூழ்கித்
தழல்வடிவாய் விளங்குபெருஞ் சோதியிடைப்
புகுதியெனச் சாற்றி னூரால்."

"இன்னவகை மணங்காண வந்தவருந்
தவர்களுட னின்ப வீடு
தன்னையுற நினைந்தனைய மாதலத்தி
னிடையினிது சார்ந்து ளோரு
மன்னுறச்சென் றடைந்ததற்பி னனையாரு
மெழிற்காழி வள்ள லார்தா
மின்னிடைப்பூங் கோதையுடன் சென்றனைய
சோதியினுண் மேவி னூரால்."

என்னும் செய்யுட்களானு முணர்க. இவ் வாசிரியரும் இக் கருத் துப்பற்றியே,

"வாட்டுபவங் கொல்புகலி வண்புலவன் பேரின்ப
வீட்டுபவங் கொள்ளைகொள விட்டநாட்—கேட்டுவரா
தெப்பிறப்பி லெங்ஙனிருந் தேதுபுரிந் தெய்த்தேனோ
வொப்பிறப்பில் வெங்கையுடை யோய்."

எனப் பிறரும் கூறியுள்ளார். அகத்தியனார் இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்த ஞான்று அவர் இசைக்கு உருகிய பொதியமலைபோலாது, சிவபெருமானே மலைவடிவா யிருத்த லின் அம்பிகையின் இனிய சொற்கு உருகு மியல்பினர் என்பார், 'பொதியமால் வரைபோ லிசைக்குரு காதிம மலையின்றனையை யின் தீஞ்சொற் குருகுறுஞ் சோணசைலனே' என்றார். 'இம மலையின் றனையை' என்றது பனி மலையின் புத்திரியாகிய அம்பி கையை; (தனையை - புத்திரி). பிறவிக்குரிய அவாத்துன்புற்ற அடியேன் அவ் விருந்திற்கு உதவிலனேனும் இன்று தேவரீரது பத மிரத்தலால் அருளல்வேண்டு மென்பது கருத்து. பதம் - பதவி; திருவடியுமாம்.

## பொதியமலை இசைக்குருகிய சரிதம்:—

இசையிலே தருக்கிய நாரதருக்கு அதனை யொழிக்க நினைத்த திருமால் மேருவில் தவம் புரியும் ஆஞ்சநேயரிடம் வேறு காரியங் குறித் தனுப்பலும், மகதியாழினை வாங்கி மேக ராகக் குறிஞ்சி யைப் பாடி அம் மலையை உருகுவித்து வீணையை வைக்க இறுகிய பின்பு அவ்வாறு உருகப்பாடி அவ் வீணையை யெடுக்க முடியாமல் நாரதர் தோற்றார்" என இசைநூலார் கூறுவது போலப் பொதிய மும், அகத்தியனார் தன்கணிருந்து, இராவணனைக் கந்தருவத் தாற் பிணித்து, இராக்கதரை ஆண்டு இயங்காமை விலக்கிய ஞான்று அவர் பாடிய இசையால் உருகியதுபோலாம். இது, 'தேவ ரெல்லாருங் கூடி, யாஞ்சேர விருத்தலின் மேரு தாழ்ந்து

தென்றிசை உயர்ந்தது; இதற்கு அகத்தியனாரே ஆண்டிருத்தற் குரியர்' என்று அவரை வேண்டிக்கொள்ள, அவருந் தென்றிசைக் கட் போதுகின்றவர் கங்கையா ருழைச்சென்று காவிரியாரை வாங்கிக்கொண்டு, பின்னர் யமதக்கினியாருழைச் சென்று அவர் மகனார் திரணதூமாக்கினியாரை வாங்கிக்கொண்டு, புலத்தியனா ருழைச் சென்று அவருடன் பிறந்த குமரியார் உலோபாமுத் திரையாரை அவர் கொடுப்ப நீரேற்று இரீஇப் பெயர்ந்து, துவரா பதிப் போந்து நிலங் கடந்த நெடுமுடி யண்ணல் வழிக்கண் அரசர் பதினெண்மரையும் பதினெண்கோடி வேளிருள்ளிட்டாரையும் அருவாளரையும் கொண்டுபோந்து, காடு கெடுத்து நாடாக்கிப் பொதியின்கணிருந்து, இராவணனைக் கந்தருவத்தாற் பிணித்து, இராக்கதரை ஆண்டு இயங்காமை விலக்கித் திரணதூமாக்கினியா ராகிய தொல்காப்பியனாரை நோக்கி, "நீ சென்று குமரியாரைக் கொண்டு வருக" எனக் கூற, அவரும் "எம்பெருமாட்டியை எங்ஙனம் கொண்டுவருவல்" என்றார்க்கு, "முன்னாகப் பின்னாக நாற்கோல் நீளம் அகலம் நின்றுகொண்டு வருக" என்ன, அவரும் அங்ஙனங் கொண்டுவருவழி, வையை நீர் கடுகிக் குமரியாரை ஈர்த்துக்கொண்டு போகத் தொல்காப்பியனார் கட்டளை யிறந்து சென்று ஓர் வெதிர்ங்கோலை முறித்து நீட்ட, அது பற்றி யேறி னார்; அது குற்றமென்று அகத்தியனார் குமரியாரையுந் தொல் காப்பியனாரையுஞ் சுவர்க்கம் புகாப்பீரெனச் சபித்தார்; "யாங்கள் ஒரு குற்றமும் செய்யாதிருக்க எங்களைச் சபித்தமையான் எம் பெருமானுஞ் சுவர்க்கம் புகாப்பிர்" என அவர் அகத்தியனாரைச் சபித்தார். அதனான் அவர் வெகுண்டாராதலின் அவன் செய்த நூலைக் கேளற்க வென்றா ரென்க." எனவரும் தொல்காப்பியம்-சிறப்புப் பாயிரம்-நச்சினார்க்கினியம் உரை விசேடத்தில் நன்கு விளங்கும்.

27. பெண்ணருங் கலமே யமுதமே யெனப்பெண்
பேதையர்ப் புகழ்ந்தவந் திரிவேன்
பண்ணுறுந் தொடர்பிற் பித்தவென் கினுநீ
பயன்றர லறிந்துநிற் புகழேன்
கண்ணுறுங் கவின்கூ ரவயவங் கரந்துங்
கதிர்களு றுயிரங் கோடித்
தண்ணிறங் கரவா துயர்ந்தெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) கண்ணுறும் - காணப்படும், கவின் கூர் - அழகு மிக்க, அவயவம் கரந்தும் - அவயவங்களை மறைத்தும், நூறுயிரம் கோடி கதிர்கள் - இலக்கங் கோடி சூரியர்போலும், தண் நிறம் கரவாது - குளிர்ந்த ஒளியை மறையாது, உயர்ந்து எழும் - வளர் தோங்கிய, சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, பெண் பேதையர் - பெண்களுள்ளே மிக்க பேதைமையுடையரையும், பெண் அரு கலமே - பெண்களுக்குள் அரிய ஆபரணம் போல்பவரே!, அமுதமே என - அமுதம் போல் பவரே என்று, புகழ்ந்து அவம் திரிவேன் - புகழ்ந்து ஒரு பயனு மெய்தாது திரிகின்ற யான், பண் உறும் தொடர்பில்-இசையமை ந்த செய்யுட்களில், பித்த என்கினும் - பித்தனேயென்று உம்மை யழைக்கினும், நீ பயன் தரல் அறிந்தும் - விரும்பிய பயனைத் தேவரீர் அளித்தலை (ஆளுடைய நம்பிகள் திவ்விய சரிதத்தால் அறிந்துணர்ந்தும், நின் புகழேன்-உம்மைப் புகழ்ந்திலேன் (என் அறியாமை இருந்தவாறு என்சொல்வேன்); (எ - று.)

(வி - ரை) அருங்கலம், அமுது - உவமையாகுபெயர். 'பேதையர்ப் புகழ்ந்து' என்பது, உயர்திணைப் பெயரி னீற்றுமெய் பொது விதிப்படி முடியாது, இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சி யாதலால், இயல்பாகவேண்டுமிடத்து விகாரமாயிற்று. திரிவேன்-

வினைப்பெயர். மலரின் மணம்போலும் பாலின் சுவைபோலும் ஓசையோடு கூடிய செய்யுள்தான் செய்யுளிலக்கண மமையப்பெறு மென்பார், 'பண்ணுறுந் தொடர்பு' என்றார். தொடர்பு-செய்யுள் இதனை,

"இழுக்குடைய பாட்டிற் கிசைநன்று."

என மூதுரையாட்டியார் கூறியதனாலறிக. 'தொடர்பிற் பித்த' என்பது "பித்தா பிறைசூடி" என்னும் திருப்பாடலாதியவற்றைச் சுட்டிநின்றது. 'நிற்புகழேன்' என்பது "நின்னீ றியல்பாம்" என்னும் விதிப்படி முடியாது இரண்டாம் வேற்றுமைப் புணர்ச்சியாதலால் விகாரமாயிற்று. இது விகாரமொழியாதலால்,

"பொதுப்பெய ருயர்திணைப் பெயர்க ளீற்றுமெய்
வலிவரி னியல்பாம்"

என்னுஞ் சூத்திரத்துள் அடங்காதாயிற்று.

'கண்ணுறும்' என்பதற்குத் 'தியானிக்கப்படும்' எனினுமாம். கண்ணுறுதல் - தியானித்தல். ஒளியால் சூரியனை ஒப்பினும், இதமளித்தலில் சந்திரனை ஒத்தவரென்பது தோன்றக், 'கதிர்கள் நூறுயிரங் கோடி தண்ணிறம் கரவாது' என்றார். இதனை,

(பிரபுலிங்கலீலை - ஆரோகணகதி - உ.)

"தண்ணந் திங்களிற் றண்ணெனத் தண்கதிர்
வண்ணங் குன்றுறு ஞாயிறு"

என்பதனாலும் அறிக.

புகழத்தகாத பேதையரைப் புகழ்ந்து பிரயோசனமற்ற அடியேன் இகழ்ந்து பாடினு மரிய பயனைத் தருங் கருணாநிதியாகிய நின்னைப் புகழ்ந்து பயன்பெற வேண்டினேன் என்பதாம்.

28. உயங்குநூ லிடைப்பூங் கோதைய ரல்கு
லொளிமணிப் பாம்புநீண் டதலான்
மயங்குவேன் றனக்குன் பதமருந் துதவி
மயக்கமென் றொழித்தருள் புரிவாய்
முயங்குமா புகழ்ப்பூம் புகலியந் தணர்க்கு
முத்துவெண் பந்தரீந் தகல்வான்
றயங்குமீன் முத்துப் பந்தர்வாழ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) மா புகழ் முயங்கு-மிக்க சீர்த்தி தங்கிய, பூ புகலி அந்தணர்க்கு - அழகிய சீர்காழியி லவதரித்த திருஞானசம்பந்த மூர்த்தி நாயனாருக்கு, வெண் முத்து பந்தர் ஈந்து-வெண்முத்துக்களாலாகிய பந்தலைத் தந்தருளி, மீன் முத்து தயங்கும் - உடுக்கள் என்னும் முத்துக்கள் விளங்குகின்ற, அகல் வான் பந்தர் வாழ் - அகன்ற ஆகாயமாகிய பந்தரின்கீழ் வாழுகின்ற, சோணசைலனே கைலைநாயகனே-சோணசைலரே! கைலைநாயகரே!, உயங்கு நூல் இடை-துவளுகின்ற நூல்போன்ற இடையினையுடைய, பூ கோதையர்-மலர் சூடிய கூந்தலையுடைய மங்கையரது, அல்குல் ஒளி மணி பாம்பு - நிதம்பமென்னும் ஒளியமைந்த மணியினையுடைய பாம்பு, நீண்டு தலால் - தீண்டப்பெற்றமையால், மயங்குவேன் தனக்கு - மயக்கமெய்திக்கிடப்பேனாகிய எனக்கு, உன் பதம் மருந்து - நுமது திருவடியென்னும் மருந்தினை, உதவி - தந்து, மயக்கம் - அம் மயக்கத்தினை, என்று ஒழித்து-என்று நீக்கி, அருள் புரிவாய்-அருள் புரிவீரோ? (அறியேன்); (எ - று.)

(வி - ரை) உயங்கல் - துவளல். 'உயங்கு நூல் இடை பூ கோதையர்' என்பதற்கு, அசையாநின்ற நூலொத்த இடையினையும் மலர் சூடிய கூந்தலையுமுடைய மங்கையர் எனலுமாம்.

பேதைய ரல்குலின் அவாவானது விடம்போலத் தலையி லேறுத லின் அதனை, 'அல்குலொளரி மணிப்பாம்பு' என்றும், அதனால் மெய்யறிவு இழத்தலான், 'தீண்டுதலான் மயங்குவேன்றனக்கு' என்றும், அவ்வவாவெனும்விடத்தை யொழித்துப் பேரின்ப முதவ லாற் றிருவடியை, 'உன்பத மருந்துதவி மயக்கமென் றொழித் தருள்புரிவாய்' என்றும் கூறினர். அகல் வான்-அகன்ற ஆகாயம்; வினைத்தொகைநிலைத்தொடர். அறியுன்னத சொரூபாகிய இப் பெருமானுக்குப் பந்தராதற் குரியது ஆகாயமேயன்றி வேறின்மை யின் இங்ஙனம் விரித்தார் என்க.

## திருஞானசம்பந்தமூர்த்தி நாயனருக்கு முத்துப்பந்தரீந்த சரித்திர விவரம்:—

திருஞானசம்பந்தப் பிள்ளையார் திருவலஞ்சுழியை அடைந்து, சுவாமி தரிசனஞ் செய்துகொண்டிருக்கு நாளிலே, முதிர் வேனிற் காலம் வந்தது. அம் முதிர்வேனிற் காலத்திலே பிள்ளை யார் திருவலஞ்சுழியினின்றும் நீங்கி, திருப்பழையாறைக்குப் போதற்கு அடியார்கள் உடன் செல்லச் சென்றருளித் திருவாறை மேற்றளியை அடைந்து வணங்கி, திருச்சத்திமுற்றத்திற் சென்று சுவாமி தரிசனஞ் செய்துகொண்டு, திருப்பட்டீச்சுரத்திற்குப் போகப் புறப்பட்டார். அப்பொழுது வெய்யில் வெப்பத்தைத் தணிக்கும்பொருட்டு, பிள்ளையாருடைய திருமுடியின் மேலே, சிவபூதம் முத்துப்பந்தரை எடுத்து, "பட்டீசர் எம்மை விடுத் தருளினர்" என்று சொல்லிற்று. அந்தச் சொல்லும் முத்துப் பந்த ரும் ஆகாயத்திலே தோன்ற, பிள்ளையார் திருவருளைத் துதித்து, பூமியிலே விழுந்து நமஸ்கரித்தார். பிள்ளையாருடைய பரிசனங் கள் அந்த முத்துப் பந்தரைக் காம்பிலே பிடித்தார்கள். பிள்ளையார் அந்த முத்துப்பந்தர் நிழற்றச் சென்று திருப்பட்டீச்சுரத்தை யடைந்து சுவாமி தரிசனஞ் செய்தார் என்பதாம்.

திருப்பட்டீச்சுரம்

"பாடன்மறை சூடன்மதி பல்வளையொர்
பாகமதின் மூன்றோர்கணையால்
கூடவெரி யூட்டியெழில் காட்டிநிழல்
கூட்டுபொழில் சூழ்பழைசையுள்
மாடமழ பாடியுறை பட்டிசர
மேயகடி கட்டரவினர்
வேடநிலை கொண்டவரை வீடுநெறி
காட்டிவினை வீடுமவரே."

என்பது திருப்பதிகம்.

29. மெய்த்தவ ரடிக்குற் றேவலின் றிறத்தும்
விளங்குமா கமவுணர்ச் சியினும்
புத்தலர் கொடுநிற் பரவுபூ சையினும்
பொழுதுபோக் கெனக்கருள் புரிவாய்
முத்தமு மரவ மணிகளு மெறிந்து
முதிர்தினைப் புனத்தெயின் மடவார்
தத்தைகள் கடியுஞ் சாரலஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) முதிர் தினை புனத்து - விளைந்த தினைப்புனத்தில், எயின் மடவார்-(காவல் பூண்டுள்ள) வேட்டுவப் பெண்கள், முத்தமும் அரவம் மணிகளும் எறிந்து - முத்துக்களையும் நாகமணிகளையுமே (கற்களாக) வீசி, தத்தைகள் கடியும் - (அத் தினைக் கதிர்களைக் கவர வரும்) கிளிகளை யோட்டும், சாரல் அம் சோணசைலனே கைலைநாயகனே-சாரலினையுடைய அழகிய சோணசைலரே! கைலைநாயகரே!, மெய் தவர் அடி - உண்மைத் தவமுடைய பெரி

யோர்களின் திருவடிகளுக்கு, குற்றேவலின் திறத்தும் - சிற்றே
வல் செய்யும் வகையினும், விளங்கும் ஆகமம் உணர்ச்சியினும் -
(யாவராலும் அங்கீகரிக்கப்பட்டு) விளங்குகின்ற சிவாகமங்களை
ஆராய்ந்து தெளிதலினும், புது அலர் கொடு - அன்றலர்ந்த மலர்
களைக் கொண்டு, நின் பரவு பூசையினும் - தேவரீரை வழிபடும்
பூசைத்தொண்டினும், பொழுது போக்கு - காலம் கழித்து வாழும்
பேற்றினை, எனக்கு அருள் புரிவாய் - அடியேனுக்கு அளிப்பீ
ராக; (எ - று.)

(வி - ரை) அன்பர் பணி செய்தலே எளிதிற் சிவானந்தப்
பேற்றிற்கு ஏதுவாதலின், 'மெய்த்தவ ரடிக்குற் றேவலின் றிறத்
தும்' என்றும், பூசிக்கும் தனதியல்பையும் பூசிக்கப்படும் கடவு
ளியல்பையும், பூசித்தற்குரிய கருவிகளையும் விளக்கலின், 'விளங்கு
மா கமவுணர்ச் சியினும்' என்றும், அவ் வுணர்ச்சிக்குப் பயன் அதிற்
கூறியபடி வழிபடுதலே யாகலின், 'புத்தலர் கொடுநிற் பரவுபூ
சையினும்' என்றும், (புதுமை + அலர்). இவ்வாறு கழியாநாள்
பயனில் நாளாய் முடிதலின் இவற்றில், 'பொழுதுபோக் கெனக்
கருள் புரிவாய்' என்றும் கூறினார். முத்தமும் மணிகளும் எங்குங்
கிடத்தலின் கற்போலெறிந்து, தாமுயன்று விளைத்த தினைகவருங்
கிளியைக் கடிவாராயினாரென அம் மலைவளங் கூறியபடி. இதனை,

"வேட்டை மேற்புகு வார்க்குநல் வினையுந்த மடவார்
கூட்டம் வாய்க்குமச் சாரலிற் றினைக்குரற் கெய்துஞ்
சேட்டி ளங்கிளிக் குலங்களைத் தெரிவைமா ரோப்பும்
பாட்டி சைத்திற மொளியிருந் தனுதினம் பயிலும்." எனவும்,

"வரைக்குறக்கன் னியர்புனத்துக் குருகோட்டுங்
கவன்மணிக்கன் மருதத்தெண்ணீர்த்,
திரைக்கயத்தைத் திடர்செய்ய."

எனவும் வரும் ஸ்ரீ காஞ்சிப் புராணச் செய்யுட்களோடு ஒப்பிடுக. எயின்மடவார் - வேட்டுவப் பெண்கள். எயின் - வேட்டுவச் சாதி. இதனை,

"எயின்காண் கிளைப் பெயர்."

என்னும் நன்னூற் சூத்திரத்தா னுணர்க.

அடியாரிடத்துச் செய்யும் குற்றேவலும் ஆகம வுணர்ச்சியும் நின் பூசையுமாகிய நன் மார்க்கத்திற் பொழுது போக்காது துன் மார்க்கத்திற் கருத்தைச் செலுத்தி வீண் காலங் கழிக்காமையை யருளல்வேண்டு மென்பதாம்.

30. பாயும்வெண் டிரைப்பே ராழிசூ ழுலகிற்
பழமொழி யொழியமெய் யடியா
ராயுமென் மலரோர் மலையள வணிய
வமர்ந்தநின் கோலம்யான் மறவேன்
றூயவெண் மதியிற் களங்கமென் றுரைப்பச்
சூழ்பசுங் கொடிபயி லுருவச்
சாயைசென் றுறநின் றிலங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) தூய வெள் மதியில்-களங்க மில்லாத வெள்ளிய சந்திரனிடத்தில், களங்கம் என்று உரைப்ப - களங்கமென்று எவரும் சொல்லும்படி, சூழ் பசு கொடி உருவம் பயில் சாயை - படர்ந்துள்ள பசிய கொடிவடிவங்களிற் பொருந்திய சாயைகள், சென்று உற - சென்று படியும்வண்ணம், நின்று இலங்குறும் - ஓங்கி விளங்குகின்ற, சோணசைலனே கைலைநாயகனே-சோண சைலரே! கைலைநாயகரே!, பாயும் வெள் திரை-பரவிய வெள்ளிய அலைகளையுடைய, பேர் ஆழி சூழ்-பெரிய கடல் சூழ்ந்த, உலகில்-உலகின்கண், பழமொழி ஒழிய-(மலையளவு தெய்வத்திற்கு மலை

யளவு புஷ்பம் சாத்துவதுண்டோ? என்று கூறும்) பழமொழி நீங்க, மெய் அடியார் - உண்மைத் தொண்டர்கள், ஆயும் மெல் மலர் - ஆய்ந்தெடுக்கப்பட்ட மெல்லிய மலர்களை, ஓர் மலை அளவு - ஒரு மலை யளவே, அணிய - அருச்சித்து வணங்க, அமர்ந்த நின் கோலம் - எழுந்தருளிய தேவரீர் திருக்கோலத்தை, யான் மறவேன் - சிறியேன் மறக்கமாட்டேன்; (எ - று.)

(வி - ரை) பாய்தல் - தாவலுமாம். மலைமலையாகக் குவித்துச் சாத்துகின்றன ரெனவே, அத் தலத்துள்ள அடியவர் மிகுதியும், சந்திரன்பால் களங்கமெனக் கொடிச்சாயை படிகின்றதெனவே, மலையுன்னதமும் குறிப்பித்தவாறாயிற்று. மெய்யடியார் அணிய அமர்ந்த நின் கோலம் என இயையும். சர்வ பரிபூரண மாகின்ற சிவம் அன்பர் பூசையி லனுக்கிரக முகூர்த்தமாய்ப் பிரகாசிக்குமென்பது தோன்ற, ‘நின் கோலம் யான் மறவேன்’ என்றார்.

‘தூய வெண்மதி’ என்புழி தூய்மை ஈண்டுக் களங்கமின்மை மேற்று; சுத்தமுமாம். ‘பசுங்கொடி உருவம் பயில் சாயை’ என மாற்றுக. உருவம்-வடிவம். ‘பசிய கொடிக ளசையாநின்ற தோற்றத்தின் சாயை’ எனப் பொருள் கோடலும் ஒன்று. அப்பொருட்கு உருவம் - தோற்றம் என்க. மதியில் சாயையுற என்க. பழமொழியாவது, ‘‘மலையளவு சுவாமிக்கு மலையளவு சாத்துவா ருண்டோ?’’ என்பது. அம் மொழி யகல மலையளவாயுள்ள இக் கடவுளுக்குப் பல மலையளவாகவே மலர்களைச் சாத்துவரென அடியவர் மிகுதி குறித்தபடி.

31. நடமிடு பசும்பொற் புரவிமேற் கொண்டு
நளினமென் மலர்க்கரத் தெறிபூம்

படையொடு துரந்து வந்துமென் விடயப்
பகைப்புலி தனையெறிந் திலையே
யடிநடு நிழல்சென் றெழுகட லடைய
வகல்பெரும் புறத்துவா ரிதியிற்
றடமுடி நிழல்சென் றுறவளர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) அடி நடு நிழல் - அடி நிழலும் நடு நிழலும், எழு கடல் சென்று அடைய - எழு கடலளவும் சென்று சேரவும், அகல் பெரு புறத்து வாரிதியில் - அகன்ற பெரும்புறக் கடலில், தடம் முடி நிழல்-விசாலித்த முடிநிழல், சென்று உற - சேரவும், வளர் சோணசைலனே கைலைநாயகனே-ஓங்கிய சோணசைலரே! கைலைநாயகரே!, நடம் இடு - நடனஞ் செய்கின்ற, பசு புரவி மேற்கொண்டும் - பசிய பொன்னிறமுள்ள குதிரையி லாரோகணித்தும், நளினம் மலர்-தாமரை மலர்போன்ற, மெல் கரத்து - மெல்லிய திருக்கரத்தில், எறி பூ படையொடு-வீசத்தக்க அழகிய ஆயுதங்களைக் கொண்டு, துரந்து வந்தும் - துரத்தி வந்தும், என் விடயம் பகை புலிதனை-அடியேனது விடயப் பகைகளாகிய புலிகளை, எறிந்திலையே-வீசினீரில்லையே; (என்செய்வேன்!) (எ-று.)

(வி - ரை) இது பரிவேட்டை யுற்சவ கோலத்தை வியந்தபடி. குதிரைவீராதல் உமக்கியற்கையே யாகையால், இனியேனும் இங்ஙனம் வந்து எறிதல்வேண்டும் என்பதுபட நின்றது. குதிரை வீராதல் வாதவூரடிகள் பொருட்டு எனலும் ஒன்று. 'புரவி' என்றது வேதமாகிய புரவியை. 'கொண்டும்' என்புழி உம்மை விரிக்காது, வந்து என்புழி மாத்திரம் உம்மை விரித்து, சுயரூபமாகத் தோன்றி அருளாது விடினும் இவ்வாறு வந்தேனும் என்பால் சத்தாதி விடயங்களை யொழித்தீரில்லையே என் செய்வேன் என்னலு

மரம். துரந்து என்பது விண்டு என்பதுபோலச் செய்வதன்றொழிற்கும் செய்விப்பதன்றொழிற்கும் பொது. விலகவிடாது மனம் கலங்கப் பாய்ந்து வஞ்சித்து வருத்திக் கொல்லுதலுடைமையின் விஷயங்களைப் 'புலி' என்றார்.

## வாதவூரடிகள் பொருட்டேச் சிவபெருமான் குதிரை வீரரான வரலாறு:—

அரிமர்த்தன பாண்டியன் வாதவூரரை (மாணிக்கவாசக சுவாமிகளை) நோக்கி "நீர் நமது கருவூலத்தைத் திறந்து வேண்டிய பொருள்களை எடுத்துக்கொண்டு சென்று, சமுத்திரக் கரையில் வந்திறங்கும் குதிரைகளைத் தெரிந்து விலைக்கு வாங்கிக் கொண்டு வருதிர்" என்று சொல்லி விடுத்தனன். அங்ஙனமே சென்ற வாதவூரர் திருப்பெருந்துறையை அடைந்து, குருந்த மரநிழலில் வீற்றிருந்தருளும் சிவபெருமானாகிய ஞானாசாரியரைக் கண்டனர். அச் சிவபெருமானாகிய ஞானாசாரியரிடத்து அவ் வாதவூரர் ஞானோபதேசம் பெற்றுத் தாம் கொண்டுவந்த பொருள்களெல்லாம் கோயிற் றிருப்பணிக்கும், அடியவர்கட்கும் பயன்படுமாறு செய்து அத் திருபெருந்துறையிலேயே மகிழ்வோடிருந்தனர்.

குதிரைகள் வாராமை கண்டு பாண்டியன் வெகுண்டு படைஞர்களை யேவ, அவர்கள் திருப்பெருந்துறையை யடைந்து வாதவூரருக்குப் பாண்டியன் கருத்தைத் தெரிவித்தனர். அதற்கு வாதவூரர் 'குதிரைக் கூட்டங்கள் ஆடிமாதத்தில் வருமென்று அரசனுக்குச் சொல்லுங்கள்' என அனுப்பினார். அப் படைஞர்கள் சென்று பாண்டியனை வணங்கி நிகழ்ந்தவற்றை விளம்பினார்கள். அதுகேட்ட அரசன் ஒன்றுஞ் சொல்லாது குதிரைகளின் வரவை எதிர்பார்த்திருந்தனன்.

அவர் வரையறுத்த நாளில் குதிரைகள் வாராமையால், பாண்டியன் வெகுண்டு, "வாதவூரரைப் பிடித்துக்கொண்டு வந்து கல்லேற்றல் முதலிய இடுக்கண் புரிந்து சிறைச்சாலையில் வையுங்கள்" எனத் தண்டலாளர்களுக்குக் கட்டளையிட்டனன். அத் தண்டலாளர்கள் அங்ஙனமே செய்தனர்.

சிவபெருமான் வாதவூரருடைய சிறையை நீக்கத் திருவுளங்கொண்டு, திருநந்திதேவர் முதலிய கணங்களை அழைத்து, "காட்டிலிருக்கும் நரிகளைப் பரிகளாக்கி நீவிர் குதிரைப்பாகராய் அவைகளின்மீதேறி மேற்றிசையை நோக்கி முன் செல்லுங்கள், நாமும் அவ்வாறே வருகின்றோம்" என்று அருளிச்செய்தனர். சிவபெருமான் குதிரைச் சேவகராய் வேதமாகிய குதிரைமேலிவர்ந்து மற்றை வீரர்கள் முன் செல்லத் தாம் பின் செல்லும்போது, பலவாத்தியங்களின் ஒலியினாலும், குளம்புகளினின்றெழுந்த தூசுப்படலத்தினாலும் குதிரைகளின் வரவை அறிந்த பாண்டியன் வாதவூரரைச் சிறைச்சாலையினின்றும் வரவழைத்து அவரிடத்து அன்போடு மகிழ் கொண்டவனாய் அவரோடு அளவளாவி யிருந்தனன். அதுபொழுது அழகிய குதிரைகளின்மேல் இவர்ந்து வந்த குதிரை வீரர்களை வியந்து, திருவாதவூரரை நோக்கி, "இவர்களுக்குள்ளே தலைவர் யாவர்?" என்று வினவினான். அவர் "அரசே! யான் அறியேன்" என்றார். அப்பொழுது சுந்தரேசராகிய குதிரைவீரர், அங்கவடியின்மீது வைத்த திருவடிகள் அசையக் கடிவாளத்தைப் பிடித்து, வேதமாகிய குதிரையைப் பாண்டியனெதிரே நடத்திக்கொண்டு வந்து, "அரசே! எங்கள் குதிரை யேற்றத்தைச் சிறிது காண்" என்று சொல்லி, அரசன் முதலாயினோர் காணும்படி ஐங்கதியும் பதினெண்வகைச் சாரியும் முதலாகிய விகற்பங்கள் தோன்றச் செலுத்திக் காட்டியருளினார் என்பதாம்.

32. யாவுமா முமையுண் ணாமுலை முலைப்பா
லீந்துபா டச்செயா யெனினு
மேவுமா துயர்செய் சூலைநோ யெனினும்
விடுத்துநிற் பாடுமா றருளா
யோவுமா னலது தொல்லுருக் கொளின்வே
றொன்றெடுத் திடுமென நினைந்து
தாவுமா னினமெண் ணிகந்தசூழ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) தொல் உரு கொளின் - சிவபெருமான் தமது பழைய திருவடிவந் தாங்குவாராகில், ஓவும் மான் அலது - (முற்காலத்திற் றரித்து) இக்காலத்திற் றுறக்கப்பட்டுள்ள அம் மானையன்றி, வேறு ஒன்று - தமக்கிஷ்டமாகிய வேறொரு மானை, எடுத்திடும் என - தாங்கியருளுவரென, நினைந்து - சிந்தித்து, தாவும் மான் இனம் - தாவிச் செல்லும் மான் கூட்டங்கள், எண் இகந்த சூழ் - அளவிறந்தன சூழ்ந்து வாழ்கின்ற, சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, யாவும் ஆம் - எச்சிறப்பும் உண்டாதற் கேதுவாகிய, உண்ணாமுலை உமை - உண்ணாமுலையம்மை யென்னும் உமாதேவியாரது, முலைப்பால் ஈந்து - திருமுலைப்பாலை (அடியேனுக்குத்) தந்து, பாட செய்யாய் எனினும் - தேவரீரைப் பாடும்படி செய்துகொள்ளீரேனும், மேவும் மா துயர் செய் - நிலைபெறும் மிக்க துன்பத்தைச் செய்யாநின்ற, சூலை நோய் எனினும் - சூலை நோயேனும், விடுத்து - என்மேலேவி, நின் பாடும் ஆறு - நும்மைப் பாடும்படி, அருளாய் - செய்துகொள்வீராக; (எ - று.)

(வி - ரை) யாவுமாம் முலைப்பால் என இயையும். இம்மை மறுமை வீடென்னும் முப்பயன்களையுஞ் சுட்டலின், 'யாவுமாம்

என்றார்.. இதிலுள்ள வும்மை முற்றுப்பொருளது. யாவுமாதற் கேதுவாகிய முலைப்பாலை, 'யாவுமா முலைப்பால்' என்றது காரியத்தைக் காரணமாக உபசரித்தல். ஆளுடைய பிள்ளையார்க்குப் பாலையும்,ஆளுடைய அரசுக்குச் சூலைநோயு மளித்துப் பாடச் செய்தீ ராகலின், அவற்றுள் பிந்திய பேறேனும் இப் பேதையேற்கு அருளல் வேண்டு மென்பதும், காளகண்ட திரிநேத்திர தாரியாய்ச் சகளீகரித்திருந்த காலத்தில் நம்மினமாகிய மானையே தாங்கினாராகலின், மலையுருக் கொண்ட இக் காலத்தும் சூழ்ந்திருப்பின் அகலாது காத்தமை நோக்கி நம்மையே தாங்குவரெனக் கருதியது போல மானினம் சூழ்ந்தன வென்பதும் கருத்தாகக் கொள்க. 'ஓவு மான்' என்றது தாருவனத்து முனிபுங்கவர் ஏவிய மானை. 'தொல்லுரு' என்றது காளகண்ட திரிநேத்திரதாரியாய்ச் சகளீகரித்திருந்த வுருவத்தை. துன்புற்றேனு நின்னைப் பாடவேண்டு மென்னும் விருப்பால், திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்குத் திருமுலைப்பாலீந்து மூன்று வயதில் பாடச் செய்தது போலச் செய்யாயெனினும் திருநாவுக்கரசு நாயனாருக்குச் சூலைநோ யீந்து பாடச் செய்ததுபோ லாயினும் செய்யவேண்டு மென்பதாம்.

'உமையுண் ணுமுலை முலைப்பா லீந்துபா டச்செயாய்' என்றாராயினும் "பாற்கிண்ணம் கழுவுநீர் வார்ப்பதற் குரையாய்" என இவ் வாசிரியர் தமக்கு அப் பாலின்மேலுள்ள விருப்பத்தைப் பிறண்டும் கூறுவர்.

திருஞானசம்பந்தமூர்த்தி நாயனாருக்கு முலைப்பாலீந்த சரிதம்:—

சோழ மண்டலத்திலே, சீர்காழி யென்னுந் திருப்பதியிலே, பிராமண குலத்திலே, கௌணியர் கோத்திரத்திலே, தந்தையாராகிய சிவபாதவிருதயரும்தாயாராகிய பகவதியம்மையும்செய்த தவப்பேற்றால்உலகெலாமுய்யப் பிள்ளையார் திருவவதாரஞ்செய்த

னர். இப் பிள்ளையாரது மூன்றும் ஆண்டிலே, ஒருநாள் தந்தையார் ஸ்நாநத்திற்குப் போக, பிள்ளையார் அழுது பின் செல்ல, ஆலயத்தின் உட்புறத்திலிருக்கும் தீர்த்தக் கரையில் பிள்ளையாரை யிருத்தித் தாம் தீர்த்தத்தினுள்ளே இறங்கிச் சங்கற்பம், அகமருஷண சூக்தபடன முதலியன செய்தார். அப்போது பிள்ளையார் திருத்தோணிச் சிகரத்தைப் பார்த்து, "அம்மே! அப்பா!" என்று தம்முடைய புனிதவாய் மலர்ந்து அழ, தோணியப்பர் அருள் செய்யத் திருவுளங் கொண்டு, பார்வதி தேவியாரோடு இடபாரூடராய் எழுந்தருளி, தீர்த்தக் கரையை யடைந்து அழும் அப் பிள்ளையாருக்குப் பால் கொடுக்கும்படி உமாதேவியாருக்குக் கட்டளையிட்டருளினர். அங்ஙனமே உமாதேவியார், தம்முடைய திருமுலைப்பாலைப் பொன் வள்ளத்திலே கறந்து, சிவஞானத்தை அதிற் குழைத்துக் கையிலே கொடுத்துக் கண்ணீரைத் துடைத்து ஊட்டி யருளினர். சிவபாத விருதயர் சிறிது பொழுதிலே தம்முடைய நியமங்களை முடித்துக் கரையேறிப் பிள்ளையாரைக் கண்ணுற்று, "நீ யார் தந்த பாலை யுண்டனை?" எனக் கோபித்து, "எச்சில் மயங்க உனக்கு இதனைத் தந்தவரைக் காட்டு" என்று சொல்லி, கையில் எடுத்த ஒரு சிறிய மாறுகொண்டு ஓச்ச, அப்போது பிள்ளையார் ஆனந்தக் கண்ணீர் சொரிய, உச்சியின்மேல் எடுத்தருளிய ஒரு திருக்கை விரலாலே சுட்டி, ஆகாயத்திலே இடபாரூடராகி உமாதேவியாரோடு நின்றருளிய பெருமானைக் காட்டி,

"தோடுடைய செவியன் விடையேறியோர் தூவெண்மதி சூடிக்
காடுடைய சுடலைப்பொடி பூசியென்னுள்ளங் கவர்கள்வன்
ஏடுடைய மலரான் முனைநாட் பணிந்தேத்த வருள்செய்த
பீடுடைய பிரமாபுர மேவிய பெம்மா னிவனன்றே."

என்னும் திருப்பதிகம் பாடி யருளினர் என்பதாம்.

## திருநாவுக்கரசு நாயனுருக்குச் சூலைநோய் தந்து பாடச் செய்த சரிதம்:—

திருமுனைப்பாடி நாட்டிலே, திருவாமூரிலே, வேளாளர் குலத்திலே, குறுக்கையர் குடியிலே தந்தையாராகிய புகழனாரும் தாயாராகிய மாதினியாரும் செய்த தவப்பேற்றால் உலகெலா முய்யத் திருவவதாரஞ் செய்தனர். இந் நாயனார் தம் தாய்தந்தையர் சிவபதமடைந்தபின், தமக்கையாராகிய திலகவதியாரைக் கைவிட்டுச் சைவசமயத்தினின்றும் சமணசமயத்திற் புக்குத் தருமசேனர் என்னும் பெயர் பெற்றிருந்தனர். அதுகண்ட திலகவதியார் திருவதிகைவீரட்டானேச்சுரனை இரந்து வேண்ட, அப் பெருமானும் அவ் வேண்டுகோளுக் கிணங்கி, அவ் வம்மையின் கனவிலே தோன்றி, "அம்மா! நீ உன் மனக்கவலையை யொழி; உன் தம்பி, நம்மை அடையும்பொருட்டே முன் தவஞ் செய்துளான்; அத் தவத்தில் சிறிது வழுவுற்றதினால் அன்னிய மதத்திலே பிரவேசித்தான்; இனி அவனைச் சூலை நோயினால் வருத்தி ஆட்கொள்வோம்" என்று சொல்லி மறைந்தனர். அவ்வாறே தருமசேனர் வயிற்றில் கொடிய சூலைநோ யுண்டாகிக் குடலை குடைதலுற்றது. அதனால் அவர் வருந்தித் தமக்குக் கைவந்த மந்திரோச்சாரணத்தால் தடுக்கவும், அந் நோய் தடைபடாமல் மேற்கொள்ளச், சர்ப்பவிடந் தலைக்கொண்டாற்போல மயங்கி மூர்ச்சை யடைந்தனர். அது கண்ட சமணர் பலர், கமண்டல சலத்தை அபிமந்திரித்துக் குடிப்பித்தும், மயிற்பீலி கொண்டு தடவியும், நோய் தணியாமல் முன்னிலும் அதிகப்பட, அச் சமணர்கள் "இதனை நீக்குதற்கு யாம் வல்லமல்லோம்" என்று கூறிக் கைவிட்டுப் போயினார்கள்.

பின், தருமசேனர் தம்முடைய சகோதரியாகிய திலகவதியாரை நினைந்து, 'அத் திலகவதியாரே தமக்கு உதவிசெய்ய வல்லவர்' எனத் துணிந்து தம்முடைய பாகுகனை அவரிடத்திற் கனு

ப்பினார். அப் பாருகன் திருவதிகையிற் சென்று செய்தியைத் தெரிவிக்க, அவ் வம்மையார், "சமணர்களுடைய பள்ளிக்கு யான் வாரேன்" என்றனர். அச்செய்தியைப் பாருகன் தருமசேனருக்குத் தெரிவிக்க, தருமசேனர், சிவபெருமானுடைய திருவருள் கூட்டுதலால், தமக்குக் கைதந்து வருகின்றவர்களைப் பற்றிக் கொண்டு, இரவிலே ஒருவருங் காணாதபடி திருவதிகையிற் சென்று, திலகவதியாரை அணுகி, "தமியேன் உம்மையே கதியென்று அடைந்தேன்; இனிக் கரையேறும் வழியை அருள்செய்யும்" என விண்ணப்பித்து, அவர் பாதத்திலே விழுந்து அயர்ந்தனர். திலகவதியார் தம்பியாரை நோக்கித் தமக்குப் பெருமான், கனவிலே அருள்செய்தபடி முடிந்ததை நினைந்துருகி, அஞ்சலித்து, "இது திருவருட் செயலேயாகலான், அப் பெருமானையே வணங்கி அவருக்கே திருத்தொண்டு செய்யும்" என உபதேசித்து, திருவருளை நினைந்து, ஸ்ரீ பஞ்சாக்கரத்தை ஓதி விபூதியைக் கொடுக்க, நாயனார் அதனை அன்போடு வணங்கி வாங்கிச் சரீர முழுதிலும் அணிந்துகொண்டனர்.

திலகவதியார், திருப்பள்ளியெழுச்சியிலே, திருவலகு திருமெழுக்குத் தோண்டி யெடுத்துக்கொண்டு, திருக்கோயிலுக்குத் தம்பியாரை அழைத்துக்கொண்டு போனார். தம்பியார் வீரட்டானேசுவரரை வலம் வந்து, சந்நிதானத்தில் விழுந்து நமஸ்கரித்து எழுந்து நின்று, அப் பெருமானுடைய திருவருளினாலே தமிழ்ச் செய்யுள் பாடு மாற்றல் உண்டாகப்பெற்று, தம்முடைய சூலை நோய் நீங்கும்பொருட்டும், பிற்காலத்திலே அன்போடு ஓதுகின்ற யாவருடைய துன்பமும் நீங்கும்பொருட்டும், சிவபெருமான்மீது,

"கூற்றா யினவா றுவிலக் ககிலீர்
கொடுமை பலசெய் தனநா னறியே

னேற்று யடிக்கே யிரவும் பகலும்
பிரியா தவணங் குவனெப் பொழுதும்
தோற்று தென்வயிற் றினகம் படியே
குடரோ டுதொடக் கிமுடக் கியிட
ஆற்றே னடியே னதிகைக் கெடில
வீரட் டானத் துறையம் மானே."

என்னுந் திருப்பதிகம் பாடியருளினர். உடனே சூலைநோய் நீங்
கிற்று என்பதாம்.

33. விருப்பொடு வெறுப்பு மகன்றுபே ரின்ப
வெள்ளத் தழுந்துநின் னடியார்
திருப்பத மிறைஞ்சி யவர்க்குவே ளாண்மை
செய்பெருஞ் செல்வமே யருளாய்
பொருப்புக டொறும்வீழ் பொங்குவெள் ளருவி
போன்றறி விலர்க்கிடை யருமற்
றரிப்பருங் கருணை பொழிதருஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) பொருப்புகள் தொறும் - எனை மலைகடோறும், வீழ் - வீழ்கின்ற, பொங்கு வெள்ளருவி போன்று - அதிகரித்த வெள்ளிய அருவி நீர்போல, அறிவு இலர்க்கு - அறிவீனர் கண்களுக்குத் தோற்றும்படி, தரிப்பு அரு கருணை - தாங்குதலரிய கருணை வெள்ளமே, இடை அறுமல் - இடைவிடாது, பொழி தரும்-சொரிகின்ற, சோணசைலனே கைலைநாயகனே - சோண சைலரே! கைலைநாயகரே!, விருப்பொடு வெறுப்பும் அகன்று - விருப்பும் வெறுப்பும் விட்டு, பேரின்பம் வெள்ளத்துள் அழுந்தும்- மிக்க இன்பப் பெருக்கிலே மூழ்கிச் சுகிக்கும், நின் அடியார் - உமது அடியவர்களுடைய, திருப்பதம் - திருவடிகளை, இறைஞ்சி-

வணங்கி, அவர்க்கு - அவ் வடியவர்கட்கு, வேளாண்மை செய் - வேண்டியவற்றைச் செய்கின்ற, பெரு செல்வமே - உயர்ந்த வாழ்வினையே, அருளாய் - தந்தளிப்பீராக; (எ - று.)

(வி-ரை) ஒன்றின்கண் விழைவும் வெறுப்புமாகிய அவிச்சைகளை நீக்கித் தாங்கொண்ட சமநிலை யென்னும் அநன்னிய பத்தியையே அழியா இன்பமாகக் கொண்டனர் என்பார், 'விருப்பொடு வெறுப்பு மகன்றுபே ரின்ப வெள்ளத்து ளழுந்துநின் னடியார்' என்றார். இதனை,

(பெரியபுராணம் - திருக்கூட்டச் சிறப்பு)

"கேடு மாக்கமுங் கெட்ட திருவினா
ரோடுஞ் செம்பொனு மொக்கவே நோக்குவார்
கூடு மன்பினிற் கும்பிட லேயன்றி
வீடும் வேண்டா விறலின் விளங்கினார்."

என வருஞ் செய்யுளானு முணர்க. சிவபெருமானுக்குத் தன்னைப் பூசிப்பதினும் தன்னடியாரைப் பூசிப்பதில் மிகுந்த விருப்பென்பது தோன்ற, 'நின் னடியார், திருப்பத மிறைஞ்சி யவர்க்குவேளாண்மை செய்பெருஞ் செல்வமே யருளாய்' என்றார்.

வேளாண்மை - உபகரித்தல். செல்வத்தா லெய்தாப் பேறுகளும் சிவனடியாரைப் பேணுதலா லெய்தலின் அச் சிறப்பு நோக்கி, அவர்க் குபகரித்தலையே, 'பெருஞ் செல்வம்' என்றார். இது,

(திருமந்திரம் - பாத்திரம்-௧)

"திலமத் தனைபொன் சிவஞானிக் கீந்தால்
பலமுத்தி சித்தி பரபோக முந்தரும்."

என்பதனால் நன்கு விளங்கும்.

'பொருப்புகடொறும்' என்புழித், 'தொறும்' இடப்பன்மையை யுணர்த்துவதோ ரிடைச்சொல். இனி, 'தொறும்' என்பது தன்னை யேற்ற பெயர்ப்பொருண் முழுமையும் அப் பெயர்ப் பொருளோடு இயையும் பொருளும் இருப்பதை யுணர்த்துவதோர் இடைச்சொல் எனலும் ஒன்று. தரிப்பருங் கருணை இடையறுமல் பொழிதரும் என மாற்றுக. இடைவிடாது சொரியும் கருணைப் பெருக்கம் அறிவிலர்க்கு அருவிபோன்று தோற்றுநிற்ப தெனவே, அறிவினர்க்குப் பிறரால் தாங்கற்கரிய கருணைப் பெருக்கமாகவே தோற்றுநிற்கும் என்பதாயிற்று. இனி, அறிவில்லாத பேதையர்களுக் கிரங்கி, மலைகடோறும் விழாநின்ற மிகுந்த வெள்ளிய அருவி நீரைப்போல ஒழியாமல் தரித்தற்கரிய கிருபையாகிய அருவி நீரைப் பொழிகின்ற எனலும் ஒன்று. 'அறிவு இலர்க்கு-அறிவில்லாதார்க்கு, அருவி போன்று - அருவிபோன்றும், அறிவு இலர்க்கு - அறிவை யிடமாக வுடையார்க்கு, கருணை (போன்று). கருணைபோன்றும், பொழிதரும் சோணசைலனே' எனச் சொல்லி னிசையறுத்தும் சொல் வருவித்தும் பொருள் கொள்வாரு முளர்.

34. பொங்குறு கவினுங் கற்பும்வாய்ந் திலங்கு
புண்ணிய மடந்தையும் பொருளு
மிங்குநன் குதவி யங்குவான் கதியி
னிருத்துநிற் புலவரென் புகழார்
துங்கவெங் குறவர் புனத்திடு பரண்கா
றுணித்துநட் டாரமீ மிசைமா
தங்கவெண் மருப்புப் பரப்புறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) துங்கம் வெம் குறவர் - மிக்க வீரமுடைய வேடர்கள், புனத்து இடு பரண்-தினைப்புனத்தி லிடும் பரணுக்கு, கால்

ஆரம் துணித்து நட்டு - கால்களாகச் சந்தன மரங்களை வெட்டி யூன்றி, மீமிசை-அப் பரணின் மேற் பரப்பாக, மாதங்கம் வெண் மருப்பு-யானைகளின் வெள்ளிய கோடுகளையே, பரப்புறும் சோண சைலனே கைலைநாயகனே - பரப்புறுகின்ற சோணசைலரே! கைலைநாயகரே!, பொங்குறு கவினும் கற்பும் வாய்ந்து - மிக்கோங் கிய அழகும் கற்புத் தன்மையும் வாய்ந்து, புண்ணியம் இலங்கும் மடந்தையும் - தரும வொழுக்கமும் திகழப்பெற்ற மனைவியையும், பொருளும் இங்கு நன்கு உதவி - செல்வத்தையும் இம்மையிலே செவ்விதிற்றந்து, அங்கு வான் கதியில் இருத்தும் - மறுமையிலே உயர்ந்த கதிகளில் நிலைபெறுத்துகின்ற, நின் புலவர் என் புகழார்- தேவரீரைப் புலவர்கள் யாது புகழார்? (மிகப் புகழ்வார்); (எ - று.)

(வி - ரை) 'இம்மையில் உத்தம குணநிகளில் மிக்க வனி தையாதி போகமும், அம்மையில் சிவபோகமும் அருளவல்ல தேவரீரைப் புலவர்கள் புகழாது மனிதரை வாளா புகழ்கின்றார் களே இஃதென்னே' என்று இரங்கியதுமாம். இதனை,

"தம்மை யேபுகழ்ந் திச்சை பேசினுஞ்
சார்வினுந் தொண்டர் தருகிலாப்
பொய்ம்மை யாளரைப் பாடா தேயெந்தை
புகலூர் பாடுமின் புலவீர்காள்
இம்மை யேதருஞ் சோறுங் கூறையு
மேத்த லாமிடர் கெடலுமாம்
அம்மை யேசிவ லோக மாள்வதற்
கியாது மையுற வில்லையே."

என வரும் சுந்தரமூர்த்தி நாயனார் தேவாரத் திருப்பதிகத்தானு முணர்க.

இக் கருத்துப்பற்றியே இவ் வாசிரியரும்,

"கீற்றுப் பிறையை யணிந்ததிரு
வெங்கை விருத்த கிரிநாத
னாற்றுப் பொருளைக் குளத்திலொரு
புலவர்க் கழைத்தன் றருளினோன்
சோற்றுத் துறையுந் திருநெய்த்தா
னமுமீங் குடையான் சுழலாமற்
றோற்றுப் பசிநோய் தொலைப்பனவன்
றனையே துதியீர் புலவீரே."

எனப் பிறாண்டும் கூறியுள்ளார்.

சிவபெருமான் றன்னைப் புகழு மடியவர்களுக்கு இம்மைப் பயனும் மறுமைப் பயனு மனுக்கிரகஞ் செய்வது நிச்சய மென்பது தோன்ற, 'பொங்குறு கவினுங் கற்பும்வாய்ந் திலங்கு புண்ணிய மடந்தையும் பொருளு, மிங்குநன் குதவி யங்குவான் கதியி னிருத்துநிற் புலவரொன் புகழார்' என்றார் எனலும் ஒன்று. புலவர் என்றது ஈண்டுச் சுந்தரமூர்த்தி நாயனாரை. இதனை,

"சுந்தரமூர்த்திநாயனார் திருவாரூரினின்றும் புறப்பட்டு, திருநாகைக்காரோணத்துக்குப் போய், சுவாமி தரிசனஞ் செய்து திருப்பதிகம் பாடி, பொன்னும் நவரத்தினங்களும் ஆபரணங்களும் வஸ்திரங்களும் குதிரைகளும் உடைவாளும் பிறவும் பெற்று, பிற தலங்களையும் வணங்கிக்கொண்டு மீண்டு அத் திருவாரூரிற் சேர்ந்து எழுந்தருளி யிருந்தார்." என்னுஞ் சரிதத்தானும்,

"பத்தூர்புக் கிரந்துண்டு பலபதிகம் பாடிப்
பாவையாரைக் கிறிபேசிப் படிறாடித் திரிவீர்
செத்தார்தம் மெலும்பணிந்து சேவேறித் திரிவீர்
செல்வத்தை மறைத்துவைத்தீ ரெனக்கொருநா ளிரங்கீர்

முத்தார மிலங்கிமிளிர் மணிவயிரக் கோவை
யவைபூணத் தந்தருளி மெய்க்கினிதா நாறும்
கத்தூரி கமழ்சாந்தும் பணித்தருள வேண்டும்
கடனாகைக் காரோண மேவியிருந் தீரே."

என்னுந் தேவாரத்தானு முணர்க.

'வெங்குறவர்' என்புழி, வெம்மை ஈங்கு விரமேற்று. ஆரம் துணித்துக் கால் நட்டு என மாற்றுக. ஆரம்-சந்தனமரம். மீமிசை-ஒருபொருட் பன்மொழி; மேலிடமுமாம். எவனென்னும் வினாப் பெயர், 'என்' எனத் திரிந்தது. இதனை,

"கற்றதனா லாய பயனென்கொல் வாலறிவ
னற்றா டொழாஅ ரெனின்."

என்னுங் குறட்பாவில், "எவனென்னும் வினாப்பெயர் என்னென் றாய் ஈண்டின்மை குறித்து நின்றது." எனப் பரிமேலழகர் கூறிய உரையானு முணர்க.

"எவனென் வினாவினைக் குறிப்பிழி யிருபால்."

என்றமையால் அது வினாப்பொருண்மையைத் தரும் வினைக் குறிப்பு முற்று எனக் கோடலும் ஒன்று.

35. போழ்ந்திடு வடுக்கண் மகளிரை யணைத்துப்
புகழ்நந்தி பிரம்படிக் கொதுங்கிச்
சூழ்ந்திடு மமரர் நெருங்குசந் நிதியிற்
றொண்டனேன் வரவருள் புரியாய்
வாழ்ந்திடு மகக்கண் டுருகுதாய் முலைப்பால்
வழிந்தொழு குதலென வடியார்
தாழ்ந்தெழ வருவி யொழுகுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) வாழ்ந்திடும் மக கண்டு - சீவித்திடும் குழந்தையைக் கண்டு, உருகு தாய் - மனங் குழையும் மாதாவுக்கு, முலை பால் வழிந்து ஒழுகுதல் என - முலைக்கண் பால் வழிந்து தானே ஓடுதல் போல, அடியார் தாழ்ந்து எழ-அடியவர்கள் வணங்கியெழுங்கால், அருவி ஒழுகுறும் சோண சைலனே கைலை நாயகனே - தானே அருவி யொழுகப் பெற்று விளங்கும் சோண சைலரே! கைலை நாயகரே!, போழ்ந்திடும் - பிளந்த, வடு கண் - மாம்பிஞ்சு போலும் கண்களையுடைய, மகளிரை - தம் மனைவியரை, அணைத்து - அணைத்துக்கொண்டு, புகழ் நந்தி - கீர்த்தி வாய்ந்த நந்தி தேவர், பிரம்பு அடிக்கு - (சந்நிதியில் விலக வீசும்) பிரம்படிக்கு, ஒதுங்கி - (அது தம்மேற் படுமென்று) ஒதுங்கி, சூழ்ந்திடு அமரர் - (பின்னும்) சூழ்ந்திடுகின்ற தேவர்கள், நெருங்கு சந்நிதியில் - நெருங்கும் தேவரீர் சந்நிதியில், தொண்டனேன் வர அருள் புரியாய்- தொண்டனாகிய அடியேனும் வர அருள் புரிவீராக; (எ - று).

(வி - ரை) மகளிரையணைத்தல் கூட்ட மிகுதியால் தம் மனைவியர்கட்கு ஊறு நேராமை பொருட்டு. 'தொண்டனேன்' என்புழிக், 'கீழ்மையேனும்' எனப் பொருள் கோடலும் ஒன்று. தொண்டு-ஈண்டுக் கீழ்மைப் பொருளது; * "தொண்டராம் பேய்ச் சமணர்" என்புழிப்போல. தொண்டனேன் என்பதில் இழிவு சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. முந்திய பொருட்கு இறந்தது தழீஇய எச்சவும்மையோடு ஒருபுடை இழிவுசிறப்புமாம். 'அருள் புரியாய்'என்பது வேண்டிக்கோடற் பொருண்மைக்கண் வந்த முன்னிலையேவ லுடம்பாட்டு வினைமுற்று. இதனை, "செய்யாயென்னு முன்னிலை வினைச்சொல், செய்யென் கிளவி யாகிடனுடைத்தே." என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்திற்கு நச்சினார்க்கினியர் கூறிய வுரையானுமுணர்க. இங்ஙனம் வருமிடந்தோறும் கொள்க.

* சோமேச வெண்பா - கஅ.

வாழ்ந்திடுதல் - மேன்மையோடு வாழ்ந்திடுதல்; உயிரோடு வாழ்ந்திடுதலுமாம். மக - மக்கள்; இது உகரச்சாரியை யேற்று மகவு என வரும். தாய்க்கு மக்களின் மேன்மை நோக்குங்கால் அன்பு மிகுதியின் முலைப்பால் ஒழுகுதல்போலத் தம்மை வணங்கலாகிய நல் வாழ்வு பெற்ற அடியார்களை நோக்குந்தோறும் பெருமானுக்கு அருண் மிகுதி தோன்றுமென்பார், அதனை அருவிமேல் வைத்து விதந்து கூறினார்; எனவே, தாயின்கண் அன்பு மிகுதிச் சின்னமாக முலைப்பால் ஒழுகுதல்போல, ஈண்டு அருண் மிகுதிச் சின்னமாக அருவி யொழுகுதல் என்க. புகழ் நந்தி பிரம்பு அடிக்கு ஒதுங்கி - கீர்த்தி வாய்ந்த நந்திதேவர் (சந்நிதியில் விலக வீசும்) பிரம்படி தம்மேற் படுமென்று ஒதுங்கி எனப் பொருள் கோடலும் ஒன்று; அப் பொருட்கு 'அடிக்கு' என்பதிலுள்ள நான்கனுருபு எழுவாய்ப் பொருளது. இதனை,

(இலக்கணக் கொத்துரை-௬௬-ம் சூத்திரம்)
"ஒன்று மூன்றுநான் காறெனு முருபொடு
வருமே வினைமுத லெனவகுத் தனரே."

என வருஞ் சூத்திரத்தா னுமுணர்க.

உயிரோடு வாழு மகவைக் கண்டு மன முருகாநின்ற தாயினது முலையினின்றும் பாலானது வழிந்தொழுகுதல்போல, அடியார்கள் வணங்கி யெழுங்கால் அருவி பெருகாநின்ற சோணசைலன் என்பதாம்.

36. நேர்ந்திடு மொருசெங் கோல்கொடு கொடுங்கோ
னிமிர்ந்திட விலங்கைசென் றடைந்தோன்
கூர்ந்தவன் பொடுநின் றிறைஞ்சுபு வெழுந்துங்
குரைகழ லிரக்கவுஞ் சவல்யான்

சேர்ந்திடு மலைமான் பெருமுலை யுவமை
　　சிறுமலை களுக்குத வாமற்
சார்ந்திட விரும்பி வளர்ந்தெழுஞ் சோண
　　சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) சேர்ந்திடும் மலைமான் - இடப் பக்கத்திற் சேர்ந்திருக்கின்ற பார்வதி தேவியாரது, பெரு முலை - பெரிய தனங்களுக்கு, உவமை - உவமையாகுதல், சிறு மலைகளுக்கு - சிறிய மலைகளுக்கு, உதவாமல் - கிட்டாமல், சார்ந்திட விரும்பி - தமக்கே கிட்டும்படி விரும்பி, வளர்ந்து எழும் - உன்னதமாக உயர்ந்து ஓங்கிய, சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, இலங்கை கொடு கோல் நிமிர்ந்திட-இலங்காபுரி கொடுங்கோல் நிமிர்ந்து செங்கோலுடைத்தாக, நேர்ந்திடும் ஒரு செம் கோல் கொடு-நேர்மை யடைந்துள்ள ஒப்பற்ற செங்கோலை யேந்தி, சென்று அடைந்தோன் - (இராவணனது முன்னிலையிற் போய்) அவ் விலங்கையை யடைந்த இராமமூர்த்தியானவர், கூர்ந்த அன்பொடு நின்று - மிக்க அன்போடு நின்று, இறைஞ்சபு - வணங்கி, வழுத்தும் குரை கழல் - வேண்டித் துதிக்கும் ஓசை மிக்க வீரக்கழ லணிந்த திருவடிகளை, இரக்க யான் அஞ்சுவல் - யாசித்து வேண்ட அடியேன் அஞ்சாநிற்பேன்; (எ - று.)

(வி - ரை) கொடுங்கோல் நிமிரின் செங்கோலா மாகலின், செங்கோலாக வென்பார், 'கொடுங்கோ னிமிர்ந்திட' என்றார். நேர்மை - தகுதி. செங்கோல் கொடுங்கோல் என்றவை-நீதி அநீதி மேலன. நிமிர்தல்-ஓடலுமாம். அன்பு மிக்க இராமமூர்த்தி வேண்டத்தக்க அரிய திருவடியை அன்பற்ற யான் வேண்டுவது தகுதியோ? என்பார், 'இரக்க வஞ்சுவல்' என்றார். இனி,

தனது செங்கோலைக் கொண்டு பிறரது கொடுங்கோன்மை யையும் மாற்றுவிக்கு மிராம னிறைஞ்சுங் கழல் நீதியற்ற அடியேன் இறைஞ்சக் கிடைக்குமோ என்னும் அருமை தோன்ற, 'இரக்க வஞ்சுவல் யான்' என்றார் எனினுமாம். 'அஞ்சுவல்' என்புழி, 'அல்' தன்மை யொருமை விகுதி. இலங்கை சென்றடைந்தோன்-இராம மூர்த்தி. இச் சைலத்தை யடுத்த தீர்த்தகிரியில் இராமமூர்த்தி வழிபட்டன ரென்பது புராண சித்தமாகலின், இத் தலத்தும் வழிபட்டனர் போலும். கொடுங்கோ லோடச் செவ்விய பாணங் கொண் டடைந்தவ ரெனலும், 'கொடு' என்பது மூன்றும் வேற்று மைச் சொல்லுருபான கொண்டென்பதின் மரூஉ எனலும் ஒக் கும். முந்திய பொருட்கு வினையெச்சப் பொருளதாய்க் கொண்டு என்பதன் பொருந்துதல். இறைஞ்சுபு-செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம். வழுத்தல் ஈண்டு வேண்டித் துதித்தலின் மேற்று. கழல்-தானியாகுபெயர்; திருவடிகளை யுணர்த்தலின். குரைகழல் எனக் கொண்டு அன்மொழியாகக் கோடலு மொன்று. இதனை,

> "கூளி நிரைக்கநின் றம்பலத் தாடி குரைகழற்கீழ்த்
> தூளி நிரைத்த சுடர்முடி யோயிவ டோணசையா
> லாளி நிரைத்தட லானைக டேரு மிரவில்வந்து
> மீளி யுரைத்தி வினையோ னுரைப்பதென் மெல்லியற்கே."

என வரும் திருக்கோவையாரினுள், 'குரைகழல்' என்பதற்குப் பேராசிரியர் கூறிய வுரையானு முணர்க. தனக்குப் பொருந்திய ஒரு குற்றம் நீங்கிச் செவ்விதாகிய கோலைக் கொண்டு இராவண னது கொடுமையான கோல் ஒழுங்காகு நிமித்தம் அயோத்தியி னின்றுஞ் சென்று இலங்கைப் பட்டினத்தை யடைந்தோனாகிய இராமபிரான் நிறைந்த அன்போடு நின்று வணங்கித் துதிக்கும் ஒலிக்கின்ற வீரக்கழல் பொருந்திய திருவடியை யாசிக்க யான் அஞ்சுகின்றேன் என்பதாம்.

37. தெருமரும் பிறவி தமையகன் றிடாத
தேவரைத் தேவரென் றெண்ணி
யருமருந் தனைய நினையடை யாத
வறிவிலார் பவப்பிணி யறுமோ
கரிமருங் கணைந்த தெனமுழை வாயிற்
கார்வர விரைந்தெழுந் துகள்கே
சரிமறைந் திருந்து நாணுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) முழை வாயில் - குகை வாசலில், கார் வர - மேகம் தவழ (அதனை நோக்கி), கரி - யானையானது, மருங்கு அணைந்தது என - பக்கலில் அணைந்த தென்று நினைந்து, மறைந் திருந்து - ஒளித்திருந்து, விரைந்து எழுந்து - (சமீபித்தலும்) விரை வாக எழுந்து, உகள் கேசரி - (சந்தோஷத்தால்) துள்ளிய சிங்கம், நாணுறும் - (அஃதன்மை கண்டு) வெட்கி நிற்கும், சோண சைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, தெருமரும் பிறவிதமை - சுழலுந் தன்மையவாகிய பிறவிகளை, அகன்றிடாத தேவரை - நீங்காத தேவர்களை, தேவர் என்று எண்ணி - தெய்வங்க ளென்று கருதி, அருமருந்து அனைய - அரு மருந்தன்ன, நினை அடையாத - தேவரீரை எய்தப் பெறாத, அறிவிலார் பவம் பிணி அறுமோ - அஞ்ஞானிகளின் பிறவி நோய் ஒழியுமோ? (ஒருபோதும் ஒழியா;) (எ - று.)

(வி - ரை) பிறவி ஒன்றுக் கொன்று காரணகாரிய சம்பந் தப்பட்டு அலைபோலச் சுழன்று சுழன்று வருதலால், 'தெருமரும் பிறவி' என்றார். தெருமரல் - (காற்றாடிபோல மாறி மாறிச்) சுழ லல் எனினு மமையும்; (தெருமா-பகுதி). மயக்கத்திற்குக் காரண மாகிய பிறவி எனக் கோடலும் ஒன்று. பிறவி யகலாத தேவ ரெனப் பிறரைக் கூறினமையின் தாமும் பிறவி யகன்று விளங்கிப்

பிறர் பிறவியையும் அகற்ற வல்லவர் இக் கடவுளே என்பதும், இடையே யிறவாதபடி நீண்ட ஆயுளையுடையராகச் செய்வதாகலின், பவப்பிணி யொழிக்கும் இக் கடவுளுக்கு அமிர்தத்தை ஒரு புடை யுவமையாக்கிய தென்பதும் கருத்தாகக் கொள்க. பிறவி தமை யகன்றிடாத தேவர் என்றது திருமால் முதலியோரை. இதனை,

"வற்புறுத்த வோர்பொருளை வள்ளுவனூர் பத்துமுறை
சொற்பொருத்தி யோதுந் துணிவுபோல்—தற்பதத்தால்
ஓதும் பிரமமொரு தானென்ப தொன்றனைமால்
காதுபயம் பந்தேடுத்துக் காட்டிடுவேன்—சாதம்
இவட்குமா மேதென் றியம்புவ மென்றெண்ணித்
துவக்கும் வினைவழியாற் றோன்றும்—எவர்க்குமிவன்
தந்தையே யன்றித் தனையனு காதவன்காண்."

என வரும் திருவெங்கையுலாவானு முணர்க.

இறைவன் திருவடியையே நினைப்பார்க்குப் பிறவி நீங்குதலும், இறைவனல்லாதார் அடிகளை நினைப்பார்க்கு அப் பிறவி நீங்காமையுமுள வென்பார், 'பிறவி தமை யகன்றிடாத தேவரைத் தேவரென் றெண்ணி, யருமருந் தனைய நினையடை யாத வறிவிலார் பவப்பிணி யறுமோ' என்றார்.

அருமருந்து - அமிர்தம். சோணசைலனை, 'அருமருந் தனைய நினை' என்பதற் கேற்ப, அறிவிலார் பவத்தைப் 'பிணி' என்றார்; அப் பிணியை யொழிப்பது மருந்தே யாகலான். தன்னை வணங்கும் அன்பாது பிறவியை யொழிக்கும் பிறப்பிலியாகிய சிவபெருமானை வணங்காது பிறந்திறந் துழலும் திருமால் முதலியோரை வணங்கிப் பிறவி யொழிக்க நினைப்பவர் அறிவிலர் என்பதாம்.

குகையினது வாயிலில் மேகம் வருதலைக் கண்டு யானை சமீபத்தில் வந்ததெனக் கருதி விரைவாகக் குகையின்கண் மறைந்திருந் தெழுந்து பாயாநின்ற சிங்கமானது யானை யல்லாமையி னுணப்படுகின்ற சோணசைலம் என்க. உகள் கேசரி - வினைத் தொகை.

38· ஆண்டுகம் பலசென் றிடவிருந் திடினு
மன்றியோ ரிமைப்பினி லுடல
மாண்டுறு மெனினு நன்றுநின் கமல
மலரடிக் கன்பரா யிருப்பிற்
பூண்டயங் கயில்வேற் குதலையந் தீஞ்சொற்
புதல்வன்மே லிவர்செய லெனமார்த்
தாண்டன்வந் திவர விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) பூண் தயங்கு - பூண் விளங்குகின்ற, அயில் வேல் - கூரிய வேற்படையும், குதலை அம் தீம் சொல் - நிரம்பாமை வாய்ந்த அழகிய இனிய சொற்களுமுடைய, புதல்வன் - புதல்வனாகிய முருகக்கடவுள், மேல் இவர் செயல் என-மேலேறித் தவழுதல் போல, மார்த்தாண்டன் வந்து - சூரிய னணுகி, இவர விளங்குறும் சோணசைலனே கைலைநாயகனே - தவழ விளங்குஞ் சோணசைலரே! கைலைநாயகரே!, நின் கமலம் மலர் அடிக்கு - நுமது தாமரைமலர் போன்ற திருவடிகட்கு, அன்பர் ஆய் இருப்பில் - அன்பராகி இருப்பரேல், உடலம் - (அவர்) சரீரம், ஆண்டு பல உகம் சென்றிட இருந்திடினும் - ஆண்டுகளாலாகிய பல யுகங்கள் செல்லுமளவும் இருக்கினும், அன்றி ஓர் இமைப்பினில்-அல்லது ஓரிமைப் பொழுதில், மாண்டு உறும் எனினும் - மாண்டொழியுமாயினும், நன்று - நன்மையுடையதே யாம்; (எ - று.)

(வி - ரை) 'ஆண்டு' என்பதற்கு 'உலகங்களைப் புரந்து' என்னலுமாம். திருவடிப்பத்தி யெய்தியோர் தேகத்தா லடையவேண்டிய சிவகதி யெய்தப் பெற்றவரே யாதலின், தேகம் பன்னாளிருப்பினும் அன்றிச் சின்னாளி லொழியினும் அதுபற்றிக் கவலையின் றென்பதாம். இதனை,

(நாலடியார் - அறன்வலி யுறுத்தல் - ரு)

''கரும்பாட்டிக் கட்டி சிறுகாலைக் கொண்டார்
துரும்பெழுந்து வேங்காற் றுயராண் டுழவார்
வருந்தி யுடம்பின் பயன்கொண்டார் கூற்றம்
வருங்காற் பரிவ திலர்.''

என்பதனானும் அறிக. மார்த்தாண்டன் - சூரியன். சூரியனை உவமித்தது ஒளியாலும் இவர்தற் செயலாலு மென்க.

'பூண்' என்பது கேடபடைக்குக் கட்டும் பூண். 'பூண் தயங்கு' என்பதற்கு 'அணிகள் விளங்கும்' எனப் பொருள் கூறிப் புதல்வனுக்கு அடையாக்கினு மமையும். சிவபெருமானது மலரடிக்கு அன்பிலாதார் உலகத் தழியாது நிலைபெற்றிருக்குஞ் சித்தி பெறினும் பயனின் றென்பது கருத்து.

39\. விரைவிடை யிவரு நினைப்பிற வாமை
வேண்டுநர் வேண்டுக மதூரம்
பெருகுறு தமிழ்ச்சொன் மலர்தினைக் கணியும்
பிறவியே வேண்டுவன் றமியே
னிருசுடர் கதுமேல் கீழ்வரை பொருந்த
விடையுறன் மணிக்குடக் காவைத்
தரையிடை யிருத்தி நிற்றனோர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) இரு சுடர்களும் - சூரியனும் சந்திரனும், மேல் கீழ் வரை பொருந்த - மேற்றிசை கீழ்த்திசைகளிலுள்ள அத்த கிரியினும் உதயகிரியினும் தனித்தனி தங்க, இடை உறல் - (தேவரீர்) இடையில் மலைவடிவாக நிற்றல், மணி குடம் காவை - (இரு புறத்தும்) மணிக்குடங்களைக் கொண்ட ஒரு காவடியை, தரையிடை இருத்தி - தரையின்கண் வைத்து, நிற்றல் நேர் - சும ந்து நிற்பவரை யொக்கும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, விரைவிடை இவரும் நினை - விரைந்து தாவுகின்ற இடபத்தில் ஏறியருளும் நும்மை, பிறவாமை வேண்டுநர் வேண்டுக - பிறவாமையை வேண்டி வேண்டுபவர்கள் வேண்டக்கடவர்; தமியேன் - அடியேன், நினக்கு - நுமக்கு, மது ரம் பெறுகுறு-இனிமை யதிகரித்த, தமிழ் சொல் மலர் அணியும்- தமிழ்ச் சொற்க ளென்னும் மலர்களாற் றொடுத்த மாலையைத் தரிக்கும், பிறவியே வேண்டுவன் - பிறவியினையே விரும்பு வேன்; (எ - று)

(வி - ரை) 'விரைவிடை' என்புழி, 'விரை' என்னும் பகுதி வினையெச்சப் பொருளது; 'விரைந்து செல்லும் விடை' என்க: 'வரிப்புனை பந்து' என்பதிற்போல. பிறவாமையா லெய்தப் பெறும் பேரின்பம் கடவுள் வழிபாடுடைய பிறவியாலும் எய்தலா மென்பது நூலோர் துணிபாகலின், 'தமிழ்ச் சொன் மலர் நினக் கணியும் பிறவியே வேண்டுவன் றமியேன்' என்றார். இது,

(கோயிற் புராணம் - பாயிரம்-கரு)

"பிறவாத விதிலென்ன பயன்வந்து பிறந்தாலு
மிறவாத பேரின்பம் பெறலாமால்."

என்பதனானு மறிக. தமிழ்ச் சொன்மலர் என்புழிச், சொல்-கருவி யாகுபெயர்; பாட்டுலை யுணர்த்தலின். 'சொன்மலர்' என்பது

உருவகம். இனி, பிறவி கெட்டு முத்தியின்பம் எய்தலினும் அரனது சீர்த்தியைத் தமிழ்ச் சொல்லாற் புகழுதல் பேரின்பம் என்பது தோன்றத் 'தமிழ்ச் சொன்மலர் நிணக்கணியும் பிறவியே வேண்டுவன் றமியேன்' என்றார் எனினு மமையும். 'பிறவியே' என்புழி, ஏகாரம் தேற்றம். அணிதற் கேதுவாகிய பிறவியை அணியும் பிறவி யென்றது காரியத்தைக் காரணமாக வுபசரித்தல். பௌர்ணிமையில் சூரியன் அத்தகிரியை யடையுந் தருணத்துச் சந்திரன் உதயகிரியி லுதித் தமர்வனுதலின் அக் காலஞ் சுட்டி வர்ணித்தபடி.

காவென்பது காவப்படுதலிற் போந்த பெயர். காவுதல்-சுமத்தல்: அது முதனிலைத் தொழிலாகுபெயராய்க் காவடியை யுணர்த்திற்று. சூரிய சந்திரர்களை யியக்கி இடைநிற்றலின் காவுவோர்க்கு உவமித்த தென்க.

சோம சூரியர்களாகிய இரு சுடர்களும் அத்தகிரியிலும் உதய கிரியிலும் பொருந்தியிருக்க நடுவிருத்தல் என்போன் றிருக்கின்ற தென்னில், இரு பக்கத்திலும் இரத்தினங்க ளிழைத்த குடங்களை யுடைய காவடியைத் தரையின்கண் வைத்து ஒருவர் நிற்றலுக் கொப்பாக இருக்கின்ற சோணசைலம் என்பதாம்.

40. ஒண்மணிப் பசும்பொற் பூணிள முலையார்க்
குளத்திட மெலாமளிக் கடியார்
கண்மணிக் கமையா விருந்துசெய் தருணா
கணமிருப் பதற்கிடம் புரிவேன்
வெண்மணிக் கழைமுன் கரியநெற் றிகழி
வேங்கைபொன் சொரியமா ணங்க
டண்மணிப் பைக ளவிழ்த்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) வெண் மணி கழைமுன் - வெள்ளிய முத்தங்களை யுதிர்க்கும் மூங்கில்களுக்கு முன்பு, கரிய நெற்று இதழி - கறுத்த முதிர்ந்த காய்களையுடைய கொன்றையும், வேங்கை - வேங்கையும், பொன் சொரிய - பொன் போலும் மலர்களைத் தூவ, மாசுணங்கள் - பாம்புகள், தண் மணி பைகள் அவிழ்த்திடும் - தண்ணிய மணிகளையுடைய பை விரித்து (அம் மணிகளை)க் கக்கும், சோண சைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, ஒள் மணி பசு பொன் பூண் - அழகிய மணிக ளழுத்திய பசிய பொற்பூ ணணிந்த, இள முலையார்க்கு - இளமை வாய்ந்த தனங்களை யுடைய மங்கையர்க்கு, உளத்து இடம் எலாம் அளித்து - என் உள்ளத்திலுள்ள இட முற்றும் உரிமையாகத் தந்து, அடியார் கண் மணிக்கு - அடியார்களின் கண்மணிகளுக்கு, அமையா விருந்து - தெவிட்டுத லில்லாத காட்சி யென்னும் விருந்தினை, செய்தருள் நீ - பாலித்தருளும் தேவரீர், கணம் இருப்பதற்கு - க்ஷணநேரமே னும் இருந்தருளுதற்கு, இடம் புரியேன் - (சற்று) இடமும் அமைக்கப் பெற்றிலேன் (இவ் வறியாமை யென்னே!); (எ-று.).

(வி - ரை) 'எலாம்' என்றமையால் 'சற்றும்' என்பது வருவிக்கப்பட்டது. சிவதரிசனம் சிவத்தியானம் இவ் விரண்டும் அன்பரது நோக்கினையும் உளத்தையும் கவர்ந்து அளவிறந்த இன்பத்தைத் தருதலின் அவற்றினுக்கு இடம் தந்தேனில்லை என்பது தோன்ற, 'நீ கணமிருப்பதற் கிடம்புரியேன்' என்று இரங்கிக் கூறினார். முற்றும் மங்கையர் சிந்தனையே யல்லது உமது சிந்தனை சற்றும் பெற்றிலேன், எங்ஙன முய்வே னென்பது கருத்து. கழை வெண்மணி சொரியு முன்னரே அதற் கெதிராக இதழியும் வேங்கையும் பொன் சொரிய, மாசுணம் பை யவிழ்த்து மணிகளைச் சொரியும் எனக் கொடைமேல் வைத்து மலைவளங் கூறியபடி. வெண்முத்தையுடைய கழையசைவு நடித்தலை யொக்க அதற்குப்

பரிசில்போல எதிரே பொன்னும் மணியும் சொரியு மென்னலு மாம். கழை - மூங்கில். நெற்று - முதிர்ந்த காய். இதழி - கொன்றை. வேங்கை - ஓர் மரம். மாசுணங்கள் - பாம்புகள். பை - படம் (பணைப்பை). கொன்றை வேங்கை இவற்றின் மலர்கள் பொன்னிறம் போன்றவை. இவ்வாசிரியர் மலைவளங் கூறியபடியே பிற ஆசிரியரும்,

"காந்த ளிரவலர்போற் கையேற்பக் கொன்றைகொடை
வேந்தனெனப் பொன் சொரியும்வேங்கடமே." எனவும்,

"உடுக்க வொள்ளிணர்த் தழைபல கொய்தூழ் தினைகண்
மடுக்கும் புள்ளெறி கவண்கலான் வார்பனை பொதிர்த்தும்
இடுக்க ணேபுரி மாதரை யிற்செறிப் பாமென்
றடுக்கல் வேங்கைக ளெரியகைந் தெனவல ரூழ்க்கும்." எனவும்,

"கொன்றைகள் செம்பொ னுகுத்த"

எனவும் கூறியுள்ளார்.

வெள்ளிய முத்துக்களையுடைய மூங்கிலுக்கு முன்னர்க் கரிய நெற்றுக்களையுடைய கொன்றைமரங்களும்வேங்கைமரங்களும் மலர்களாகிய பொன்னைச் சொரியப் பாம்புகள் குளிர்ச்சி பொருந்திய இரத்தினப் பைகளை அவிழ்த்திடுகின்ற சோணசைலம் என்பதாம்.

**41.** அருங்கலம் புனைய மகளிரோ ரிருவ
ரணிமணம் புணர்த்திவா ரணமுந்
துரங்கமும் புலவர்க் குதவுநின் றனையே
துதித்திடா துழன்றனன் வறிதே
மருங்குநின் றழகா லத்திதாங் குவபோன்
மரைமலர்ப் பெருஞ்சுனை யொடுபூந்
தரங்கநின் றிலங்க விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) மருங்கு நின்று-பக்கங்களினின்று, அழகு ஆலத்தி-அலங்கார தீபங்களை, தாங்குவபோல் - தாங்குவனபோல, மரை மலர் பெரு சுனையொடு - செந்தாமரை மலர்களைத் தாங்கிய பெரிய சுனைகளோடு, பூ தரங்கம் - பொலிவமைந்த அலைகள், நின்று இலங்க - நிலைபெற்று விளங்க, விளங்குறும் சோணசைல னே கைலைநாயகனே-திகழும் சோணசைலரே! கைலைநாயகரே!, புலவர்க்கு - சுந்தரமூர்த்தி நாயனாருக்கு, அரு கலம் புனையும் - அரிய பூண்களைப் புனைந்துள்ள, மகளிர் ஓர் இருவர் - ஒப்பற்ற மகளிரிருவரை, அணி மணம் புணர்த்தி - அழகிய மண முடிப்பித்து, வாரணமும் துரங்கமும் - யானையையும் குதிரையையும், உதவும் நின்றனையே - தந்தருளும் தேவரீரையே, துதித்திடாது-துதிக்கப்பெறாது, வறிதே உழன்றனன்-வீணே வாளுள் போக்கியலைந்தனன். (என்னே!); (எ - று.)

(வி - ரை) 'மகளிர் ஓரிருவர்' என்றது பரவைநாச்சியார் சங்கிலிநாச்சியார் என்பவர்களை. 'புலவர்' என்றது சுந்தரமூர்த்தி சுவாமிகளை. இவர் இவ் வுலகத்திற் சஞ்சரிக்கத் திருநாகைக்காரோணத்தில் குதிரையும், கைலைக்கெழுந்தருளுதற்குத் திருவஞ்சைக் களத்தில் யானையும் அவர்க்கு அளித்தனர் என்க. இதனை,

(திருவாளொளிபுற்றூர்ப் புராணம் - பாயிரம்)
"ஒருமாப் பெற்று மண்சரித் தொருவெள் ளானை
வானகம் புகும்போ தூற்ற வள்ளல்." எனவும்,

(சேரமான்பெருமாணாயனார் புராணம் - ௬௬)
"நம்பி தானு மந்நாட்போய் நாகைக் காரோ ணம்பாடி
யம்பொன் மணிப்பூ ணவமணிக ளாடை சாந்த மடற்பரிமா
வைம்பொற் சுரிகை முதலான பெற்று மற்றும் பலபதியிற்
றம்பி ரானைப் பணிந்தேத்தித் திருவா ரூரிற் சார்ந்திருந்தார்."

எனவும் வருவனவாற்றுனும் உணர்க.

உபசாரக் கருவிகளுள் ஒன்றாகிய அலங்கார தீபம் பல அடுக்கமைந்து விளங்குதல் போலச் செந்தாமரை மலர்களும் விளங்கலின் அவற்றைத் தீபத்திற்கும், அலைகளைக் கைக்கும், சுனையைத் தாங்குவோர்க்கும் உவமித்தது. தாங்குவபோல் தாங்கநின் றிலங்க என இயையும். மரை - தாமரை முதற்குறை விகாரம். பெருஞ் சுனையொடு என்புழி, ஒடு - விசேடணப் பொருள். 'அழகாலத்தி' என்பதற்கு 'அழகிய நீராஞ்சனம்' எனக் கொண்டு, சுனை தட்டும், செந்தாமரைமலர்ப்பரப்பு செந்நீரும், அப் பரப்பு தாங்கத்தா லசைதல் அந் நீரசைவு மாக்கலும் ஒன்று. இதற்குப் பொழிப்பு:— பக்கங்களி னின்று அழகிய ஆலத்தி தாங்குகின் றனபோலப் பெரிய சுனைகளினிடத்து அழகிய அலைகளோடு செந்தாமரை மலர்கள் அசையாநிற்ப விளங்குகின்ற சோணசைலம் என்பதாம். இப் பொருட்குப் பெருஞ்சுனையொடு என்பதற்குப் பெருஞ் சுனையில் என வேற்றுமை மயக்கம்.

சிவபெருமான் தன்னைப் புகழ்ந்த புலவர்கட்கு விரும்பியவெல்லாம் கொடுக்கும் வள்ளலாதலின் அப்பெருமானை யிதுகாறும் புகழாது வாணாளை வீணாளாகக் கழித்தேன் என்பது கருத்து.

**42.** ஏனுறு மமரர் கடைகட லளித்த
விருளொடு மணிமிடற் றடியே
னுணவ விருளுங் கலந்திடற் கருமை
யழகுமிக் கிலங்குறுங் கண்டாய்
மாணெழில் வராக முழும்புழை யனந்தன்
மணியொளிப் பிழம்பெழல் சிறுநீக்
தாணுவின் முருக னெழுதனோர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) மாண் எழில் வராகம் - பெருமை பெற்ற அழகிய பன்றிகள், உழும் புழை - கிண்டுந் துவாரத்தில், அனந்தன்

மணி ஒளி பிழம்பு - ஆதிசேடனது உச்சிமணிகளின் ஒளித் திர
ட்சி, எழல் - மேலோங்குதல், சிறு தீ தாணுவின் - சிறிய தீத்திர
ட்சி வடிவாக, முருகன் எழுதல் நேர் - முருகக் கடவுள் தோன்
றும் தோற்றத்தை யொத்திருக்கும், சோணசைலனே கைலைநாய
கனே - சோணசைலரே! கைலைநாயகரே!, எண் உறும் அமரர் -
வலிமை மிக்க தேவர்கள், கடை கடல் அளித்த - கடைந்த
கடல் தோற்றுவித்த, இருளொடு - (விடமென்னும்) இருட்டி
னோடு, அடியேன் - அடியேனது, ஆணவம் இருளும் - ஆணவ
மென்னும் நீங்கா மலவிருளையும், கலந்திடில் - சேர்ப்பீராயின்,
மணி மிடற்று கருமை அழகு - நீலமணி போலுங் கண்டத்தில்
கருமை அழகு, மிக்கு இலங்குறும் - அதிகரித்து விளங்கா
நிற்கும்; (எ-று.)

(வி - ரை) எண்-வலிமை. அமரர் - தேவர்கள்: மரண மில்
லாதவர்கள்; இது மங்கல வழக்கு. இருள்-விடம்; இது பண்பாகு
பெயர். கலந்திடில் - சேர்ப்பீராயின்; பிறவினை மேற்று. ஆணவ
விருளும் கலந்திருக்கு மாயின் எனத் தன்வினையாகப் பொருள்
கோடலும் ஒன்று. கண்டாய் - முன்னிலை யசை. வராகம் - பன்றி.
அனந்தன் - ஆதிசேடன்; பிரளய காலத்திலும் அழியாதவன்
என்பது பொருள். தீத்தாணு - தீத்திரட்சி வடிவு; தாணு - வடிவு.
தாணுவின் - 'தம்பம் போல' எனினும் அமையும். இப் பொரு
ட்கு ஐந்தனுருபு ஒப்புப்பொருளது; முந்திய பொருட்கு வினை
யெச்சப் பொருளது. அடியேனது ஆணவமலம் தேவரீருண்ட
விடத்தினும் வருத்தும் இருண்மையத்த தாகலின் இதனையும் கண்
டத்தி லிருத்தி யருளல்வேண்டு மென்பதும், வராகம் கிண்டிய
துவார வழியில் ஆதிசேடன் மணி ஒளி வீசல், பெரிய தீத்தம்பமா
யமருஞ் சிவபெருமானருகே சிறிய தீத்தம்பமாக முருக்கக்கடவுள்
எழுத லொக்கு மென்பதும் கருத்தாகக் கொள்க.

இனி, ஆணவமலம் ஆலகால விடத்தைப் பார்க்கிலும் கொடுமையுளதென்பதும், அவ் விடத்தை யடக்கி அமரரைக் காத்தது போலிவ் வாணவ மலத்தையும் அடக்கி அடியேனைக் காக்கின் மிகு புகழுண்டென்பதுந் தோன்ற, 'மணிமிடற் றடியே னுணவ லிருளுங் கலந்திடிற் கருமை யழகுமிக் கிலங்குறுங் கண்டாய்' என்றா ரெனலும் ஒன்று.

சிவபெருமான், விடத்தை மிடற்றணிந்த சரிதம்:—

தேவர்களும் அசுரர்களும் இடைவிடாது போர்புரிந்து வருகையில் அவ் விருதிறத்தாரும் தமக்கு மரணம் நேரிடாமலிருக்க அமிர்தபானம் செய்ய எண்ணிப் பிரமனை யடைந்து தமது எண்ணத்தைத் தெரிவிக்க, அவர் தேவாசுரர்களுடன் சென்று, திருமாலை வணங்கிப் பாற்கடல் கடைந்து அமிர்தம் தந்தருளும்படி வேண்ட, திருமால் கருடனால் மந்தரமலையைக் கொணர்வித்துப் பாற்கடலில் அதை மத்தாக நாட்டி, அதற்கு வாசுகியைத் தாம்பாகப் பூட்டி, ஒருபுறம் தேவர்களும் மற்றொருபுறம் அசுரர்களும் நின்று கடையச் செய்தனர். அவ்வாறு கடைகையில் அவ் வாசுகி என்னும் பாம்பு வருத்தம் பொறாமல் விஷத்தைக் கக்கியது. அங்குள்ள எவரையும் கொல்ல எழுந்த அக் கொடிய விஷத்தை அஞ்சிப் பிரமன் முதலிய எல்லாத் தேவர்களும் சிவபெருமானைச் சரண் புகுந்தனர். சிவபெருமானும் சரண் புகுந்த அத் தேவரைக் காக்கும்பொருட்டு அவ் விஷத்தை யுண்டு தமது கண்டத்தி லணிந்து நிறுத்தினர் என்பதாம்.

43. மின்னவிர் சடிலக் கற்றையு மருள்கூர்
விழிகளுந் திருமுகத் தழகுங்
கன்னவி றிரடோ ளெண்குபீ ரடியுங்
கண்டுகண் களிக்குநா ளுளதோ

மின்னிசை யொலிகேட் டுருகுதல் கடுப்ப
விழிதர வருவிகிம் புருடர்
தன்னிக ரிசைகூர் சாரலஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) இன் இசை ஒலி கேட்டு - இனிய கீத முழக்கங் கேட்டு, உருகுதல் கடுப்ப - (மலையே) உருகிக் கசிதல் போல, அருவி இழிதர-அருவிகள் நாற்புறமும் ஒழுகாநிற்ப, கிம்புருடர் - கிம்புருடர்களால் (பாடப்படுவதாய்), தன் நிகர் இசை கூர்-தனக்குத் தானே ஒத்ததாகிய இனிய கீதங்கள் மிகும், சாரல் அம் சோணசைலனே கைலைநாயகனே - சாரலினையுடைய சோண சைலரே! கைலைநாயகரே!, மின் அவிர் - மின் போல ஒளிரும், சடிலம் கற்றையும் - சடிலத்திரட்சியும், அருள் கூர் விழிகளும் - அருள் மிக்குத் திகழுந் திருக்கண்களும், திருமுகத்து அழகும் - திருமுக மண்டல வழகும், கல் நவில் - மேருவோ என்று சொல்லத்தக்க, திரள் தோள் நான்கும்-திரண்ட சதுர்ப்புயங்களும், ஈர் அடி-இரண்டு திருவடிகளும், கண் கண்டு-எனது கண்கள் தரிசித்து, களிக்கும் நாள் உளதோ - மகிழுங் காலமும் உளதோ?; (எ-று.)

(வி-ரை) அவிர்தல்-ஒளிர்தல். 'கல் நவில்' என்புழி, 'நவில்' உவமவுருபுமாம். கல் - ஆகுபெயராய் மலையை யுணர்த்திற்று. கடுத்தல்-ஒத்தல். இனிய கீத முழக்கங் கேட்டு மலையே உருகிக் கசிதல் போல, அருவிகள் நாற்புறமும் ஒழுகாநிற்கக் கிம்புருடர்களால் பாடப்படுவதாய்த் தனக்குத்தானே ஒத்ததாகிய இனிய கீதங்கள் மிகும் சாரலினையுடைய சோணசைலம் என்பதாம். இஃது அருவி ஒழுகுதலைப்பற்றித் தற்குறிப்பேற்றம் கூறிற்று.

44. அள்ளிவெண் டிருநீ றுடன்முழு தணியு
மடியவர்ப் பெறினெழூந் திளங்கன்

றுள்ளிநின் றுருகு மன்னையின் மனநெக்
குருகுபு சென்றிறைஞ் சிலனே
யெள்ளிவெம் புலியெண் கரிதிரு மேனி
மேறுதற் றகாதென வெகுண்டு
தள்ளிவந் தருவி யிழிதனேர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) வெம் புலி எண்கு அரி எள்ளி - வெவ்விய புலி கரடி சிங்கம் இவைகள் அவமதித்து, திருமேனி ஏறுதல் தகாது என - (சுவாமியின்) திருமேனியில் ஏறி யுலாவல் தகாதென்று, வெகுண்டு - கோபித்து, அருவி தள்ளி வந்து - அருவிகள் அவற்றைக் கீழ்வீழ்த்தி வந்து, இழிதல் நேர் சோணசைலனே கைலை நாயகனே - இறங்குதலை ஒத்திருக்கும் சோணசைலரே! கைலை நாயகரே!, வெள் திருநீறு அள்ளி - வெள்ளிய திருநீற்றைக் கொண்டு, உடல் முழுதும் - சரீர முற்றும், அணியும் - தரிக்கும், அடியவர் பெறின் - அடியவர்களை எதிர்நேரப் பெறின், எழுந்து - இருக்கையினின்று எழுந்து, இளம் கன்று - இளங் கன்றினை, உள்ளிநின்று - நினைத்து நின்று, உருகும் அன்னையின் - உருகுகின்ற தாய்ப் பசுவைப்போல, மனம் நெக்கு உருகுபு - நெஞ்சம் இளகிக் கசிந்து, சென்று இறைஞ்சிலனே - சென்று வணங்கினேனில்லையே. (என்செய்வேன்?); (எ - று.)

(வி - ரை) 'அடியவர்ப் பெறின்' என்புழி, இயல்பின் விகாரம்; இரண்டாம் வேற்றுமைத் தொகையாதலான். 'கன்றை உள்ளி யணையும் அன்னைபோல அடியவர் இரங்கி எதிரப் பெறின் கண்ட மாத்திரத்தே, தும்பு அறுத்துக்கொண் டோடும் கன்றுபோல விரைந்து மனமுருகிச் சென்று இறைஞ்சிலேன்' எனினும் பொருந்தும். இப் பொருட்கண் 'உருகும்' என்பதற்கு 'உருகி யணையும்' எனப் பொருள் கொள்க. உருகுபு - உருகி; செய்பு

என்னும் வாய்பாட்டு வினையெச்சம். அருவி புலியாதிகளைக் கீழ் வீழ்த்துவது திருமேனிமேல் விவர்தல் கூடாதென்று தள்ளுதலை ஒத்தது எனத் தற்குறிப்பேற்றம் கூறினார். திருநீறு முதலிய சாதனத்தை மேற்கொண்ட அடியவரைக் காணின் மனமுருகி எதிர்ந்து இறைஞ்சவேண்டு மென்பது கருத்து.

45. இழையெனத் தளர்சிற் றிடையுண் ணாமுலையா
ளெனக்குவண் புகலிவேந் தயின்ற
கழுமணிப் பசும்பொற் குலவுபாற் கிண்ணங்
கழுவுநீர் வார்ப்பதற் றுறையாய்
முழையிடைக் கதிர்மா மணிவிளக் கேற்றி
முசுக்கலை பிணவொடு மசோகத்
தழையிடைத் தழுவி யுறங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) முசுக்கலை - ஆண் முசுக்குரங்கு, முழையிடை - முழையின்கண், கதிர் மா மணி - காந்தியையுடைய பெரிய மணியினை, விளக்கு ஏற்றி - விளக்கென வைத்து, அசோகம் தழையிடை - அசோகத் தழையைப் பரப்பி அதனிடையில், பிணவொடு தழுவி - பெண் குரங்கினோடும் அணைந்து, உறங்குறும் - உறங்கப் பெறும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, இழை என தளர் - நூலிழைபோலத் துவளும், சிறு இடை உண்ணாமுலையாள் - சிறிய இடையினையுடைய உண்ணாமுலை யம்மையார், வள் புகலி வேந்து - வளவிய சீர்காழிக் கிறைவரா யவதரித்த திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார், அயின்ற - முன்னுண்டருளிய, கழும் மணி குலவு - (சாணையில்) தீற்றிய மணிகள் பதிக்கப்பெற்ற, பசு பொன் பால் கிண்ணம் - பசும் பொன்னாலாகிய பாற்கிண்ணத்தை, கழுவும் நீர் - கழுவிய நீரை

யேனும், எனக்கு வார்ப்பதற்கு உரையாய் - அடியேனுக்கு வார்க்கும்படி கட்டளை யிடுவீராக; (எ - று.)

(வி - ரை) அம்பிகையா ரூட்ட ஞானப்பா லருந்தும் பேற்றைப் பெறும் பக்குவமில்லேனாகையால், அப் பாற்கிண்ணம் கழுவுநீரேனும் வார்க்கப் பணித்தருள்வீர் என்பது கருத்து. புகலிவேந்து - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார். 'கழுமணி' என்புழிக் கழுவும் என்பதில் இடையிலுள்ள உயிர்மெய் கெட்டுக் 'கழும்' என நின்றது. கழுவுதல் - ஈண்டுச் சாணையில் தீற்றல். இதனை, 'கழுமணி' என வினைத்தொகையாகக் கோடலும் ஒன்று. உணுமுலையாள் வார்ப்பதற் கெனவும், அயின்ற பாற்கிண்ணம் எனவும், பிணாவொடு முறங்குறு மெனவும் கூட்டி முடிக்க. முசு - ஒருவித குரங்கு. கலை - ஆண். பிணா - பெண்.

உமையவளது திருமுலைப்பால் அயின்றாரால் ஆகாத தொன்றின் றென்பதும், அது கிடைத்தற்கரி தென்பதும் தோன்ற, 'புகலிவேந் தயின்ற, பாற்கிண்ணங் கழுவுநீர் வார்ப்பதற் குரையாய்' என்றார்; (புகலி - சீர்காழி). முசுக்கலை யென்னும் ஆண் குரங்கு குகையினிடத்துக் கிரணங்களையுடைய மாணிக்கத் தீபங்களை யேற்றிக்கொண்டு அசோகத் தழைப்பரப்பாகிய படுக்கையினிடத்துத் தனது பெண் குரங்கைத் தழுவி யுறங்காநின்ற சோணசைலம் என்பதாம்.

46. வினைவழி யுடலிற் கலைமந் தாறு முணாவே
வேண்டினர் வினைகொடு புணரா
நனைமலர் புனைநின் றிருவடி யடைவா
ரூடோறும் வேண்டில ருலகர்
கனையிருள் கரந்த விடமறிந் தாணப்போங்
காட்சியிற் புனக்கிளித் தொகுதி

தனையெறி மணிகள் முழைபுகுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) புனம் கிளி தொகுதிதனை - தினைப்புனத்தில் (தினைக் கதிர்களில் வீழும்) கிளிக் கூட்டத்தினை, எறி மணிகள் - (ஓட்டுதற்குக் குறச் சிறுமிகளால்) எறியப்படும் மாணிக்கக் கற்கள், இருள் கரந்த இடம் அறிந்து - நெருங்கிய இருள் ஒளித்துள்ள இடத்தை யுணர்ந்து, உண போம் காட்சியின்-(அதனை) அழிக்கச் செலுந் தோற்றம்போல, முழை புகும் - குகையினுட் செல்லும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, உலகர்-உலகிலுள்ளவர், வினை வழி உடலிற்கு-தாம் ஈட்டிய இருவினைக் கீடாக எடுத்த உடலுக்கு, அமைந்துறும் உணவே - அமைந்து கிடக்கும் அநுபவமான உணவையே, வேண்டினர் - வேண்டுகின்றவர், வினைகொடு-இருவினைகளைக் கொண்டு,புணரா- அடையப்படாத, நனை மலர் புனை - தேன் சொரியும் மலர் புனையப்பட்டுள்ள, நின் திருவடி - நுமது திருவடிகளை, அடைவான்- அடைய, நாடொறும் வேண்டிலர் - தினமும் வேண்டுதல்க ளிலர் (அந்தோ பாவம்); (எ - று.)

(வி - ரை) செல்வம், வறுமை, இன்பம், பிணி, மூப்பு, சாக்காடு ஆகிய இவ் வாறும் கருவிலேயே அமைந்து கிடத்தலின், இவை முயல்வில்லா வழியும் எய்து மென்பது தோன்ற, 'வினை வழி யுடலிற் கமைந்துறு முணவு' என்றார். 'வினை' என்றது நல் வினை தீவினை யென்னும் இரு வினையை. திருவடிப் பேறு சிவ புண்ணிய முதிர்வால் இருவினையொப் பெய்தின் அடையலா மல்லது சுகதுக்கங்கட் கேதுவாகிய நல்வினை தீவினைகளால் அடைய முடியா தென்பது தோன்ற, 'வினைகொடு புணரா நனை மலர் புனை நின்றிருவடி' என்றார். 'புணரா' என்னும் ஈறு கெட்ட எதிர்மறைப் பெயரெச்சம் 'திருவடி' என்னும் சினைப்பெயர்

கொண்டது. 'நறை மலர் புனை' என்பது இடைப் பிறவரல். 'புணரா' என்பதை முற்றெச்சமாக்கி முடிபு காண்கிலர்; அது வுரையன்மை யறிக. அத்தகைய பேற்றை அத்திருவடி அர்ச்சனை வழிபாட்டாலே அறிஞர் எளிதெய்துவ ரென்பது தோன்ற, 'நறை மலர் புனை நின் றிருவடி' எனச் சிறப்பித்துக் கூறினார். அங்ஙனம் கூறவே, முயலவேண்டாததில் முயற்சிக்கும் முயலவேண்டியதில் முயற்சி யில்லாமைக்கும் வினை காரண மல்லது வேறென்னை யென்றவாறு. கனை - நெருக்கம். உண்ணுதல் - ஈண்டு அழித்தல் மேற்று. நறை - தேன். வினைகொடு புணராத் திருவடி எனக் கூட்டுக. கொண்டு - மூன்றாம் வேற்றுமைச் சொல்லுருபு, இது இடைக்குறைந்தது. உலகத்துள்ளார் முன் வினை வழியாக உடலிற் சமைந் திருக்கின்ற உணவையே விரும்பி முயல்கின்றாரே யன்றி வினை கொண்டு அடையப் பெறாத தேன் பொருந்திய மலர்களா லருச்சிக்கின்ற நினது திருவடியை யடையும்பொருட்டு நாடோறும் வேண்டி முயலுகின்றா ரில்லை என்பதாம்.

47. மாங்குயின் மிழற்று நாவலூர்ப் புலவன்
மறுப்படு முடிமிசை யிருத்தும்
பூங்கழ லடியேன் றலைமிசை யிருத்தப்
புகலினு மென்கொனீ யிரங்கா
யோங்குறு மண்ட கோளகை யளவு
முயர்ந்துமோர் மழவிடை முதுகிற்
றாங்குபு நடக்க விருந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) ஓங்குறும் - உன்னதமான, அண்டம் கோளகை அளவும் - அண்டப் பரப்பளவும், உயர்ந்தும் - ஓங்கிய திருமேனி வாய்க்கப்பெற்றும், ஓர் மழவிடை - ஓர் இளமை தங்கிய இடபம், முதுகில் தாங்குபு நடக்க-தனது முதுகில் ஏந்திச் செல்ல, இருந்தி

டும் - கணமின்றி அதி லமருகின்ற, சோணசைலனே கைலைநாய கனே-சோணசைலரே! கைலைநாயகரே!, மா குயில் மிழற்றும் - மாஞ்சோலையில் குயில்கள் இசைக்கும் வளமிக்க, நாவலூர் புல வன் - திருநாவலூர்ப் புலவரான சுந்தரமூர்த்தி நாயனர், மறுப்ப வும்-பலமுறை தடுக்கவும், முடிமுசை இருத்தும் - அவர் சிரசிலே சூட்டும், பூ கழல்-தாமரை மலர்போலும் திருவடிகளை, அடியேன் தலைமிசை இருத்த - தொண்டனை யான் என் சிரசிலே சூட்ட, புலினும் - பலமுறை துதித்து வேண்டினும், நீ இரங்காய்-தேவ ரீர் இரங்கலீர், என்கொல் - என்னே?; (எ - று.)

(வி-ரை) நாவலூர்ப் புலவன் என்றது சுந்தரமூர்த்தி சுவாமி களை. இவர் மறுத்தது திருவதிகையில் சித்தவட மடத்தில் சிவ பெருமான் அந்தணராய் வந்து திருமுடியில் திருவடியைச் சூட்டிய பொழுது. கொல் - இரக்கம்பற்றி வந்த ஐயம். அண்டகோளகை யளவு முயர்ந்தும் மழவிடை முதுகிற் றங்க இருத்தலாவது-மலை வடிவா யிருத்தலோடு சோமாஸ்கந்தராதிய வடிவமாகியும் அமர் தல். 'ஒரு' என்பது ஈண்டுச் சிறுமைப் பொருளது; தமிழ் அடையு மாம். தாங்குபு-செய்பு என்னும் வாய்பாட்டு வினையெச்சம்.

### நாவலூர்ப் புலவன் தன் முடிமிசைச் சிவபெருமான் இருத்திய பூங்கழலை மறுத்த வரலாறு:—

சுந்தரமூர்த்தி நாயனர் சிதம்பரத்திலே திருநடனஞ் செய் கின்ற சபா நாயகரைத் தரிசிக்க விரும்பி, பெண்ணை நதியைக் கட ந்து, அஸ்தமயன காலத்திலே திருவதிகையி னெல்லையை யடை ந்து, திருநாவுக்கரசு நாயனர் உழைவாரத்தினலே நமது சிவ பெருமானுக்குக் கைத்தொண்டு செய்த ஸ்தலத்தில் அடியிட அஞ்சி அதற்கு உள்ளே போகாமல் சமீபத்திலிருந்த சித்தவட மடத்திற் குப் போய், திருவதிகை வீரட்டானத்தில் எழுந்தருளி யிருக்கின்ற கடவுளுடைய திருவடிகளைத் தியானித்துக்கொண்டு நித்திரை

செய்தார். அப்பொழுது, வீரட்டானேசுரர் ஒரு விருத்தப் பிராமணராகி அம் மடத்தினுள்ளே புகுந்து, சுந்தரமூர்த்தி நாயனாருடைய சிரசின் மேலே பாதத்தை வைத்து நித்திரை செய்பவர் போலக் காட்டி யருளினார். நாயனார் விழித்து, "ஐயரே! என் உம்முடைய பாதத்தை என் சிரசின்மேல் வைத்தீர்?" என்ன, மூப்பினால் அறியாமற் செய்துபோட்டேன்" என்றார். நாயனார் தம்முடைய சிரசை வேறொரு திக்கில் வைத்துக்கொண்டு நித்திரை செய்தார். எம்பெருமான் அவ்விடத்திலும் சென்று நாயனாருடைய சிரசின் மேலே பின்னும் தம்முடைய பாதத்தை நீட்ட, நாயனார், "இங்கே என்னைப் பலமுறை மிதித்த நீர் யாவர்?" என்று கேட்டார். உடனே சிவபெருமான் "என்னை நீ அறியாயா?" என்று சொல்லி மறைந்தருளினார்.

அது கண்டு நாயனார் தம்மை மிதித்தவர் கடவுளென்று மதித்து அறிந்து, "தமியேன் இறுமாப்படைந்து ஆண்டவரை அறியாமல் என்ன செய்தேன்" என்று சொல்லி வீரட்டானேசுரர்மேல்,

"தம்மானை யறியாத சாதியா ருளரே
சடைமேற்கொள் பிறையானை விடைமேற்கொள் விகிர்தன்
கைம்மாவி னுரியானைக் கரிகாட்டி லாட
லுடையானை விடையானைக் கறைகொண்ட கண்டத்
தெம்மான்ற னடிக்கொண்டென் முடிமேல்வைத் திடுமென்னு
மாசையால் வாழ்கின்ற வறிவிலா நாயேன்
எம்மானை யெறிகெடில வடவீரட் டானத்
துறைவானை யிறைபோது மிகழ்வன்போ லியானே."

என வரும் பதிகச் செய்யுள் பாடி யருளினர் என்பதாம்.

சிவபெருமான் அன்பர் மறுப்பினும் தானே யுவந்து அடிமை கொள்ளுவ னென்பதும், அன்பரல்லார் வேண்டினும் கொள்ளா

னென்பதுந் தோன்ற 'நாவலூர்ப் புலவன் மறுப்பவு முடிமிசை யிருத்தும் பூங்கழ லடியேன் புகலினு மென்கொனீ யிரங்காய்' என்றார். 'பூங்கழல்' என்பதற்கு இலக்கணம் முன்னுரைத்தாங் குரைக்க.

48. ஈரமு மருளு மொழுக்கமுஞ் சால்பு
 மின்சொலு மிந்தியப் பகைவெல்
 வீரமு மருளி யெனதுவெம் பிறவி
 விலக்கியாட் கொள்ளுநா ளுளதோ
 வாரமு மகிலுந் தடிந்துசெம் மணிக
 ளரித்தெறிந் தெறும்வலிக் குறவர்
 சாரலி னிறுங்கு விதைக்குறுஞ் சோண
 சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) எறும் வலி குறவர் - மிக்க வன்மையுடைய வேடர்கள், சாரலில் ஆரமும் அகிலும் தடிந்து - மலைச் சாரலிலுள்ள சந்தன மரங்களையும் அகில் மரங்களையும் வெட்டி, செம்மணிகள் அரித்து எறிந்து - அங்குள்ள செவ்விய நாக மணிகளைக் கொழித்தெடுத் தகற்றி, இறுங்கு விதைக்குறும் - சோளங்களை விதைத்து விளைவிக்கப்படும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, ஈரமும் - அன்பும், அருளும் - கருணையும், ஒழுக்கமும் - ஆசாரமும், சால்பும் - குணவமைதியும், இன்சொலும் - இனிய சொற்களும், இந்தியம் பகை வெல் வீரமும் - பஞ்சேந்திரியங்களாகிய பகைகளை வெல்லும் திடமும், அருளி - அடியேனுக்குத் தந்தருளி, எனது வெம் பிறவி - என்னுடைய வெவ்விய பிறவிப் பிணியை, விலக்கி - அகற்றி, ஆள் கொள்ளும் நாள் - அடிமை கொண்டருளும் காலமும், உளதோ - உண்டோ? (அறியேன்); (எ - று.)

(வி - ரை) அன்பு-உரியவரிடத்து நிகழும் மன நெகிழ்ச்சி. அருள்-எல்லார் மாட்டும் நிகழுந் தயை. ஈரம் முதலியவை ஒன்றுக்கொன்று காரண காரியமாய்ப் பிறவி நீக்குதற்கு ஏதுவாதல்பற்றி முறைபடுத்து வேண்டியபடி. ஆரமாதிகளைத் தடிந்து எறிதற்குக் காரணம் அவற்றினைப் பொருட்படுத்தாமை. அகில்-சந்தனமரம் போல வாசனையுடைய தொரு மரம்; இது முதிர்ந்து வைரம் பற்றிய கள்ளிச் செடியிடையினும் பிறக்கும்.

(நான்மணிக்கடிகை-சு)

"கள்ளி வயிற்றி னகில் பிறக்கும்"

என்பதனானு முணர்க. எறுழ்வலி - ஒருபொருட் பன்மொழி. குறவர்கள் மலைச் சாரலிலுள்ள சந்தன மரங்களையும் அகில் மரங்களையும் வெட்டி ஆங்குள்ள நாக மணிகளைக் கொழித் தெறிந்து சோளத்தை விதைக்கா நின்ற வளப்பத்தையுடைய சோண சைலம் என்பதாம்.

எனது பிறவியை யொழித்து என்னை ஆட்கொண் டருளும் என்பது கருத்து.

49. தொகைமிகு மமரர் முனிவரர் பரவித்
தொழுதகை யொடுவிரை கமழ்பூம்
புகைமிகு மணிமண் டபத்திடை நெருங்கப்
புழுகுநீ யணிதல்கண் டுவந்தேன்
குகைமிகு வாயிற் சோதிமா மரஞ்சேர்
குளிர்மதி விழுங்கவாய் வைத்துத்
தகைமிகுமூரற் றிரளைநேர் சோண சைலனே
கைலைநா யகனே.

(ப - ரை) குகை மிகு வாயில்-மலைக் குகையினது பெருத்த வாயின்கண் ணிற்கும், மா சோதிமரம் சேர் குளிர் மதி

பெரிய சோதிமரத்தின் நுனியிற் சேர்ந்த குளிர்ந்த சந்திரன், விழுங்க வாய் வைத்த-விழுங்குதற்கு வாயின்கண் வைத்த, நகை மிகும் - வெண்ணிற மிக்க, மூரல் திரளை - அன்னத் திரட்சியை, நேர் - ஒத்து விளங்குகின்ற, சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, பூ விரை கமழ்-பொலிவு பெற்ற வாசனை வீசும், புகை மிகும் - புகை மிகுந்த, மணி மண்டபத் திடை - மணிகள் பதித்த மண்டபத்தினிடத்தில், தொகை மிகும் அமரர் - கூட்டமான முப்பத்து முக்கோடி தேவராதியர்களும், முனிவரர் - முனிவர்களும், பரவி - துதித்து, தொழுத கையொடு - அஞ்சலிக்குங் கரங்களோடு, நெருங்க - நெருங்கி நின்று தரிசிக்க, நீ புழுகு அணிதல் கண்டு - தேவரீர் புழுகணிந்துகொள் ளும் விழாவினைத் தரிசித்து, உவந்தனன் - உவப்படைந்தனன். (இதற்கு எப் புண்ணிய மியற்றினேனோ அறிந்திலேன்); (எ-று.)

(வி - ரை) சோணசைல நாதருக்கு மலைக்குகையே திருவா யாகவும், அங்கு நிற்குஞ் சோதிமரமே அன்னமமைக்கும் பாத்திர மாகவும், சந்திரனே பாற்றிரளன்னமாகவும் உருவகித்தவாறு. விரைகமழ் புகையாவது: குந்துருக்கம், பச்சைக் கற்பூரம், அகில், சந்தனம், கருஞ்சீரகம் என்பவற்றின் பொடியோடு சிறிது கட் லைப் பசுநெய் கலந்து இடுந் தூபம். இது பஞ்ச தூபமாம். இன்னுந் தசாங்கமுதலாகப் பல திறப்படும்.

தேவர்களும் முனிவர்களும் துதித்துக் கூப்பிய கையோடு வாசனை பரிமளிக்கின்ற அழகிய புகை மிகுந்த இரத்தின மய மான மண்டபத்தின்கண் நெருங்குற நீ புழுகணிதலாகிய திரு விழாவைத் தரிசித்துச் சந்தோஷித்தேன் என்பதாம்.

பூர்வத்திலே ஒரு புழுகு பூனை, இச் சோணசைலப் பெரும னுக்குச் சாந்தெனப் புழுகை யப்பி அகலாது வசித்த புண்ணியட்

பேற்றால் அயோத்தியிலே மனுகுலத்தில் ஏமாங்கதன் என்னும் அரசனா யுதித்துப், பூர்வ சன்ம வாசனையால் ஈங்கடைந்து, புழு காதிய கலவை யணிந்து வழிபட்டுச் சிவபதம் எய்திய ஐதீகம்பற்றி நடக்கும் மகோற்சவ தரிசனம் கிடைக்கப் பெற்ற ஆர்வமேலீட் டால் துதித்தவாறு. இச்சரித்திர விரிவை அருணகிரிபுராணம் தூரபதி புழுகு சாத்திய சருக்கத்தி லுணர்க.

புராண வரலாறு:—

"மானின மரைகண் மற்றை வனமிரு கங்க ளெல்லாங்
கானவர் வலையுங் கொண்டு வருதலைக் கண்டு கண்ணு
னூனுட னடுங்க வஞ்சி யோடலு மங்கோர் நாவி
தானுமுள் ளச்சந் தங்கா வோடியிச் சயிலந் தன்னை.

சார்ந்துளத் தச்சந் தீர்ந்து சரித்திடுஞ் சரிக்கு நாளி
லார்ந்தவன் பாலே யிந்த அருணவெற் பிலிங்கத் தொற்றிச்
சாங்தெனப் புழுகு தன்னை முன்னுள தவத்தி னாலே
யேர்ந்திட லின்றித் தங்கும் பேரர ணமக்கி தென்றே.

நாடொறும் புழுகு தன்னைச் சாத்தியே நயக்கு நாளின்
மூடிய வுடலின் கன்மம் பக்குவ முற்று முற்ற
வீடிய துடலப் போதே விரைந்துயர் வெற்பை நீங்கி
நீடிய மனத்தி னிந்தக் கிரியினை நினைந்து கொண்டே."

வேறு

"மண்டலத்தென் டிசையினையுங் காக்குமனு குலமன்னன் மதிமா னுய்யப்
பண்டையுணர் வொடுமெவனற் பாரிவயிற் றுதித்தேய யோத்தி தன்னில்.

லெண்டிசையும் புகழேமாங் கதனெனும்பேர் பரித்தெணத்தி
னருணை வெற்பைக்
கண்டிதனைக் கண்ணாரக் காண்பாஞ்சென் றென்றுளத்திற்
கருதிக் கொண்டே.

தந்தையனு மதிபெற்றுத் தணந்தந்தத் தலந்தன்னைத்
தானை சூழச்
சிந்தைமகிழ் வுறவழியிற் நீர்த்தங்கள் செறிந்தாடித்
தெரிசித் தேதான்
வந்தனையும் புரிந்தங்கங் கிலங்குசிவ லிங்கமயம்
வாரத் தோடே
யிந்தவெழி லருணகிரி சேர்ந்துதெரி சித்திறைஞ்சி
யின்ப முற்றான்.” என்பதாம்.

50. சினம்படு முளங்கொன் றவரவை யெனையுஞ்
சேர்ப்பது தகுமுனக் கிசைவண்
டினம்படு மலரி னகவித ழொடுபுல்
விதழுமொன் றுதலுல குடைத்தே
மனம்படு மடிமை யுளன்சிலை யெறிக்கு
மனங்குழைந் துமையவள் களபத்
தனம்பட வடிவங் குழைந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) மனம் படும் அடிமை உளன் - அகத்தொண்டுடையராகிய சாக்கிய நாயனார், எறி சிலைக்கு - விட்டெறிந்த கல்லுக்கு, மனம் குழைந்து - திருவுளம் உருகப்பெற்று, உமையவள் களபம் தனம் பட - உமாதேவியாரின் கலவை யணிந்த கனதன ஊறுத்துதலால், வடிவம் குழைந்திடும் - திருமேனி குழைந்து மகிழப்பெறும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, இசை வண்டு இனம் படும் மலரின் - இசை பாடும்

வண்டினங்கள் பொருந்திய மலர்களில், அகவிதழொடு புல் இதழும் ஒன்றுதல் - அகவிதழ்களோடு புறவிதழ்களும் பொருந்திநிற்றல், உலகு உடைத்து - உலகினியற்கையாகும் (ஆதலால்), சினம் படும் - சினக்கும், உளம் கொன்றவர் அவை-உளத்தின் சேட்டையையொழித்த அடியவர் கூட்டத்தில், எனையும் - அடியேனையும், சேர்ப்பது - (தேவரீர்) சேர்ப்பது, உனக்கு தகும்-நுமக்குப் பொருந்தும்; (எ-று.)

(வி - ரை) சினம் - கோபமிகுந் தடங்கிய பின் நிற்கும் ஒரு குணம்; இதனைத் திருமுருகாற்றுப்படையில் "கடுஞ்சினங் கடிந்த காட்சியர்" என்பதற்கு நச்சினார்க்கினிய ரருளிய உரையானு முணர்க. சினம்படுமுளங் கொன்றவர் என்றது கோபம் பொருந்திய வுள்ளத்தை நாசஞ்செய்த சிவனடியார்களை. அவை - கூட்டம்; அவைக்களமுமாம். சாதுசங்கம் முத்திக்குக் காரணமாதலின், 'சினம்படுமுளங் கொன்றவ ரவை யெனையும் சேர்ப்பது' என்றார். எனையும் என்பதில் உம்மை இழிவுசிறப்பு. அர்ச்சனை வழிபாட்டிற் குரியதாகும் அகவிதழொடு உரித்தாகாப் புறவிதழும் பூவிதழென்னும் ஒற்றுமையால் ஒன்றிநிற்றல் உலகியற்கையாகலின், உரிய உமது தொண்டரோடு உரிமையற்ற யானும் உமது தொண்டனெனப் பெயர் பூண்டிருத்தலின் ஒன்றிநிற்றற்பாலனே யென்பார், 'மலரி னகவித ழொடுபுல் லிதழுமொன் றுதலுலகுடைத்து' எனவும், 'எனையுஞ் சேர்ப்பது தகுமுனக்கு' எனவும் என்றார். உடைத்து - குறிப்பு வினைமுற்று. சாக்கியநாயனார் புறத்தே தொண்டுடைய ராகாது அகத்தே தொண்டுடைய ராகலின், 'மனம்படு மடிமையுள்ளன்' என்றார். 'சிலையெறிக்கு மனங்குழைந்து' என்ற குறிப்பால், 'மனம்படு மடிமையுள்ளன்' என்பது சாக்கியநாயனாரைக் குறித்து நின்றது. 'சிலையெறிக்கு' என்பது உருபு பிரித்துக் கூட்டப்பட்டது.

"அல்லி அகவிதழ்"
"புல்லி புறவிதழ்"

என்பன திவாகரச் சூத்திரம்.

சாக்கியநாயனர் கல்லெறிக்கு உளம் குழைந்த சரிதம்:—

அறுபான் மும்மை நாயன்மாருள் ஒருவராகிய சாக்கிய நாயனுர் என்பவர் திருச்சங்கமங்கையில் வேளாண் குலத்துதித்தவர். இவர் காஞ்சிநகரை யடைந்து பெளத்தராகி அம் மத நூல்களை யாராய்ந்தும் அச் சமயப் பற்றின்றிச் சைவசமயமே மெய்ச்சமய மென் றுணர்ந்து அப் பெளத்த கோலத்திலேயே நின்று, வெள் ளிடையி லிருந்ததொரு சிவலிங்கத்தைக் கண்டு அதனிடத்து உள் ளன் புடையராய்க் கல்லெறிதலையே அர்ச்சனையாகக் கொண்டு ஒழுகுநாளில், ஓர்நாள் அதனை மறந்து போசனம் செய்யப் போகும் போது 'இன்றைக்கு எம்பெருமானை எறியாமல் மறந்துவிட்டேன்' என்று எழுந்து சிவலிங்கத்தை யணைந்து, ஒரு கல்லை எடுத்து அதன் மேல் எறிய, பத்திவலையிற் படுபவராகிய சிவபெருமான் அதற்கு உளங் குழைந்து உமாதேவியாரோடும் இடபாரூடராய் ஆகாயத்தி லே தோன்றி அவரைத் தமது திருவடியிலே சேர்த்தருளினுர் என்பதாம்.

51\. வாம்பரி கரிதேர் சிவிகைபொற் குவியன்
  மணிப்பணி பெரும்புவி யாட்சி
யாம்பரி சலவென் றுன்பத மருவி
  னன்றியென் கவிகளென் கவிகள்
காம்பரி முரண்மும் மதகரி வளைத்த
  கைவிட மோதலாற் கதிர்த்தேர்த்
தாம்பரி துணுக்கென் றீர்த்திடுஞ் சோண
  சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) முரண் மும்மதம் கரி - வலிமையும் மும்மதமு முடைய யானையானது, கை வளைத்த காம்பு அரி விட-துதிக்கை யால் வளைத்த மூங்கில்களை விட(அவை தாக்குதலால்), கதிர் தேர் தாம் பரி-சூரியனுடைய தேரிற் பூட்டப்பட்டுத் தாவிச் செல்லும் சப்தமாவென்னுங் குதிரை (அதைச் சம்மட்டியின் அடியென மதித்துத்), துணுக்கென்று ஈர்த்திடும்-விரைவாகத் தேரை இழுத் துச் செல்லும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைல ரே! கைலைநாயகரே!, வாம் பரி கரி தேர் சிவிகை - தாவிச் செல் லும் குதிரை யானை இரதம் பல்லக்கு, பொன் குவியல் மணி பணி பெரும் புவி ஆட்சி - பொற்றிரட்சி அரதனம் பதித்த அணிகள் பெரிய உலகு ஆளுதல்(ஆகிய இவைகள்), ஆம் பரிசு அல என்று-விர்த்திக்குந் தகுதியுடையன அல்லவென்று வெறுத்து, உன் பதம் மருவின் அன்றி - தேவரீரது திருவடிப் புகழ்ச்சியைப் பெற்றாலல்லது, என் கவிகள் என் கவிகள் - என்து பாடல்கள் என்ன பயனைத் தரும் பாடல்களாகும்? (ஒரு பயனையும் தாரா தனவே;) (எ - று.)

(வி - ரை) ஆம் பரிசு - விருத்திக்குந் தன்மையன. ஆம் பரிசு என்புழி ஆகும் என்பது விர்த்திக்கும். ஆதல்-விர்த்தித்தல். விர்த்திப்பன வல்லவெனவே அழிவன வென்பது தாமே போத ரும். பரிசு - பரிசுடைப் பொருளை யுணர்த்தலின் ஆகுபெயர். கவிகள் உலக இன்பத்தை விழைந்து புகழாது திருவடிகளைப் புகழ்ந்தாலல்லது பயனுடையன வாகா என்பது கருத்து. காம்பரி மோதலால் என இயையும். காம்பு அரி - மூங்கில், இருபெய ரொட்டு; 'உடுபம்' என்பது போல. இதனை ஒரு பொருட் பன்மொழி என்றலும் ஒன்று; அது காரணமின்றிச் செவிக்குச் சொல்லின்பந் தோன்ற நிற்றலால், 'மீமிசை' என்பது போல.

'காம்பு அரி' என்பதற்கு 'மூங்கிலின் செறிவும் ஆம். வாவும், ஆரும், தாவும் என்பன இடைக் குறைந்தன.

"செய்யுமெ னெச்சவீற் றுயிர்மெய் சேறலும்"

என்றதனால் செய்யுமெ னெச்ச வீற்றுயிர்மெய் கெட்டன. இவை மகர வொற்று நிற்றலின் வினைத்தொகை யாகா வென்க. பரி முதல் புவியாட்சி யீறாகிய எண் வகைச் செல்வமும் அழியும் பொருளாதலின் அவை பரிசல என்று உன் பதம் மருவினன்றி என் கவிகள் என் கவிகள் என்றார் என்க.

52. துன்னுறு துயரப் பிறவிவெங் கொடுநோய்
தொலைப்பினுந் தொலைத்திடா துறினு
நின்னடி மலரை யன்றியான் மறந்து
நினைப்பனோ விறக்கும்வா னவரை
மன்னளி பருக வுடையிறான் மதுவும்
வாரண மதமும்வெள் ளருவி
தன்னொடு மிகலி யொழுகுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) மன் அளி பருக - நிலைபெற்ற வண்டுகள் மொய்த் துண்ணுதலால், உடை இறால் மதுவும் - உடைந்த தேன் கூட்டி னின்றும் ஒழுகும் தேனும், வாரணம் மதமும் - யானையின் மத நீரும், வெள்ளருவி தன்னொடும் இகலி-வெள்ளிய அருவி நீரோடு மாறுபட்டு, ஒழுகுறும்-இழியப் பெறும், சோணசைலனே கைலை நாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, துன் உறு துயரம் பிறவி வெம் கொடு நோய் - மேன்மேலும் துன்பமயமாகிய பிறவி யென்னும் வெவ்விய கொடிய பிணியை, தொலைப்பினும் - (அடியேனுக்கு) ஒழிப்பினும், தொலைத்திடாது உறினும் - ஒழிக் காது மேன்மேல். உறச் செய்யினும், நின் அடி மலரை அன்றி -

தேவரீரது திருவடித் தாமரைமலரை யல்லது, இறக்கும் வானவரை - மரிக்கும் தேவ கூட்டங்களை, மறந்தும் - மறந்தேனும், யான் நினைப்பனோ-அடியேன் தியானிப்பனோ? (தியானியேன்); (எ - று.)

(வி - ரை) அநாதியாய் விடாது தொடர்ந்து வருதலால், 'துன்னுறு பிறவி' என்றார். அது அணுத்துணையும் இன்பம் பயத்தலின்றித் துன்பமே பயத்தலால், 'வெங்கொடு நோய்' என்றும் கூறினர்.

(திருவாசகம் - குழைத்த பத்து - உ)

"உடையாய் கூவிப் பணிகொள்ளா
தொறுத்தா லொன்றும் போதுமே."

என்றபடி ஆண்டானுற் பெறும் தண்டனையும் ஆக்க விளைவிற்கு ஏதுவா மாகையால், 'தொலைப்பினும் தொலைத்திடா தறினும்' என்றார். தேன் செந்நிறமும் மதம் கருநிறமுமாய் நிறம் வேறுபடுதலால், 'வெள்ளருவி தன்னொடு மிகலி' எனக் கூறலாயிற்று. இகலி யொழுகல் - நிறம் மாறுபட்டுப் பெருகல். உறவிப்பினும் என்னும் பிறவினை 'உறினும்' எனத் தன்வினையாய் நின்றது. இதனைத் தன்வினை பிறவினை மேற்று எனவும், விவ்விகுதி தொக்கது எனவும் கூறுப. இறால் - தேனடை. சிவபெருமானை யன்றி யொழிந்த தேவர்கள் பிறந்திறப்பர் என்பதும், அவர்களைச் சிந்திப்பதாற் பயன் இன்று என்பதுந் தோன்ற, 'மறந்து நினைப்பனோ விறக்கும் வானவரை' என்றார்.

எனது பிறவி நோயை நீ நீக்கினும் அல்லது நீக்காவிடினும் நினது திருவடித் தாமரையே யன்றி இறந்துழலும் ஏனைத் தேவர்களை மறந்தாயினும் நினைப்பனோ. நினையேன் என்பதாம்.

53. நீரினு லழலால் வருங்கொடும் பிணியா
    னிருதரா லலகையால் விலங்காற்
சோரரால் வருந்து மவரலர் நினது
    தூயநா மம்புகன் றிடுவார்
சீருலா மணியா லரிபர வுதலாற்
    றிசையுற நீள்கையா லெழின்மை
சார்தலா லுமையாள் விழிநிகர் சோண
    சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) சீர் உலாம் மணியால் - கனம் வாய்ந்த அரதன மணிகளாலும் (பொலிவமைந்த கண்மணியுடைமையாலும்), அரி பரவுதலால் - சிங்கங்கள் சூழ்தலாலும் (செவ்வரி பரவப்பெறுதலாலும்), திசை உற நீள்கையால் - திக்குகளிற் பொருந்த நீண்டிருத்தலாலும் (நோக்கம் அமைய நீளச் செல்லுதலாலும்), எழில் மை சார்தலால் - எழுச்சியுடைய மேகங்கள் தவழ்தலாலும் (அழகிய மை தோய்தலாலும்), உமையாள் விழி நிகர்-உமையம்மையின் திருக்கண்களுக்கு நிகராய்த் திகழும், சோணசைலனே கைலை நாயகனே-சோணசைலரே! கைலைநாயகரே!, நினது தூய நாமம்-தேவரீருடைய சுத்தமாகிய திருநாமத்தை, புகன்றிடுவார் - துதிக்கப் பெறுமவர்கள், நீரினுல் அழலால் - நீராலும் நெருப்பாலும், வரும் கொடு பிணியால் - (வாத பித்த சிலேஷ்மங்களால்) உண்டாகும் கொடிய நோய்களாலும், நிருதரால் அலகையால் - அரக்கராலும் பசாசங்களாலும், விலங்கால் சோரரால் - மிருகங்களாலும் கள்வர்களாலும், வருந்துமவர் அலர் - துயருழப்பவர் ஆகார்கள்; (எ-று.)

(வி - ரை) நீரினுல் முதலியவற்றின் மூன்றனுருபுகள் கருவிப்பொருளன.

(ஆளுடைய பிள்ளையார் தேவாரம்-நமச்சிவாயப் பதிகம்-கஎ)

"ஓதுவார்தமை நன்னெறிக் குய்ப்பது"

ஆகலின் சிவநாமத்தினைத் 'தூய நாமம்' என்றார்.

(ஷை ரு)

"கோல்வா ரேனுங் குணம்பல நன்மைக
ளில்லா ரேனு மியம்புவ ராயிடி
னெல்லாத் தீங்கையு நீங்குவர்."

என்பது திண்ணமாகலின், 'வருந்து மவரலர்' என்றார்.

பின்னிரண்டடியும் சிலிஷ்டமாய்ப் பொருள் பயத்த லுணர்க. சிலிஷ்டம் - சிலேடை. சீருலாம் அணியெனவும் பிரித்தலும், சோணசைலத்தில் 'அரி பரவல்' என்பதற்குத் 'திருமால் துதித்தல்' என்னலும் ஒன்று. திசை - திக்கு, நோக்கம் (கண்). எழில்-எழுச்சி, அழகு. எழுச்சியெனக் கொள்ளுங்கால்,

"நுண்மா ணுழைபுல மில்லா னெழினல
மண்மாண் புனைபாவை யற்று."

என்பதிற்போல எழில் என்பதில், 'இல்' தொழிற்பெயர் விகுதி என்க. சிவபெருமானது திருநாமங்களைப் புகலுநர் ஒன்றானும் வருந்தார் என்பது கருத்து.

54. முகவிளக் கென்ன மணிக்குழை மிளிர
முழுமுகட் டணிபெற மலராள்
பகல்விளக் கென்ன வொளிகெட வரும்பொற்
பாவையர்க் கிரங்கிடா தருளா
யகவிளக் கென்ன வகற்றிரி நெய்தீ
யாக்குவோ ரின்றியே யெழுந்த
சகவிளக் கென்ன விளங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) அகம் விளக்கு என்ன - ஒவ்வொரு வீட்டினும் ஏற்றப்பட்ட விளக்கினைப்போல, அகல் திரி நெய் தீ - தகழியும் திரியும் நெய்யும் நெருப்பும் (ஆகிய இக் கருவிகளைக் கொண்டு), ஆக்குவோர் இன்றியே - ஏற்றுவோரும் இல்லாமலே, எழுந்த சகம் விளக்கு என்ன - ஒளியுடன் தோன்றிய உலக தீப மென்று அன்பர்கள் துதிக்குமாறு, விளங்குறும் - பிரகாசிக்கும், சோண சைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, முகம் விளக்கு என்ன-முகத்துக்கு (ஈரோர்) விளக்க மென்னும் படி, மணி குழை மிளிர - அரதனத்தோடு விளங்க, முலை முகடு அணி பெற - முலைகள் தம்மேலே ஆபரண வகைகளின் அழகு பெற, மலராள் - தாமரை மலரில் வசிக்கும் இலக்குமியும், பகல் விளக்கு என்ன - பக லொளிமுன் தீப வொளிபோல, ஒளி கெட வரும்-(தம்முன்)ஒளி கெடும்படிவராநின்ற, பொன் பாவையர்க்கு-பொற் பதுமை போல்வாராகிய மகளிர்க்கு, இரங்கிடாது - காதல் பூண்டு வருந்தாதபடி, அருளாய் - கிருபை செய்வீராக; (எ-று).

(வி - ரை) 'விளக்கு' என்பதில் வினைமுதற் பொருள் விகுதி புணர்ந்து கெட்டது. விளக்கு - விளக்கத்தைச் செய்வது. பகல் விளக்காதல் என்பது தன்னொளி மழுங்கல். மிளிர, பெற, வரும் பாவையர் என இயையும். அக விளக்குக்கு மாறுபட்டுக் கருவியாதிக ளின்றி உலகை விளக்கும் விளக்கென்றது முடிவி லாற்றலுடைமையை விளக்கி நின்றது. முகத்தின்கண் ஏற்றிய இரண்டு தீபத்தைப்போல இரத்தினக் குழைகள் பிரகாசிக்கவும், தனங்கள் தம்மேலே ஆபரண வகைகளினால் அழகு பெறவும், தாமரையில் வசிக்கும் இலக்குமியும் பகலில் ஏற்றிய தீபத்தைப் போலத் தனது பிரகாசம் மழுங்கவும் வராநின்ற பொற் பாவை யை யொத்த மகளிர்க்கு யான் இரங்காம லிருக்கக் கிருபை செய் வீராக என்பதாம்.

முலை முகடு அணி பெற - தனங்கள் தம்முச்சியினிடத்து அணிகளைப் பெற்றிருக்கவும் எனினு மமையும். அணி என்றது ஈண்டுத் தனுபரணத்தை. 'பகல் விளக்கு' என்பதற்குப் 'பக லில் ஏற்றிய விளக்கு' எனினு மமையும்.

55. நீலியோ டுனைநா டொறுமருச் சித்து
நின்றொழில் புரிந்திட வுடற்குக்
கூலியோ தனமென் றளிப்பவர்க் கன்றிக்
கூற்றினைக் கடக்குமா றெளிதோ
மாலியோ சனையின் வணங்குறுங் கைலை
மலைநிவே தித்திடக் குவித்த
சாலியோ தனமென் றிடத்திகழ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) மால் - திருமாலும், யோசனையில்-நெடுந்தூரத்தி னின்று, வணங்குறும் - வணங்கும், கைலைமலை-திருக்கைலை மலை யானது, நிவேதித்திட-நிவேதனஞ் செய்தற் பொருட்டு, குவித்த சாலி ஓதனம் என்றிட - குவித்த செந்நெலாற் சமைத்த அன்னக் குவிய லென, திகழ் - (எதிரில் விளங்கப்) பிரகாசிக்கும், சோண சைலனே கைலை நாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, நீலியோடு உனை - அம்பிகையாருடன் தேவரீரையும், நாடொறும்- தினமும், அருச்சித்து - பூசித்து, நின் தொழில் புரிந்திட - உமது தொண்டினையே செய்துவருதற்கு, உடற்கு கூலி - உடலுக்குக் கூலியாகக் கொடுக்கற்பாலது, ஓதனம் என்று அளிப்பவர்க்கு அன்றி - அன்னமெனத் தேர்ந்து கொடுக்குந் துறவிகட்கே யல் லது (உடற் பற்றுடைய ஏனையோர்க்கு), கூற்றினை - இயமனை, கடக்கும் ஆறு எளிதோ - கடந்து கொள்ளும் விதம் எளிமைய தாமோ! (அரிதாம்); (எ - று.)

(வி - ரை) நீலியோடு என்பதில், ஓடு - ஒற்றுமைப் பொருளது; "எழுத்தோடு புணர்ந்த சொல்" என்புழிப்போல. நீலி - நீலநிறப்படிவத்தள். *"பிறப்பறுக்க, லுற்றார்க்கு உடம்பும் மிகை" யேனும் முத்தி சித்திக்கும் வரையும் கடவுள் வழிபாட்டிற்குவேண்டியிருத்தலின், அதன்பொருட்டு உடலோம்புவார்க்கல்லது போகாதிநுகர்ச்சியின் பொருட்டு ஓம்பும் தேகாபிமானிகளுக்குக் கூற்றைக் கடத்த லரிதென்பதாம். 'யோசனை' ஈண்டு நெடுந்தூரத்தின் மேற்று. மாலும் என்னு முயர்வு சிறப்பும்மை தொக்கது. 'மாலும்' எனவே ஏனையோ ரனுகற்கு எளிது கொல்லோ? என்பது கருத்து. அத்தகைய கைலையும் தமக்கெதிர் குவித்த திருப்பாவாடை போன்று விளங்கத் திகழும் சோணசைல மென்க.

உமாதேவியோடு சிவபெருமானைப் பூசித்து அப் பெருமானது தொழில் புரிந்திடுதலே யுடலெடுத்தற்குப் பெரும் பயனென்பதூஉம், அப் பயனைப் பெறுதற்கு உடல் காரண மென்பதூஉம், அவ் வுடல் பாதுகாத்தற்கு அன்னங்காரணமென்பதூஉந் தோன்ற, 'நீலியோடுனை நாடொறு மருச்சித்து நின்றொழில் புரிந்திட வுடற்குக் கூலியோதனம்' என்றார்.

56. தோற்றிடும் பிறவி யெனுங்கடல் வீழ்ந்து
துயர்ப்பிணி யெனுமலை யலைப்பக்
கூற்றென்னு முதலை விழுங்குமுன் னினது
குரைகழற் கரைபுக விடுப்பா
யேற்றிடும் விளக்கின் வேறுபட் டகத்தி
னிருளெலாந் தன்பெய ரொருகாற்
சாற்றினு மொழிக்கும் விளக்கெனுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

* திருக்குறள் - ௩௪௫.

(ப - ரை) எற்றிடும் விளக்கின் வேறுபட்டு - உலகின்கண் எற்றிவைக்கும் விளக்கிற்கு மாறுபாடுடையதாய், தன் பெயர் ஒருகால் சாற்றினும்-தனது திருநாமத்தை ஒரு முறை உச்சரிப்பினும், அகத்தின் இருள் எலாம் - உள்ளத்தினை மறைத்தலைச் செய்துறையும் ஆணவாதி மலவிருட்கூட்ட முற்றும், ஒழிக்கும் - கெடுத்தருளும், விளக்கு எனும் - விளக்கீதென்று அன்பர்களாற் றுதிக்கப் பெறும், சோணசைலனே கைலைநாயகனே - சோண சைலரே! கைலைநாயகரே!, தோற்றிடும் - உதிக்கும், பிறவி எனும் கடல் - பிறப்பெனும் கடலில், வீழ்ந்து - விழுந்து, துயர் பிணி எனும் அலை - துன்பினை விளைக்கும் பிணிகளாகிற அலைகள், அலைப்ப - (இடையே) அலைதலைச் செய்ய, கூற்று எனும் முதலை விழுங்குமுன் - இயமனென்னும் முதலை யணுகி உட்கொள்ளும் முன்னரே, குரை கழல் கரை புக - தேவரீரது ஒலிக்கும் வீரக்கழ லணிந்த திருவடியென்னுங் கரையி லடையுமாறு, விடுப்பாய் - (அடியேனைச்) சேர்த்தருள வேண்டும்; (எ - று.)

(வி - ரை) அளவுபடாமையின் பிறவியைக் 'கடல்' என்றும், மேன்மேலும் மூண்டெழுதலின் பிணியை 'அலை' என்றும், "மூர்க்கனும் முதலையும் கொண்டது விடா" என்றபடி தான் பற்றிய வுயிரை மீளவிடாமையின் இயமனை 'முதலை' என்றும், உருவகித்தார். கழல்-தனியாகுபெயராய்த் திருவடியை உணர்த்திற்று. குரைகழல் எனக் கொள்ளின் வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகையுமாம். விளக்கின் என்புழி, 'இன்' ஐந்தனுருபு நீக்கப் பொருளது. வேறுபடுதலாவது-எற்றிடும் விளக்குத் தன்னை யெதிர்ப்படும் புறவிருளொன்றே ஒழிப்பதாகத் தான் அதற்கு மாறாய் எதிர்ப்படாது கரந்துறையும் மலமென்னும் அகவிருளையும் தன்பெயர் உரைத்த மாத்திரத்தானே ஒழித்தல். இதனை,

"இல்லக விளக்கது இருள்கெ டுப்பது
நல்லக விளக்கது நமச்சி வாயவே."

என வரும் ஆளுடையவடிகள் தேவாரம் - நமச்சிவாயப் பதிகத்தானும் உணர்க.

57. கந்தர மிருந்து மடகுநீ ரயின்றுங்
கரநிலத் தமைத்திரு பதமு
மந்தர நிமிர்த்து நின்னிலை யறியா
ரரும்பவ மொழியுமோ வுரையா
யிந்திரன் வனத்து மல்லிகை மலரி
னிண்டைசாத் தியதென நிறைந்த
சந்திரன் முடிமேல் வந்துறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) இந்திரன் - இந்திரனுடையவன், வனத்து மல்லிகை மலரின் - தனது நந்தனவனத்து மலர்ந்த மல்லிகை மலரினாற் றொடுத்த, இண்டை சாத்தியது என - கொண்டை மாலையைச் சாத்தியதுபோல, நிறைந்த சந்திரன் - பூரண சந்திரன், முடிமேல் வந்துறும் - திருமுடியின்கண் வந்து நிலவப்பெறும், சோண சைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, நின் நிலை அறியார் - தேவரீரது உண்மை நிலையினை உணரப் பெறாதவர்கள், கந்தரம் இருந்தும் - மலைக் குகைகளில் வசித்தும், அடகு நீர் அயின்றும் - இலைகளையும் சலத்தையும் புசித்தும், கரம் நிலத்து அமைத்து-கரங்களைப் பூமியி லூன்றி, இரு பதமும் அந்தரம் நிமிர்த்தும் - இரு கால்களையும் உயரத் தூக்கியும் (கடுந் தவங்களைக் காலவரை யின்றிச் செய்யினும்), அரு பவம் ஒழியுமோ-(அவர்களுடைய) அரிய பிறவிகள் அகலுமோ?, உரையாய்-(தேவரீரே) திருவாய்மலர்ந்தருள்வீராக; (எ - று.)

(வி - ரை) *நிலையாவது - தன்வயத்தனாதல் முதலிய எண் குணமுடையராய் ஆன்மாக்களுக்கு வீடுபே றளித்தற்பொருட்டு நிக்கிரகானுக்கிரகம் பூண்டு அமரு மியல்பு. கடவுள் நிலையறியா தார் இயற்றும் கர்ம யோகங்கள் பயன்படா வென்பது கருத்து. 'அரும்பவம்' என்புழி, அருமை ஈண்டுக் கடுமை மேற்று; அருந் துயர் என்புழிப்போல. பவம் ஒழிதற்குச் சிவபெருமானது நிலை யறிதலே காரணம் என்பதூஉம், அது மெய்ஞ்ஞானத்தாலன்றி எத் தவத்தானும் அரிதென்பதூஉம் தோன்றக், 'கந்தா மிருந்தும் அடகுநீ ரயின்றும் காநிலத் தமைத்திரு பதமு மந்தா நிமிர்த்து நின்னிலை யறியா ரரும்பவ மொழியுமோ' என்றார்.*

**58.** கூம்புறு கரமு மலர்ந்திடு முகமுங்
கொண்டுநின் றனைவலம் புரிவோர்
மேம்படு சரண மலர்ப்பொடி மேனி
மேற்படிற் பவம்பொடி படுமே
பூம்பொழிற் புகலிக் கிறைவனா னிலஞ்சேர்
புண்ணியத் தலங்களி னடைந்து
தாம்புனை பதிகந் தொறும்புகழ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) பூ பொழில் புகலிக்கு இறைவன் - மலர்ச் சோலை கள் புடைசூழும் சீர்காழிக்குத் தலைவராகிய திருஞானசம்பந்த மூர்த்தி நாயனார், நால் நிலம் சேர் - நால்வகை நிலத்தைச் சார்ந் திருக்கும், புண்ணியம் தலங்களின் அடைந்து-புண்ணிய விருத்திக் குக் காரணமாகிய தலங்களி லெழுந்தருளி, தாம் புனை பதிகந் தொறும் புகழ்-தாம் துதிக்கும் பதிகங்களொறும் புகழ்ந்து பாடப் பெறும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, கூம்புறு கரமும் - குவித்த கைகளும், மலர்ந்திடு முகமும் கொண்டு-மலர்ந்த முகமு முடையராய், நின்றனை வலம்

புரிவோர் - தேவரீரைப் பிரதக்ஷிணஞ் செய்பவருடைய, மேம்படு சரணம் மலர் பொடி - மேன்மை வாய்ந்த திருவடி மலரின்கணெழும் தூளி, மேனிமேல் படில் - (அடியேனது) சரீரத்திற் படப் பெறுவேனேல், பவம் பொடிபடுமே-எனது பிறப்பும் அழிவடைந்திடுமே! (அங்ஙனம் பெற்றேனில்லையே!); (எ - று.)

(வி-ரை) 'கூம்புறு கரம்' என்றதற்கு 'மூரண்பட மலர்ந்திடு முகம்' என்றலின் முரண்டொடை.

"ஓடுவிழுந்து சீப்பாயு மொன்பதுவாய்ப் புண்ணுக்
கிடுமருந்தை யானறிந்து கொண்டேன்—கடுவருந்துந்
தேவாதி தேவன் றிருவொற்றி யூர்த்தெருவிற்
போவா ரடியிற் பொடி."

என்றார் பட்டினத்தடிகளுமாகலின் உடலை யொழிக்கு மருந்து அடியார்களின் பாத தூளியே யாதலால், 'பொடி மேனிமேற் படிற் பவம் பொடிபடுமே' என்றார். 'பொடிபடுமே' என்புழி, ஏகாரம் தேற்றம்; அசையுமாம். புகலிக்கிறைவன் - திருஞானசம்பந்தமூர்த்தி நாயனார்; ஒரு நகரத்தில் சிறப்புற்றாரை அந் நகரத்திற்கு இறைவனாகக் கூறுதல் மரபாதலான் இங்ஙனங் கூறினார்.

நானிலம்-நால்வகை நிலம்; அவை பாலை யொழிந்த குறிஞ்சி, முல்லை, மருதம், நெய்தல் என்பன.

சம்பந்தமூர்த்திக ளருளிய ஒவ்வொரு திருப்பதிகங்களிலும் ஒன்பதாவது பாடலில் இத் தல வியவத்தையே கூறுதலால், 'பதிகந் தொறும்புகழ் சோணசைலம்' என்றார். இதனை,

"விளவார் கனிபட நூறிய கடல்வண்ண னும்வேதக்
கிளர்தா மரைமலர் மேலுறை கேடில் புகழோனும்
அளவா வணமழ லாகிய வண்ணா மலையண்ணல்
தளரா முலைமுறு வல்லுமை தலைவண் ணடிசரணே."

எனத் திருவண்ணாமலைத் திருப்பதிகத்தில் ஒன்பதாவது செய்யுளில் பாடியது போலவே,

"கோணா கனையாளுங் குளிர்தா மரையாளுங்
காணார் கழலேத்தக் கனலா யோங்கினான்
சேணார் வாழ்தில்லைச் சிற்றம் பலமேத்த
மாணா நோயெல்லாம் வாளா மாயுமே."

எனக் கோயில்முதலிய பிற தலங்களிலும் திருவாய் மலர்ந்தருளினமையைக் காண்க. அருணாசலத்தை அன்பின் வலம் வருவோர் எதிகளாவர் என்பதூஉம், அவர் பாததூளி பிறர்மேற் படில் அவர் பவம் அதமாம் என்பதூஉம் தோன்ற, 'நின்றனை வலம் புரிவோர், மெம்படு சரண மலர்ப்பொடி மேனி மேற்படிற் பவம் பொடி படுமே' என்றார் என்க.

59. கானமே மருவும் விலங்கினுங் கடையேன்
கற்பவை கற்றிலேன் விடய
ஞானமே யுடையே னறிஞரைக் காணி
ணணிலே னுய்யுமா றுளதோ
வானமே யளவு நெடுங்கிரி மலய
வாதமோ துறுபவர் கட்குத்
தானமே யுதவ வளர்ந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) வானம் அளவும் - ஆகாயமளாவிய, நெடு மலய கிரி வாதம் - நீண்ட மலயமலையிற் றோன்றும் தென்றலால், மோதுறுபவர்கட்கு - தாக்கப்பெற்றவர்கட்கு, தானம் உதவவே - வசிக்குமிடம் தந்தருளுதற்கே, வளர்ந்திடும் சோணசைலனே கைலைநாயகனே-ஓங்கிய சோணசைலரே! கைலைநாயகரே!, கற்பவை கற்றிலேன்-ஓதி யுணரவேண்டியவற்றை ஓதி யுணர்ந்திலேன்;

விடயம் ஞானமே உடையேன் - (கண்டு கேட்டு உண்டு உற்று உயிர்த்து அறிதலாகிய) விஷய வுணர்ச்சியையே உடையேன்; அறிஞரை காணின் நாணிலேன் - நினதடியாரான அறிஞரைக் காணப் பெறில் நாணி நில்லேன்; (ஆகையால்), கானமே மருவும் - காட்டிலேயே தங்கும், விலங்கினும் - மிருகக் கூட்டத்தினும், கடையேன் - கடைப்பட்டவனாகிய (நாயேன்), உய்யும் நாள் உளதோ - உய்தலடையுந் தினமும் உண்டோ? (அறியேன்); (எ-று.)

(வி-ரை) கற்பவைகளைக் கற்றலாதிய வின்மையின், 'விலங்கினுங் கடையேன்' என்றார். 'விலங்கினும்' என்புழி, 'இன்' உறழ்வுபொருள். கடையேன் - கடைப்பட்டவனாகிய யான்; இது வினைப்பெயர். 'கற்பவை' ஈண்டு ஞான நூல்கள்.

"கற்க கசடறக் கற்பவை" (திருக்குறள்-௩௯௧.)

என்பதும் இக் கருத்தே. கற்பவை - கற்கவேண்டிய நூல்கள்; இது வினைப்பெயர். தென்றலால் மொத்துண்டு திகைத்து வாடி வருந்தினார்க்கு அவ் வாதனை நிவிர்த்திப்பான் தானமளித்துத் தவம் பெருக்குவித்தலின், 'தானமே யுதவ' என்றார். எதுகை ஏகாரம் நான்கனுள் மூன்றாவது அசை, ஏனையவை பிரிநிலை; தேற்றமுமாம். தானமுதவவே என ஏகாரம் பிரித்துக் கூட்டப்பட்டது. மலயவாத மோதுறுபவர் - காமிகள்; துறவிகளுமாம். கற்பவை கற்று விடயவாசனை யொழிந்தாலன்றி முத்தி கைகூடாதென்றென்பது கருத்து.

60. விழைவொடு மறஞ்செய் துய்கவென் றுரைக்கும்
விதியினைக் கவளமுண் டெனவுங்
கழைசுளி நெடுநல் யானையின் முனிந்து
கடக்குமென் பவமொழிந் திடுமோ

மழைமுகில் வந்து தவழ்ந்துவிண் படரு
மலிதரு புகையென வெழுந்து
தழலுரு வுண்மை விளக்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) மழை முகில் வந்து தவழ்ந்து - நீர் முகந்த கரு முகி லணுகிப் படிந்து, விண் படரும் மலிதரு புகை என எழுந்து - ஆகாயத்திற் செல்லும் மிக்க புகைபோல மேற்கிளம்பி, தழல் உரு - (தேவரீர் கொண்ட இம் மலையுருவம்) அக்கினி சொரூப மென்பதை, உண்மை விளக்குறும் - உண்மைப்படப் புலப்படுத்தப் பெறும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, விழைவொடும் - அன்பினோடும், அறஞ் செய்து - சிவபுண்ணியஞ் செய்து, உய்க என்று - உய்த லடைவா யென்று, உரைக்கும் விதியினை - கூறும் விதியை, கவளம் உண்க எனவும் - கவளத்தை உண்ணுவா யென்று (பாகன்) உரைக்கவும், அழை சுளி நெடு நல் யானையின் - (அது செய்யாது மிக வருந்திக்) குத்துக்கோலை முறிக்கச் செல்லும் நீண்ட நல்லிலக்கண மமைந்த யானையைப்போல, முனிந்து கடக்கும் - வெறுத்து (விடயங்களிற்) செல்லும், என் பவம் ஒழிந்திடுமோ - எனது பாவமும் நீங்குமோ? (அறியேன்); (எ - று.)

(வி - ரை) அறம் - ஈண்டுச் சிவபுண்ணியம், இதனை,

(காஞ்சிப் புராணம்-சிவபுண்ணியப் படலம்-செய்யுள் - உ)

"எவ்வறமுந் திருக்காஞ்சிக் கடிநகரிற் புரிகிற்பி
னேற்ற மெய்து
மவ்வறத்துட் சிவதன்ம மதிகமவை சிவலிங்கப்
பதிட்டை யேனைச்

செவ்வியுடைத் திருமேனி திருக்கோயிற் பணிபூசைச்
சிறப்பு மற்று
மௌவியந்தீர் மெய்யடியார் திருத்தொண்டு முதற்பலவா
மவற்றுண் மாதோ.''

என வருஞ் செய்யுளானு முணர்க. விதியாவன - இவை செயற்பாலவென வேத சிவாகமங்களில் விதிக்கப்பட்டவை. விதியினை முனிந்து கடக்கு மென இயையும். முனிதல் - வெறுத்தல்; அது அருளும் சினமுமன்றி இடை நிகர்த்தல். 'உண்க' என்பது ஈறு தொக்கது. 'கடக்கும் என் பவம்' என்பதற்கு 'விலக்காநின்ற எனது பிறவி' எனினுமாம். கழை-மூங்கில்; ஈண்டு ஆகுபெயராய்க் குத்துக்கோலை யுணர்த்திற்று. 'கழை சுளி' என்புழிக், 'கரும்பைச் சுளிக்கின்ற' எனினு மமையும். நெடுமை - ஒன்பான் முழநீட்சியுடைமை; இருகொம்மை இருகொம்பு நெற்றி தலை முதுகு என்னும் எழிட வுயர்ச்சி யெனினும் பொருந்தும். நன்மை - இலக்கண நிறைவு. மலிதரு என்புழி, மலிதா - பகுதி. துறவடைந்து தவஞ்செய்தா லன்றிப் பவந் துறத்த லின்றென்பது கருத்து.

''ஆசையோடும் அறத்தைச் செய்து பிழைக்கக் கடவீர்'' என்று சான்றோர் கூறும் விதியினைப் பாகன் ''கவளம் உண்க'' என்று சொல்லவும், அதைவெறுத்துக் குத்துக்கோலை முறிக்கின்ற நெடிய நல்லிலக்கண மமைந்த யானைபோல வெறுத்து விடயங்களில் செல்லும் எனது பாவமும் நீங்குமோ அறியேன் என்பதாம்.

61. வாத்திய முழங்கச் சிவிகையுங் கரியு
மாறியூர்ந் துலவிவாழ்ந் தவரு
மேத்திய மொழியோ டிரக்கையா னின்குற்
றேவுலே வாழ்வென வறிந்தேன்

பாத்திய மணிகள் கொண்டிழைத் திலங்கும்
பாரவா சிகைமணி மேகஞ்
சாத்திய தெனவில் வளைந்துறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) பாத்திய மணிகள்கொண்டு - ஆராய்ந்தெடுத்த மணிகளால், இழைத்து - பதிக்கப்பட்டு, இலங்கும் - பிரகாசிக்கும், பாரம் வாசிகை - பரிய திருவாசிகை யொன்றினை, மணி மேகம் சாத்தியது என-மணிகளைப் பொழியும் மேகம் கொணர்ந்து சாத்தியது போலுமென்று நினைக்குமாறு, வில் வளைந்துறும் - (இந்திர தனுசு எனப்படும்) வில் வளையப்பெற்ற, சோணசைலனே கைலை நாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, வாத்தியம் முழங்க - பஞ்ச கருவிகளும் ஒலிக்க, சிவிகையும் கரியும்-பல்லக்கிலும் யானையிலும், மாறி ஊர்ந்து - (வேண்டியவாறு) மாறி மாறி யேறிச் சென்று, உலவி வாழ்ந்தவரும் - எங்குஞ் சஞ்சரித்து வாழ்தலையடைந்து செல்வப் பெருக்குடையவரும், ஏத்திய மொழியோடு - (தேவரீரது சிற்றேவலுடையவர்பால்) துதி மொழிகளோடுநின்று, இரக்கையால் - யாசிக்கக் காணுதலின், நின் குற்றேவலே - உமது சிற்றேவலே, வாழ்வு என அறிந்தேன்-பெருவாழ்வெனத் துணிந்தேன்; (எ - று.)

(வி-ரை) வாத்தியம்-பஞ்சகருவிகள்; அவையாவன:—தோற்கருவி, தொளைக்கருவி, நரம்புக்கருவி, கஞ்சக்கருவி, மிடற்றுக்கருவி என்பன. சிவிகை - பல்லக்கு. கரி - யானை; கரத்தையுடையது என்பது காரணக்குறி. வாழ்ந்தவரும் - வாழ்ந்த செல்வப் பெருக்கையுடைய அரசர் முதலாயினோரும். உம்மை - உயர்வு சிறப்பு. ஏத்திய மொழி - துதித்த மொழி. பெருஞ் செல்வரும் தமக்கு நேர்ந்த குறைவறுக்கும்படி முனிவராதியர்பால் யாசித்

துழலுதலை நூலாலும் அனுபவத்தாலும் அறிதலின், 'நின் குற் றேவலே வாழ்வென வறிந்தேன்' என்றார்.

இனி, பெருஞ் செல்வத்தையுடைய அரசர் முதலாயினோரும் ஊழால் வறியராகித் தம்பா லேற்றவரிடத்துத் தாம் சென் றிரத்தலும், நின் குற்றேவலுடையவர் தேவரும் வணங்க வாழ்த லும் காண்டலின், 'வாழ்ந்தவரு மேத்திய மொழியோ டிரக்கையா னின்குற் றேவலே வாழ்வென வறிந்தேன்' என்றார் என்னலு மாம். இதனை,

(நாலடியார் - செல்வ நிலையாமை - ௩)

"யானை யெருத்தம் பொலியக் குடைநிழற்கீழ்ச்
சேனைத் தலைவராய்ச் சென்றோரும்—ஏனை
வினையுலப்ப வேறாகி வீழ்வர்தாங் கொண்ட
மனையாளை மாற்றார் கொள."

என்பதனாலும் அறிக.

பாத்தல் - ஈண்டுத் தேர்ந்தெடுத்தல். 'மணிகள் கொண்டு' என்புழிக், 'கொண்டு' மூன்றாம் வேற்றுமைச் சொல்லுருபு. வாசி கை - மூர்த்தங்களுக்குமேல் பிரணவாகாரமாக விளங்க அணிவ தொரு அலங்காரக் கருவி; (பிரபை). இந்திரதனுசு பல வர்ணத்த தாதலால் பல மணிகள் கொண்டிழைத்த திருவாசிகையாகக் கூறினார். மணி, நீர், பொன், பூ, மண், கல், தீ இவற்றை முறை யே பொழியும் சம்வர்த்தம், ஆவர்த்தம், புட்கலாவர்த்தம், சங்கா ரித்தம், துரோணம், காளமுகி, நீலவர்ணம் என்னும் மேகமேழ னுள் ஈண்டு மணிமேக மென்றது சம்வர்த்தத்தை. இதனை,

(பிங்கலந்தை-வான் வகை-71, 72)

"சம்வர்த்த மாவர்த்தம் புட்கலா வர்த்தம்
சங்கா ரித்தந் துரோணங் காளமுகி
நீல வருணமேழ் மேகப் பெயரே."

"மணிநீர் பொன்பூ மண்கற் றீயென்
றெழுவகை மேகம் பொழிமாரி யேழே."

என வரும் சூத்திரங்களானு முணர்க.

முரசெறி யரசரும் வரிசை பிறழ்ந்து பிறர் வாயிலிற் புக்கிரத்தலின் அவ் வாழ்வை வாழ்வெனக் கருதாது சிவபெருமானது திருவடிக் குற்றேவலே வாழ்வெனக் கருதல் வேண்டுமென்பதாம்.

62. குலத்தினிற் பிறந்து மலகினூல் கற்றுங்
குணத்தினிற் சிறந்துநல் விரத
பலத்தினிற் கவர்ந்து நின்னடி யவர்க்குப்
பரிவிலார் கதியிலா தவரே
கலத்தினிற் பொலிந்த விமயமீன் றெடுத்த
கன்னிநுண் ணிடைமிசைக் களபா
சலத்தினிற் குறுதி கொடுத்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) கலத்தினில் பொலிந்த - ஆபரணங்களால் விளங்கிய, இமையம் ஈன்றெடுத்த - இமையமலை பெற்ற, கன்னி - கன்னிகையாகிய உமையம்மையின், நுண் இடைமிசை - நுண்ணிய இடையின் மேலனவாகிய, களப அசலத்திற்கு - களபம் பூசிய மலைபோலுந் தனங்களுக்கு, உறுதி கொடுத்திடும் - உறுதியைத் தந்தருளும், சோணசைலனே கைலைநாயகனே-சோணசைலரே! கைலைநாயகரே!, குலத்தினில் - நற் குலத்தில், பிறந்தும் - உதித்தும், அலகு இல்-அளவிறந்த, நூல் கற்றும்-நன்னூல்களை ஆராய்ந்தும், குணத்தினில் சிறந்தும் - நற்குணங்களில் மேம்பட்டும், நல் விரதம் பலத்தினில்-உயர்ந்த விரத பலங்களில், கவர்ந்தும் - வேட்கைப் பெருக்கமடைந்தும், நின் அடியவர்க்கு - உமது தொண்டர்

கட்டு, பரிவு இலார் - அன்பில்லாதவர்கள், கதி இலாதவரே - கதி யடையப் பெறாதவர்களே யாவர்கள்; (எ - று.)

(வி - ரை) குலமுதலியவற்றான் மேம்பட்டாரேனும் சிவனடியார்மாட்டு அன்பிலராயின் அவர்க்குக் கதி யின்று என்பதாம். அலகு-அளவு. நல் விரதம் என்றது புண்ணியங்களைத் தரும் சிவவிரதங்களை. கவர்தல் - வேட்கைப் பெருக்கம். பிறந்தும், கற்றும், சிறந்தும், கவர்ந்தும் என்பவற்றிலுள்ள உம்மைகள் எண்ணுப் பொருளன; ஒருபுடை உயர்வு சிறப்புமாம். கதியிலாதவரே என்புழி, ஏகாரம் தேற்றம். 'பரிவிலார் கதியிலார்' என்பதனை,

(சிவஞானசித்தியார் - சுபக்கம் - 12-ம் சூத்திரம்)

"ஈசனுக் கன்பில்லா ரடியவர்க்கன் பில்லா
ரெவ்வுயிர்க்கு மன்பில்லார் தமக்குமன் பில்லார்
பேசுவதென் னறிவில்லாப் பிணங்களைநா மிணங்கிற்
பிறப்பினிலு மிறப்பினிலும் பிணங்கிடுவர் விடுநீ."

என்பதனானு மறிக.

கதி - முத்தி; ஆதார மெனினும் ஒன்றும். கலத்தினிற் பொலிந்த கன்னி என் இயையும். களப+அசலம்=களபாசலம்; தீர்க்க சந்தி. உறுதி பயத்தல்-தாம் இளகுதலடைந்து அவைக்குத் திண்மையுடைமையைத் தருதல்.

63. மூடக விருளோர் டென்னையின் றண்ணு
முலையர சாலகற் றுவலென்
சூடரு மொழியா லடைந்தனன் றமியேன்
சூள்வழு வாதுநீ யருளாய்

வீடுறுங் கவரி கீழ்விழ வுறல்கார்
மிசையனம் பன்றிதா மாறித்
தாடலை துருவ வடைதனோர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) வீடுறும்-(உச்சியிலிருந்து) நழுவிய, கவரி - கவரி மான், கீழ் விழ-கீழே விழ, கார்-மேகம், மிசை உறல்-(கீழிருந்து) உச்சியி லேறுதல், அன்னம் பன்றி - (முன்னர் முடியையும் அடியையும் தேடிய) அன்னமும் பன்றியும், மாறி - (தங்களுக் குள்) அம் முறை மாறி, தாள் தலை துருவ - திருவடியையும் திரு முடியையும் தேடிக் காண, அடைவல் நேர்-செல்லுதலை ஒத்திருக் கப் பெறும், சோணசைலனே கைலைநாயகனே-சோணசைலரே! கைலைநாயகரே!, அகம் மூடு இருளோடு-(அடியேனது) மனத்தை மூடியுள்ள ஆணவ விருளோடு, உன்னை இன்று உண்ணுமுலை அரசால் அகற்றுவல் என் - 'நின்னை இத் தினம் உண்ணாமுலை யம் மையாருடைய தலைவராகிய அண்ணாமலையாரால் நீக்குவேன்' என்னும், சூள்தரும் மொழியால் - சபதமொழி கூறிவிட்டே னாத லால், தமியேன் - துணையற்றவனான யான், அடைந்தனன் - (தேவரீரை அடைக்கலமாக) அடைந்தனன்; நீ சூள் வழுவாது - தேவரீர் அச் சபதம் தவறுதலடையாவண்ணம், அருளாய் - (அடி யேற்கு) அருளவேண்டுகின்றனன்; (எ - று.)

(வி - ரை) உன்னை இன்று உண்ணுமலை அரசால் அகற்றுவ லென்று சூள்மொழி இருளோடு பகர்ந்து தமியேன் அடைந்த னன், (ஆகையால்) நீ அருளாய் எனக் கூட்டிக்கொள்க. 'என்' என்பது வினைத்தொகை. சூள்தருமொழி-சபதமொழி. வீடுறல் - ஈண்டு வீழ்தல். துருவல் - தேடல். உண்ணுமுலை - ஆகுபெயராய் அம்மையாரது திருநாமங்களுள் ஒன்று; அபீதகுசாம்பாள் வட மொழிப் பெயர். அகவிருள் சிவபெருமானை லன்றி யகற்றப்படா

தென்பது கருத்து. 'கவரி' என்பதற்குக் 'கவரிமானின் வாலற்று வீழ்தலாகிய அம்மயிர்க் கற்றை (சாமரை)'எனப் பொருள் கோட லும் ஒன்று.

64. ஐயநுண் மருங்குன் மாதர்மேல் வைத்த
வாதர வுன்பதாம் புயத்து
மெய்யுறு நறுமென் கலவையின் விருப்பு
வெண்டிரு நீற்றிலும் வருமோ
கொய்யுறு தினைவீழ்ந் திடுபசுங் கிள்ளைக்
குழுக்கடோ ரணமென வெழுந்து
தையலர் கடியப் பறந்துறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) கொய்யுறு - அறுக்கத்தக்க, தினை - தினைக்கதிர் களில், வீழ்ந்திடு - மொய்க்கும், பசு கிள்ளை குழுக்கள் - பசிய நிறத்தையுடைய கிளிக் கூட்டங்கள், தையலர் - குறப்பெண் கள், கடிய - (கவண்கற்களாதியவற்றால்) ஓட்டலும், தோரணம் என - பசிய தோரணம் கட்டினாற்போல, எழுந்து பறந்துறும் - ஒழுங்காகப் பறந்து செல்லும், சோணசைலனே கைலைநாயக னே - சோணசைலரே! கைலைநாயகரே!, ஐயம் நுண் மருங்குல் - (உளதோ இலதோ எனச்) சந்தேகம் விளைக்கும் நுண்ணிய இடையினையுடைய, மாதர்மேல் - பெண்களிடத்து, வைத்த ஆத ரவு - வைத்துள்ள விருப்பம், உன் பத அம்புயத்தும் - தேவரீர் திருவடித் தாமரைகளிடத்தும், மெய் உறும் - சரீரத்தில் மிகவும் பூசும், நறு மெல் கலவையின்-நறிய மெல்லிய கலவைச் சாந்தில் வைத்துள்ள, விருப்பு - விருப்பம், வெள் திரு நீற்றிலும் - வெள் ளிய விபூதியின்கண்ணும், வருமோ - (அடியேனுக்கு) உண்டாகு மோ? (அறியேன்); (எ- று.)

(வி - ரை) சிவபெருமானது திருவடியினும் திருநீற்றினும் அன்பிலராயின் முத்தி யெய்தா ரென்பதாம். இக்கருத்துப் பற்றியே,

கருவூர்த் தேவர் திருவிசைப்பா
(கங்கைகொண்ட சோளேச்சரப் பதிகம் - அ)

"தத்தையங் கனையார் தங்கண்மேல் வைத்த
தயாவைநூ றாயிரங் கூறிட்
டத்திலங் கொருகூ றுன்கண்வைத் தவருக்
கமருல களிக்குநின் பெருமை"

என்றார் பெரியாரும்.

பத+அம்புயம்=பதாம்புயம் என்றது தீர்க்கசந்தி.

கிளை-ஆகுபெயர்; கதிரை யுணர்த்தினமையால். பசுங்கிள்ளை-பண்புத்தொகை. கிள்ளை-ஈறு திரிந்த பெயர்த்திரிசொல். தோரணத்திற்கும் பசுமை வருவிக்கப்பட்டது. தையலர்-குறிஞ்சிநிலப் பெண்கள்.

35. கனவினூ டமைத்த விழுதெனு வுருகக்
கற்றநின் றுள்ளமென் காங்கள்
புனலுமாய் மலருங் கொடுநினைப் பூசை
புரிந்தில வென்செய்கோ வுரையாய்
சினவுநோய் மருந்து வேறுகொண் டிருக்குஞ்
சிலம்புக ணாணவுட் கொள்வோர்
சனனநோய் மருந்தா யெழுந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) சினவும் நோய் மருந்து - வருத்தும் நோய்களுக்கு ஏற்ற மருந்துகளை, சிலம்புகள் நாண-(தமக்கு' வேறாகக் கொண்

டுள்ள) மலைகளெல்லாம் நாணமுற்றொழிய, சனனம் நோய் மருந்து ஆய் எழுந்திடும் - பிறவி நோயைப் போக்கும் மருந்தாகி யோங்கிய, சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, என் உள்ளம் - என் மனம், கனலினூடு - அழலி னிடையே, அமைத்த - இருத்திய, இழுது என - வெண்ணெய் போல, உருக கற்றது இன்று-(தேவரீர் விஷயமாக) உருகக் கற்ற தில்லை; என் கரங்கள் - என் கைகள், புனலும் - தீர்த்தமும், ஆய் மலரும் கொடு - ஆய்ந்த மலருங் கொண்டு, நினை பூசை புரிந் தில - தேவரீரைப் பூசை செய்தில; என் செய்கோ - யான் என் செய்யக்கடவேனோ, உரையாய் - தேவரீரே கட்டளை யிடுவீராக. (எ - று.)

(வி-ரை) 'கனலினூடு' என்புழி, 'ஊடு' ஏழனுருபு. இழுது- வெண்ணெய்; மெழுகுமாம். ஆய்மலர் - வினைத்தொகை. கொடு - வினையெச்சம்; கொண்டு என்பதன் விகாரம். மூன்ற னுருபாகக் கோடல் பொருந்தாது உம்மை விரிந்தமையால். மனமுதலிய அந் தக்கரணங்களும் மெய்ம்முதலிய புறக்கரணங்களும் சிவபெருமா னது குற்றேவல் செய்யவேண்டு மென்பார், 'உருகக் கற்ற தின் றுள்ளம், என் கரங்கள் புனலும் ஆய்மலரும் கொடு நினைப் பூசை புரிந்தில' என்றுங் கூறினர். செய்கு - தன்மை யொருமை வினைமுற்று; கு-விகுதி. ஓ-விறுவொடு இரக்கம். சினவல் - அத னது காரியமாகிய வருத்தலை யுணர்த்திநின்றது. இது உபசரித் தல். உட்கொள்ளல் - சிந்தித்தல். எளிதிலே நீக்கத்தகும் சாமா னிய நோய்களையும் தாமே நீக்குந் தெய்வீகம் தமக்கின்மையால் அந் நோய்களை நீக்கும் சஞ்சீவியாதி மருந்துகளைத் தாம் வேறே கொண்டிருக்க; நீங்காத பிறவி நோயையும் இச் சோணசைலம் சிந்தனை மாத்திரத்தானே நீக்குதல்பற்றி மற்றைய மலைகள் நாணுவனவாயின என்பதாம்.

**66.** ஊழுறு மணிப்பொற் கோயில்போய் வாவ
லுறக்கொடுத் தாங்குநிற் புணர்த்தாப்
பாழுறு மனம்பே ரவாக்குடி யிருப்பப்
பண்ணுமென் கண்ணுநண் ணுவையோ
வீழுறு மெயினர் கிழங்ககழ் குழியும்
வேழம்வீழ் குழிகளு நிரம்பத்
தாழுறு மருவி பொன்சொரி சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) எயினர் - குறவர்கள், வீழுறும்-விரும்பும்,கிழங்கு-கிழங்குகளை, அகழ் குழியும் - களைந்தெடுத்த குழிகளும், வேழம் வீழ் குழிகளும்-யானைகள் வீழும்படி வேடர்களால்அகழ்ந்து வைத்த குழிகளும், நிரம்ப - நிரம்புதலடையும்படி, தாழுறும் அருவி - ஒழுகாநின்ற அருவிகள், பொன் சொரி - பொன்னைச் சிந்துகின்ற, சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, ஊழ்-வரிசையாக, மணி உறும் - அரதனங்கள் பதிக்கப்பெற்ற, பொன் கோயில் - பொற்கோயிலை, வாவல் போய் உற-வவால்கள் சென்று வாசஞ் செய்யுமாறு, கொடுத்தால் ஆங்கு - அவற்றிற்கு வீடாகக் கொடுத்ததுபோல, நின் புணர்த்தா - தேவரீரை யிருத்தி வழிபடாது, பாழ் உறும் - பாழ்பட்டொழியும், மனம் - மனத்தின்கண், பேர் அவா - பேராசையை, குடி இருக்க பண்ணும் - குடியிருக்கச் செய்யும், என் கண்ணும் - கீழ்மையுடைய அடியேனிடத்தும், நண்ணுவையோ - எழுந்தருளியிருப்பீரோ? (அறியேன்); (எ - று.)

(வி - ரை) நும்மை இருத்தவேண்டிய மனத்தில் பேராசைகளைக் குடியேற்றியது, தேவரீரை இருத்தவேண்டிய மணிமயமான கோயிலில் வவாலைக் குடியேற்றியது போலும் என்பது கருத்து. ஊழ் - வரிசை. சிவிறி விசிறியென எழுத்து மாறுதல்

போன்று 'வாவல்' வவால் என மாறி வழங்கும். சிவபெருமானை நினையாத மனம் துலக்கமின் றென்பார், 'நிற்புணர்த்தாப் பாழுறு மனம்' என்றார். அவாமுதலிய குடிகொண்ட மனத்தை யுடையார்பால் சிவபெருமான் பொருந்துதல் இல்லையென்பார், 'அவாக்குடி யிருப்பப் பண்ணுமென் கண்ணு நண்ணுவையோ' என்றார். 'வீழுறும்', 'தாழுறும்' என்பன ஒருசொல் நீர்மையன. வீழ்குழியெனக் காரியத்தைக் காரணமாக வுபசரித்தார்.

**67.** பைம்மறிப் படுப்பி னுள்ளறி யாமற்
பணிநறுந் துகில்புனை மடவார்
மெய்ம்மிசைக் கருந்தோல் கண்டுவந் துழலும்
வினையினே னுய்யுநா ளுளதோ
செம்மலர்ப் பதம்பா தலங்கடந் திடவான்
றிருமுடி கடப்பினு மூவர்
தம்மியற் செப்பி னடங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) செம் மலர் பதம் - செந்தாமரை மலர்போலும் திருவடிகள், பாதலம் கடந்திட - பாதலத்தைக் கடந்து செல்ல, திருமுடி—, வான் கடப்பினும் - தேவலோகத்தைக் கடந்து செல்லினும், மூவர்தம் - ஆளுடைய பிள்ளையாராதிய மூவர்களுடைய, இயல் செப்பின் - இலக்கண மமைந்த தேவாரத் திருமுறைகளுக்குள், அடங்குறும் - அடங்கி விளங்கும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, பை மறிப் படுப்பின் - பையினை மேனோக்கி மகிழாது திருப்பி அதன் உள்ளமைதியை நோக்குதல்போல, பணி நறும் துகில் - ஆபரணங்களும் நல்ல வஸ்திரங்களும், புனை - அணிந்த, மடவார் உள் அறியாமல் - பெண்களுடைய உள்ளிடத் தமைந்த இழிவுகளை நோக்குறாமல், மெய்மிசை கரு தோல் கண்டு-(அவ் விழிவு தோற்றாதபடி அழகு

தோன்ற) உடலின்மேற் செறிந்த அழகிய தோலினைப் பார்த்து, உவந்து உழலும் வினையினேன் - மகிழ்ந்து அலையும் தீவினையினேனாகிய யான், உய்யும் நாள் உளதோ-பிழைப்புறுங் காலமும் உண்டாங்கொலோ? (அறியேன்); (எ-று.)

(வி - ரை) மறிப்பபடுப்பு - திருப்பல். மேலே அழகியதாயிருக்கின்ற பையை உட்புறந் திருப்பிப் பார்த்து, அதன் உள்ளாடையின் ஆபாசத்தை அறிதல்போலப், பெண்களுடைய அழகிய தோலைக் கண்டு மகிழ்ந்து உழலும் தீவினையினேனாகிய யான் உள்ளகத்துட் பொதிந்துகிடக்கும் இழிவுகளை நோக்குறாமல் அவர்களைக் காமுற்று வாணாளை வீணாக்கினேன் என்பதாம். இதனை,

(நாலடியார் - தூய்தன்மை - உ)

"தோற்போர்வை மேலுந் துளைபலவாய்ப் பொய்ம்மறைக்கு
மீப்போர்வை மாட்சித் துடம்பானால்—மீப்போர்வை
பொய்ம்மறையாக் காமம் புகலாது மற்றதனைப்
பைம்மறியாப் பார்க்கப் படும்."

என வரும் செய்யுளானும் உணர்க.

'மறிப்பபடுப்பின்' என்புழி, ஐந்தனுருபு ஒப்புப் பொருளது. பணி-ஆபரணம். நறுமை-நன்மை. கருமை-அழகு; பெருமையுமாம்.

(திருவாசகம் - திருவெம்பாவை - கo)

"பாதாள மேழினுங்கீழ் சொற்கழிவு பாதமலர்
போதார் புனைமுடியு மெல்லாப் பொருண்முடிவே"

என வியக்கப்பெற்ற திருமேனியாயினும், அது மூவர் தேவாரங்களால் இத்தன்மைத்தெனை மதிக்கப்படுதலின், 'மூவர் செப்பிடைடங்குறும்' என்றார். அறிவான் மதித்தல்பற்றியே தெய்வப் புலவரும்,

"சுவையொளி யூறோசை நாற்றமென் றைந்தின்
வகைதெரிவான் கட்டே யுலகு"

எனப் பணித்தமையு முணர்க.

செப்பு - சொல்; (திசைச் சொல்) இது கருவியாகு பெயர்; செய்யுளுக்காகலின். இரட்டுற மொழிதலாய்ச் சிமிழை யுணர்த்தலு மறிக. வியக்கப் பெற்ற திருமேனியாயினும் மூவர் செப்பி னுள் (சிமிழில்) அடங்கிற்று என்பது மற்றொரு பொருள் காண்க. 'பைம்மறிப்படுத்தி' என்னும் பாடத்திற்கு, 'பைம்மறிபோ லாக்கி' எனப் பொருள் கொள்க.

68. செக்குறு திலத்தின் வருந்துபு பிறக்குஞ்
செல்லலு நாடியின் பிணிப்பு
நெக்குற வறிவு கலங்குசாக் காடு
நினைதொறு முளம்பதைக் கின்றேன்
மொய்க்குறு முகில்கண் டரிகரி யென்னு
முழக்கமு மரகர வென்னுந்
தக்கவர் முழக்கு மெதிரெழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) அரி - சிங்கமானது, மொய்க்குறும் - தவழும், முகில் கண்டு - மேகத்தினைக் கண்டு, கரி என்னும் முக்கமும் - இது யானை யென்று கருதி ஒலிக்கும் ஒலியும், தக்கவர் - நற்றகுதியினையுடைய சிவனடியார்கள், அரகர என்னும் - ஹர ஹர என்று துதிக்கும், முழக்கும் - ஒலியும், எதிர் எழும் - ஒன்றற்கொன்று எதிராக எழப்பெறும், சோணசைலனே கைலைநாயகனே-சோண சைலரே! கைலைநாயகரே!, செக்கு உறு திலத்தின்-செக்கினுற்ற எள்ளினைப்போல, வருந்துபு - (யோனிவாயி னெருக்குண்டு) வருந்து, பிறக்கும் - உதிக்கும், செல்லலும் - துன்பமும், நாடியின் பிணிப்பு - நரம்புகளின் கட்டுக்கள், நெக்குற - குலைய, அறிவு கல

ங்கு-சிந்தனை மயங்குதற் கேதுவாகிய, சாக்காடும்- மரணத் துன்ப மும், நினைதொறும்-சிந்திக்குந்தோறும், உளம் பதைக்கின்றேன்- மனம் துடிப்புறுகின்றனன். (என் செய்வேன்!); (எ - று.)

(வி - ரை) கருவினி லுறையுங்கால் எய்தும் கருப்பாசயப் பை யுறுத்தல், அதிற் சலம் பூரித்தல், உதராக்கினியால் வேவு தல், பிரசூதவாயு முறித்துத் தள்ளுதல் என்னும் நால்வகைத் துன்பத்தினும் யோனித் துவாரத்தி னெருக்குண்டு உதித்தற் றுன்பம் மிகக் கொடிய தென்பார், 'செக்குறு திலத்தின் வருந் துபு பிறக்குஞ் செல்லல்' என்றார். இதனை,

(குசேலோபாக்கியானம் - முதலாவது - கஅ)

"உற்றி டுங்கருப் பாசயப் பையுறுத் துதன்முற்
சொற்றி டுந்துய ரழுந்திமுன் னிகழ்ச்சியுந் தோன்றப்
பற்றி டும்புவிப் பிறந்துநன் னெறிநின்று பவநீர்
வற்றி டச்செய்வா மென்றுள்ளிப் பிறக்கும்பின் மறக்கும்."

என வரும் செய்யுளானு முணர்க.

மரணத் துன்பம் அதனினும் கொடிய தென்பார், 'அறிவு கலங்கு சாக்காடும்' என்றார். இதனை,

(திருவாசகம் - திருச்சதகம் - கஉ)

"யானேதும் பிறப்பஞ்சே னிறப்பதனுக் கென்கடவேன்
வானேயும் பெறில்வேண்டேன் மண்ணாள்வான் மதித்துமிரேன்
தேனேயு மலர்க்கொன்றைச் சிவனேயெம் பெருமானெம்
மானேயுன் னருள்பெறுநா ளென்றென்றே வருந்துவனே."

என வரும் செய்யுளானு முணர்க.

இவற்றைச் சுருதியாலும் பிரத்தியக்ஷத்தாலும் அறிந்திருந்த வின் இவ் வேதனையை எவ்வாறு கடப்போ மென்னும் ஏக்கப்

இடையிடையே நிகழாநிற்பதென்பார், 'நினைதொறு முளம்பதைக் கின்றேன்' என்று கூறினார். ஒருபால் 'அரிகரி' என்னு முழக்க மும், ஒருபால் 'அரகர' என்னு முழக்கமும் இகலி எழுமென வும் பொருள்பட்டு முரண்டோடையாய் நிற்பதுணர்க. 'நெக் குற', 'மொய்க்குறும்' என்பவை ஒருசொன்னீர்மையன. 'மொய்க் குறும்' என்புழிக், குச் சாரியை. ஹ என்னும் எழுத்து முதலில் அகரமும் இடையில் ககரமும் ஆகு மாதலால் 'அரகர' என வந்தது. பிறப்பிறப்பின் துன்பம் பெரிதென்பது தோன்றப், 'பிறக்குஞ் செல்லலும் சாக்காடும் நினைதொறு முளம்பதைக் கின்றேன்' என்றார் எனினு மமையும். செக்கி லகப்பட்ட எள்ளைப்போல வருந் திப் பிறப்பதற்காகச் செல்லுஞ் செலவையும், நாடிகளின் கட்டு நெகிழ்ந்து அறிவு கலங்குதற்குக் காரணமான மரணத்தையும் நினைக்குந்தோறும் என்னுள்ளம் பதைபதைக்கின்றேன் என்ப தாம். உளம் பதைக்கின்றேன்-திணைவழுவமைதி. இதில் 'அரிகரி' என வைணவர் முறைப்பாட்டையும், 'அரகர' எனச் சைவர் முறைப்பாட்டையும், சமத்காரமாகக் கூறினார்.

69. மரணமும் பிறவித் துயருநீங் குறநூல்
வாய்ச்சிலம் பிக்கருள் புரிந்த
கருணியென் றுனைவந் தடைந்தன னினிநின்
கருத்தினை யின்னதென் றறியேன்
முரணிபம் பருஉக்கை தலைமிசை யெடுப்ப
முழைக்கரும் பாம்பென மணித்தேர்த்
தரணியுள் வெருவி யகன்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) முரண் இபம் - வலிமையுடைய யானைகள், பருஉ கை - தமது பருத்த துதிக்கைகளை, தலைமிசை எடுப்ப - தலையின் மீது தூக்க, முழை கரும்பாம்பு என-அளையினின்று எழும் கருங்

பாம்பு என அச்சுற்று, மணி தேர் தரணி-அழகிய தேரினையுடைய சூரியன், உள் வெருவி - மன மருண்டு, அகன்றிடும் சோண சைலனே கைலைநாயகனே - நீங்கப் பெறும் சோணசைலரே! கைலைநாயகரே!, வாய் நூல் சிலம்பிக்கு - வாயினால் நுண்ணூ லிழைக்கும் சிலந்திப் பூச்சிக்கு, மரணமும் பிறவி துயரும் - இறப் புத் துன்பமும் பிறப்புத் துன்பமும், நீங்குற - ஒழிய, அருள் புரிந்த-கிருபை செய்த, கருணி என்று வந்து-காருணிய சொரூபி யென்று கருதி வந்து, உனை அடைந்தனன் - தேவரீரை அணுகி னேன்; இனி நின் கருத்தினை - இனி உமது திருவுளக் குறிப் பினை, இன்னது என்று அறியேன் - இத்தன்மையதென உண ரேன்; (எ - று.)

(வி - ரை) சிலம்பிக்கு அருளியது சீகாளத்தியிலும் திரு வானைக்காவிலும். சிலம்பிக் கென்புழிக், கருணையை விசேடிக்கும் உயர்வு சிறப்பும்மை தொக்கது. 'தேவரும் மருளும் குன்றம்' என் பதுபோலக் குன்றத்தின் உயர்வு குறவர்மேல் ஏற்றப்பட்டது போலாம். இனி, இழிவுசிறப்பாக்கி, 'ஓ ஓ கொடியனை' என்பது போலக் கொள்ளினு மமையும். அதற்கு அவ் வும்மை தொக்கது எனக் கோடலும் ஒன்று.

கருணி - கருணை யுடையவன்; இது வடநூன் முடிபு. கருத் தாவது பிறப்பிறப்பைக் கடப்பித்தல் வேண்டுமென்பதும், அல்லது அவற்றில் உழல்வித்தல்வேண்டு மென்பது மாகிய திருவுள்ளக் கிடை. மூரண் இபம்-(மதத்தான்) மாறுபட்ட யானை எனினும் அமையும். முரண் - வலி, மாறுபாடு; தன் நிழலொடு மாறுபட்ட எனக் கோடலும் ஒன்று. பரு, பரூஉ என இன்னிசையளபெடை யாய் நின்றது. இராகு வென்னும் கரும்பாம்பு திங்களையும், கேது வென்னுஞ் செம்பாம்பு ஞாயிற்றினையும் பற்றுவதாகவும் இனம் பற்றி இதுவும் வருத்த வந்ததோ என்னும் அச்சத்தால் வெருவி

ஞன் என்க. இராகு கரும்பாம்பு என்பதனையும், கேது செம்பாம்பு என்பதனையும், "இராகுக் கோள் கரும்பாம்பு." "கேதுக்கோள் செம்பாம்பு." என வரும் சேந்தன் திவாகரத்தா னுணர்க. (தெய்வப் பெயர்த்தொகுதி.) தாணி - சூரியன். நூல்வாய்ச் சிலம்பிக் குஞ் சனனமரண துக்க மொழித்த கிருபாமூர்த்தியாகையால் தனது துக்கத்தையும் ஒழிப்பா ரென்பது கருத்து.

சிலந்திக்கு அருளிய கதை:—

பிரமதேவன் படைத்தற் றொழிலை நடத்திக்கொண்டிருக்கவும், விசுவகன்மனது கண்ணி லுதித்த மாதலவூறன் என்பான் அப் பிரமதேவனை மதியாது, தானும் படைப்புத்தொழிலை மேற்கொள்ள, பிரமதேவன் அவனை வரும்படி சிந்தித்து, அக்கணமே வந்து நின்ற அவனை நோக்கிக் கடுங்கோபங் கொண்டு, "நீ சிறிய நூலினை யுண்டுபண்ணும் சிலந்தி யாகுக" எனச் சபித்தனர். பின்னர் அவன் வணங்கிப் பெரிதும் பிரார்த்திக்க, உளமகிழ்ந்து, "பிள்ளாய்! நீ அஞ்சேல்; விமலராகிய சிவபெருமான் வீற்றிருக்கும் கயாரணியத்தி லுள்ள வில்வவனத்தை யடைந்து சிலந்தியாகித் தென்கைலாயப் பெருமானைப் பூசித்து அருங்கதி யடைவாயாக" என்று அநுக்கிரகிக்க; அம் மாதலவூறன் அங்ஙனமே சிலந்தியாகி அப்பெருமானுக்கு ஆலயமமைத்து வழிபட்டு, வினையையொழித்து வீட்டை யடைந்தனன் என்பதாம். இதன் விரிவைச் சீகாளத்திப் புராணத்திற் காண்க. இன்னும், திருவானைக்காப் புராணத்தில், கோச்செங்கணார் வழிபடு படலத்தானும் உணர்க.

70. அங்கையின் வைத்த கூர்ங்கனன் மழுவர்
லருவினைக் காடற வெறிந்து
மங்கலில் பத்தி வித்திட வடியேன்
மனத்தினைத் திருத்துநா ளுளதே

பொங்குறு செக்கர் கருவிசும் புறவேள்
புரத்தெரி கதுவிட நோக்கித்
தங்குத லொப்ப நின்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) வேள் புரத்து - மன்மதனது சரீரத்தில், எரி கதுவிட-அக்கினி பற்றும்படி, நோக்கி தங்குதல் ஒப்ப - நோக்கியமர்தல்போல, பொங்குறு செக்கர் - அதிகரித்த செவ்வானம், கரு விசும்பு உற-கரிய ஆகாயத்திற் பொருந்த, நின்றிடும்-(அதற்கெதிரில்) அமர்ந்தருளும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, மங்கலில் - குன்றுத லில்லாத, பத்தி வித்து இட-அன்பென்னும் வித்தினை விதைத்தற்பொருட்டு, அங்கையின் வைத்த-தேவரீர் அகங்கையிற் கொண்ட, கூர் கனல் மழுவால் - கூரிய அனல் வடிவான பரசாயுதத்தால், அரு வினை காடு - கொடிய வினைக்காடுகளை, அற எறிந்து - பற்றற வெட்டியெறிந்து, அடியேன் மனத்தினை - அடிமைப்பட்ட எனது மனப் புலத்தினை, திருத்தும் நாள் உளதோ - திருத்தமாக்கும் நாளும் உண்டோ? (அறியேன்); (எ - று.)

(வி - ரை) பத்தியை வித்தென்றதற் கிணங்க மனத்தைப் புல மென்றமையின் ஏகதேச வுருவகம். நல்வினை சுவர்க்காதி யின்பங்களையும், தீவினை நரகாதி துன்பங்களையும் பயப்பனவாய் ஞானத்தைத் தடுத்துப் பந்த முறுத்தலில் பொன் விலங்கும் இருப்பு விலங்கும் போல்வனவாகலின், இருவினையும் பிறப்பிற்கு ஏதுவாதல்பற்றிப் பொதுப்பட, 'அருவினை' என்றார்.

அருமை - ஈண்டுக் கொடுமைமேற்று. கரியவாகாயம் கரு நிறம் பெற்ற மன்மதனுக்கும், செக்கர் அவனுடலிற்பற்றிய அக்கினிக்கும், சோணசைலம் அவனெதிரில் நின்றருளிய சிவபெருமா

னுக்கும் ஒப்பாக்கியவாறு. விசும்பு - மேகமண்டலமுமாம். சிவ பெருமானது கையின்கண்ணுள்ள மழுவாயுதத்தானன்றி இரு வினைக் காடறுமெதன்பதும், அச் சிவபெருமான் திருத்தினாலன்றி மனம் திருந்தா தென்பதும் கருத்து.

வேள் புரத்து எரி கதுவிட நோக்கிய சரிதத்தை ஏழா வது செய்யுளுரை யிறுதியிற் காண்க.

71\. சுருக்குமைம் புலனும் விரிக்குமூ தறிவுந்
துன்னுநல் லினமுநீத் தகன்றே
யிருக்கும்வெங் கயவ ரினமுமென் றருளி
யென்னைநின் னடிமைசெய் தருள்வாய்
முருக்குமங் கதமா மணியுமிழ்ந் தகன்ற
முழைதழற் றெனவுளம் வெருவித்
தருக்குமொண் புலிசென் றுறமருள் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) அங்கதம்-பாம்புகள், முருக்கும் மா மணி-(இருளை) கெடுக்கும் ஒளி வாய்ந்த பெரிய மணிகளை, உமிழ்ந்து - கக்கி, அகன்ற முழை-சென்ற குகைகளை, தழற்று என - (அம் மணியின் ஒளி கண்டு இது) தழலுடையதென, உளம் வெருவி-மனம் பயந்து, தருக்கும் ஒண் புலி - செருக்கிய அழகிய புலிகள், சென்று உற - (அம் மலை முழையில்) சென்றிருத்தற்கு, மருள் - மருண்டு ஓடும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, சுருக்கும் ஐம்புலனும்-(விடயங்களிற் செல்லாது) அடக்கும் ஐம்புலனும், விரிக்கும் - (நற்றுறைகளில்) விரித்துச் செலுத்தக்கூடிய, மூது அறிவும் - உயரிய உணர்வும், துன்னும் நல் இனமும் - வாழ்தற்குரிய அன்பர் கூட்டமும், நீத்து அகன்று இருக்கும்-அகன்று நீக்கத்தக்க, வெம் கயவர் இனமும்-வெவ்விய

கீழ்மக்கட் கூட்டமும், என்று அருளி - எக்காலத்தி லெனக் கருளி, என்னை - தமியேனை, நின் அடிமைசெய்து அருள்வாய் - உமது திருவடிகளுக்கு அடிமை யாக்கிக்கொண் டருளுவீர்? (கட் டளையிடவேண்டும்); (எ - று.)

(வி - ரை) ஐம்புலச் சுருக்கமும் மூதறிவு விரிவும் நல்வினைத் துன்னலும் கயவரினம் நீத்தகன் றிருத்தலும் வேண்டுமென்பார், ஒவ்வொன்றையும் முன் பின்னுக்கிச் சாதுரிய நயந்தோன்ற முரண்டொடையி னுரைத்தனர். 'நீக்குறுமயல்' 'நீங்கிய நேயத்த வர்' என இந் நூலினும், * "இலாதவெண்கோவணத்தான்" என இங்ஙனமே பிறண்டும் இவ் வாசிரியர் உரைத்தருள்வ துணர்க; இவை வடநூன் முடிபு.

முருக்கும் அங்கதம்-கொல்லும் பாம்பு எனலுமாம். தழற்று-ஒன்றன் படர்க்கைக் குறிப்பு வினைமுற்று; து-விகுதி. முதுமை+அறிவு=மூதறிவு என்றாயது. உளம் வெருவி மருள் என இயை யும். ஒண்மை-விளக்கமுமாம். அடங்கிய புலனும் துலங்கிய அறி வும் நல்வினைப் பயிற்சியும் உள்ள அன்பர்களே கடவு ளடிமையர் ஆவர் என்பதாம்.

அடக்கிய வைம்புலன்களையும், விரிக்கின்ற பேறிவையும், நெருங்கிய நல்வினைச் சார்பையும், கொடிய கீழ்மக்களை நீத்தகன் றிருத்தலையும் எக்காலத்துக் கிருபைசெய்து என்னை நின் னடிமை யாகச் செய்தருள்வாய் என்பதாம்.

72. அந்தரி குமரி யஞ்சலி கௌரி
யம்பிகை மனோன்மணி மதங்கி
சுந்தரி யுமையுண் ணுமுலை யெனநின்
றுணைவியை வாழ்த்துமா றருளாய்

* பிக்ஷாடன நவமணிமாலை. உ

வந்தரி சுருதி மருங்கினிற் பாட
　　வயங்குதும் புருவுநா ரதனுந்
தந்திரி யிசையாழ் பாடுறுஞ் சோண
　　சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) அரி மருங்கினில் வந்து-திருமால் அருகணைந்து, சுருதி பாட-வேத கீதம் பாட (அக் கீதத்திற் கேற்ப), வயங்கு தும் புருவும் நாரதனும் - கீர்த்தி வாய்ந்த தும்புருவும் நாரதரும், தந்திரி யாழ்-நரம்புகளோடு கூடிய யாழினைக் கொண்டு, இசை பாடுறும் - இசைபாடிப் பரவும், சோணசைலனே கைலைநாயகனே - சோண சைலரே! கைலைநாயகரே!, அந்தரி - மேலான முத்தி நாட்டினை யுடையவளே!, குமரி-யௌவன முடையவளே!, அஞ்சலி-(சரணம் புக்க அடியவர்கட்கு)அபயந்தருபவளே!, கௌரி-சொர்ண மேனிய ளே!, அம்பிகை - உலகுக்குத் தாயே!, மனோன்மனி - மனதீத மானவளே!, மதங்கி - இசைபாடி யமரும் திருக்கோலத்தவளே!, சுந்தரி-நல்லழகினையுடையவளே!, உமை - காப்பவளே!, உண்ணு முலை-அபீதகுசத்தவளே!, என நின் துணைவியை-என்று நினது துணைவியாராகிய அம்பிகையை, வாழ்த்தும் ஆறு-வாழ்த்தும்படி, அருளாய் - அருள்வீராக; (எ - று.)

(வி - ரை) கௌரி - வெண்ணிறத்தளுமாம். கௌரம் - பொன்மை, வெண்மை. திருவருட் சொரூபியாகிய தேவியை வழிபடாது தேவரீரையே வழிபட்டுப் பேரின்ப மெய்திய பிருங்கி முனிவரைப் போலும் ஆற்ற லெய்தப்பெறாதார் அத் திருவருட் சத்தியானே தேவரீரை அடையப்பெறுதல் இயல்பாகலின் ஏனைப் பேறுகளோடு அச் சத்தி வழிபாடும் எளியேற்கு வேண்டு மென்பார், 'துணைவியை வாழ்த்துமா றருளாய்' என்றார்.

'அரி மருங்கினில் வந்து சுருதிபாட' என்பதற்கு வண்டுகள் அருகணைந்து சுதிபாட எனப் பொருள் கோடலும் ஒன்று. அப்

பொருட்குச் சுருதி சுதி (இசை) எனக் கொள்க. முந்திய பொருட்குச் சுருதி ஆகுபெயராய் வேதகீதத்தை யுணர்த்திற்று. அரி - திருமால்; வண்டு. சுருதி - வேத கீதம் + சுதி (இசை). நாரதர் முனிசிரேஷ்டரேனும் மிக முயன்று நெடுநாட் பயின்று தும்புருவோடு இசையி லொத்தாராகலின், அச் சிறப்புத் தோன்றத் தும்புருவை முற் கூறினார் என்க.

73. நீக்குறு மயலு நிலைத்தபே ரறிவு
நின்றிரு வடிமலர்க் கன்பு
காக்குறு மனமு முடையமெய்த் தொண்டர்
கணத்தினு ளெனைவிடுத் தருளாய்
தேக்குறு மிருவிற் கன்னல்காட் டிவபோற்
றென்றல்வந் தசைதொறு மெல்லத்
தாக்குறு காந்த டுடுப்பலர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) கன்னல் காட்டுவபோல் - (பூசாகால) நாழிகையைத் தெரிவித்தல்போல, தென்றல் வந்து அசைதொறும் - தென்றற்காற்று வந்து வீசுந்தோறும், தேக்கு உறும் இருலில் - (தேன்) நிரம்புதலுள்ள தேனடையில், மெல்ல தாக்குறு காந்தள் துடுப்பு - மெல்ல மோதுகின்ற காந்த ளரும்பானது, அலர் - இதழ்கள் விரியப்பெறும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, நீக்குறும் மயலும் - நீக்கும் மயலினையும், நிலைத்த பேர் அறிவும் - திடம் பெற்ற மிக்க வுணர்வினையும், நின் திருவடி மலர்க்கு - நுமது திருவடித் தாமரைகளில், அன்பு காக்குறும் மனமும் - அன்பு அமையச் செய்யும் மனத்தையும், உடைய மெய் தொண்டர் கணத்தினுள் - உடையவராகிய உண்மையடியவர் கூட்டத்திலே, எனை விடுத்து அருளாய் - தாழ்ந்த அடியேனையும் சேர்த்தருள்வீராக; (எ - று.)

(வி - ரை) சிவபெருமானை வழிபட்டு அடையும் பேற்றினை அவர் அடியவரை வழிபட்டும் அடையலா மென்பது திருநீலகண்ட யாழ்ப்பாண நாயனார், அப்பூதியடிகளுயனார், பெருமிழலைக் குறும்ப நாயனா ராதியோரால் வெளிப்படுதலின், 'தொண்டர் கணத்தினு ளெனைவிடுத் தருளாய்' என்றார். தொண்டர்தர் தொண்ட ரெய்தும் பேற்றினை,

(திருவிடைமருதூர் மும்மணிக் கோவை - உக)

"விளையார் பசியின் வருந்தார் பிணியின் மதனனம்புக்
கிளையார் தனங்கண் டிரங்கிநில் லாரிப் பிறப்பினில்வந்
தளையார் நாகினுக் கென்கட வார்பொன் னலர்ந்தகொன்றைத்
தளையா னிடைமரு தன்னடி யாரடி சார்ந்தவரே."

என வரும் செய்யுளானும் உணர்க.

நீக்குறுமயல் - மயலி னீக்கம். திருவடிமலர்க்கு - வேற்றுமை மயக்கம், தேக்கு - நிறைவு. 'தேக்குறு மிறால்' என்பதற்குத் தேக்கமரத்தி லுற்ற இறால் எனவும், தேன் செறிந்த குறிய இறால் எனவும் பிரித்தலும் ஒன்று.

தேனிறாலைச் சேகண்டிகை யாகவும், அத் தேனிறலிற் றாக்குறும் காந்தட்டுடுப்பைப் பூசாகால நாழிகையைத் தெரிவிக்க அச் சேகண்டிகையை யடிக்கும் கருவியாகவும், தேனிறலில் மொய்த்தெழும் வண்டின் ஒலியைச் சேகண்டிகையின் ஒலியாகவும் உவமித்துக் கூறினார். கன்னல் காட்டுவபோல் மெல்லத் தாக்குறு காந்த டுடுப்பு என இயையும். உவமை காந்தளரும்பு தாக்குத லளவிற்கே; மலர் தற்கின்று.

இனி, தேன் நிரம்புதலுள்ள கூடாகிய வட்டத்தில் நாழிகையைக் காட்டுங் குறிப்பினைப்போலத் தென்றற்காற்று வந்து வீசுந்

தோறும் மெல்ல மோதும் காந்தள் மொட்டானது துடுப்பென இதழ்கள் விரியப்பெறும் சோணசைலரே எனக் கூறுதலும் ஒன்று. இதுபொழுது வழங்கும் கடிகாரம் இந் நூலாசிரியர் காலத்தே புதிதாகப் போந்து இந் நாட்டிலே உலவத் தொடங்கிற்றாகலின், இது நோக்கி யுரைத்ததொரு கற்பனையெனக் கொண்டு, வெள்ளிய தேன்கூடு கடிகாரக் கருவிக்கும், அதில் மெல்லத் தாக்கும் காந்தள் மொட்டு மெல்லப் புடைபெயரும் நிலைமுள்ளுக்கும், அதில் முறுக்குடைந்து துடுப்பென விரியுந் தனியிதழ் விரைந்துலவு முள்ளுக்கும், தாக்குதலோசை அதனொலிக்கும் ஒருபுடை உவமித்த தென்னலு மொன்று. காந்தள் அரும்பு துடுப்புப் போல அரும்புதல் இயல்பென்பார், 'காந்த டுடுப்பலர்' என்றார் இதனை,

(மலைபடுகடாம் - ௫௨௯)

"காந்தட் டுடுப்பிற் கமழ்மட லோச்சி
வண்கோட் பலவின் சுளைவிளை தீம்பழ
முண்டுபடு மிச்சிற் காழ்பயன் கொண்மார்
கன்று கடாஅவுறுக்கு மகாஅ ரோதை."

என வருஞ் செய்யுளா னுணர்க.

74. பவமிலை மினியா மென்றிறு மாந்து
பயமற விருந்திடப் பத்தி
நவமிலை மடியே மென்செய்வா னிருந்து
நாளினை வறிதொழிக் கின்றே
மவமிலை மிமையா விழியினாற் காண்கை
யால்வலங் கொளவடி நிலந்தோய்
தவமிலை மெனவான் சுரர்தொழுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) இமையா விழியினால் - இமையா நாட்டத்தால், காண்கையால் - தரிசிக்கப் பெறுதலின், அவம் இலேம் - வீண் செய்கை யில்லேம், வலம் கொள - (ஆனால்) பிரதக்ஷிணஞ் செய்ய மாத்திரம், அடி நிலம் தோய்-பாதங்கள் பூமியிற் றோயப் பெறும், தவம் இலேன் என - தவமொன்றுஞ் செய்திலே மென்று, வான் சுரர் தொழும்-சுவர்க்கத்துறையும் தேவர்கள் (வருந்தித்) தொழப் பெறும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, யாம் இனி பவம் இலேம் என்று - யாம் இனிப் பிறத்தல் இன்மையுடையோ மென்று, இறுமாந்து - இறுமாப் படைந்து, பயம் அற இருந்திட - அச்சமற்றிருத்தற்கு, பத்தி நவம் இலேம் - அன்பாகிய புதுமை இல்லாதவராயினேம், என் செய்வான் - யாது பலன் ஈட்டுவதற்கோ, இருந்து - (இந் நில வுலகில்) இருந்து, நாளினை - நாட்களை, வறிது ஒழிக்கின்றேம் - வாளா போக்கின்றனம் (அந்தோ!); (எ - று.)

(வி - ரை) முளைத்தற்கரிய எனது பாறை மனத்தே பத்தி முளைக்கப் பெறுவது புதுமை; அப் புதுமை பெறின் பிறப்பைக் கடக்கலா மென்பார், 'பவமிலே மென்றிருந்திடப் பத்திநவ மிலேம்' என்றார். அது பெறாக்கால் காலக் கழிவே யன்றி ஈட்டும் பலன் சிறிதுமின் றென்பார், 'என்செய்வா னிருந்து நாளினை வறிதொழிக்கின்றேம்' என்றார். 'நாள்' என்பதற்கு 'வாழ் நாள்' எனினு மமையும்.

கண்களாற் காணப் பெறாத கடவுளைக் கண்களார இமையா விழியாற் காணப் பெறுதலும், கால் நிலம் தோய வலம் வருதலு மே தவமும், அங்ஙனம் பெறாமையே அவமு மாகலின், காணப் பெறுதலிற் றவமும் வலம் வருதலில் அவமுமுடைய மென்பார் 'அவமிலேம் தவமிலேம்' என்றார்.

யாம் இனிப் பிறவிடையே மல்லேம் என்று மிக மகிழ்ந்து அச்சமின்றி யிருந்திடப் புதுமையான பத்திசெய்தோ மில்லேம் ஆதலான் அடியேம் யாது செய்யும் பொருட்டு இந் நிலவுலகின்கணிருந்து வாணாளினை வீணாளாகக் கழிக்கின்றோம் என்பதாம். இமையா விழி - குவியாத விழி; இமைதல் - குவிதல்.

75. கண்களிற் பரிந்து கண்டுவப் பனவே
கைகளிற் றொழுபவே செவிகள்
பண்களிற் புகழும் புகழ்ச்சிகேட் பனவே
பதநினை வலம்புரி வனவே
யெண்குபுற் றிடப்ப வெழுமணி கரவா
விருந்துசென் றிருள்கவர் வனபோற்
றண்கதிர்க் கற்றை கான்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) எண்கு புற்று இடப்ப - கரடிகள் புற்றினைத் தோண்டுதலால், எழும் மணி - (அப் புற்றிலிருந்து) வெளிப்படும் அரவின் மணிகள், கரவா இருந்து-ஒளித்திருந்து, சென்று-வெளி வந்து, இருள் கவர்வனபோல் - இருளைக் கவர்கின்றனபோல, தண் கதிர் கற்றை - குளிர்ந்த கிரணக் கூட்டங்களை, கான்றிடும் - வீசப் பெறும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, கண்கள் - எனது கண்கள், பரிந்து-விரும்பி, நின் கண்டு - நும்மைத் தரிசித்து, உவப்பனவே-மகிழத் தக்கவைகளே; கைகள்—, நின் தொழுபவே - உம்மை வணங்கத் தக்கவைகளே; செவிகள் - காதுகள், பண்களில் புகழும் - (அடியவர்களால்) பண்களோடு புகழ்ந்து துதிக்கப்படும், புகழ்ச்சி கேட்பனவே - கீர்த்திகளைக் கேட்கத் தக்கவைகளே; பதம்-கால்கள், நினை வலம் புரிவனவே - உம்மை வலம் புரியத் தக்கவைகளே (ஆகையால் ஆண்டருள்வீராக); (எ - று.)

(வி - ரை) உவப்பனவே முதலியவற்றிலுள்ள ஏகாரம் நான்கும் பிரிநிலை; வேறொன்றும் செய்யத் தக்கனவல்ல எனப் பொருள் படுதலின். இருள் கவர்வனபோற் கதிர்க்கற்றை காலுத லாவது, இருட் செறிவு போலும் காடியினிறம் தோன்றுதபடி கதிர் பரப்பல். இவ்வுட லிரிதிற் பெற்ற உறுப்பின் றொழில் எல் லாம் நின்றொழி லாதலான், அருளல்வேண்டு மென்பதாம்.

76. நிணந்திகழ் வடிவேற் காளையே யென்று
 நேரிழை யவர்விழைந் திடுவோர்
குணந்திரி தளிரின் மடியவே கண்டுங்
 கொடியனேன் வாழ்வுவந் திருந்தேன்
மணந்திமிர் மகளிர் சிலம்பொடு மைந்தர்
 வார்கழ றுவக்கிட வலம்போய்த்
தணந்திடு மமயத் தறிந்துநாண் சோண
 சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) மணம் திமிர்-களப மணிந்த, மகளிர் சிலம்பொடு- மங்கையர்களின் காற்சிலம்பினொடு, மைந்தர் வார் கழல் - ஆடவர் கள் (காலிற் கட்டிய) பெரிய வீரக்கழல், துவக்கிட - சிக்கிக் கொள்ள (அதனை அறியாதவராகி), வலம் போய் - பிரதக்ஷிண மாகச் சென்று, தணந்திடும் அமயத்து - (தமதிடஞ் செல்லப்) பிரியுஞ் சமயத்து, அறிந்து நாண் - உணர்ந்து நாணி நிற்கப் பெறும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, நிணம் திகழ் - ஊன் செறிந்த, வடிவேல்-கூரிய வேலேந்திய, காளையே என்று - இளம் பருவமுடைய முருகக் கடவுளே இவரொன்று, நேர் இழையவர் - தக்க பூண்களை யணிந்த மங்கையர்களால், விழைந்திடுவோர் - விரும்பப்படுவோராகிய ஆட வர்கள், குணம் திரி தளிரின்-தன்மை மாறிய தளிர்போல், மடிய கண்டும் - (யௌவனுறுதிகள் மாற முதிர்ந்தவராய்) இறந்தொழிவ

தைப் பிரத்தியக்ஷமாக நோக்கியும், கொடியனேன் - கொடியே ஞகிய யான், வாழ்வு - இத்தகைய வாழ்வை, உவந்து இருந்தேன்- (நல் வாழ்வெனக்) களித்திருந்தனன் (இஃதென்ன அறியாமை); (எ - று.)

(வி-ரை) தளிரெனப் பெயர் பெற்ற ஒன்றே இலை, பழுப்பு, சருகெனப் பெயர் மாறி மடிதல்போல, முன்னர்ப் பால ரெனப் பெயர் பெற்ற அழகினரும் குமரர், தருணர், விருத்த ரெனப் பெயர் பெற்று மடிவரென்று இளமையாதிகளின் நிலையாமையை யும், தணந்திடு மமையத்து அறிந்து என்றமையின், சிலம்புங் கழலும் துவக்குண்டது முன்ன ரறியாமை சனநெருக்கத்தோடு வழிபடுவோர் மிகுதியையும் தெரிவித்தபடி. 'காளையே' 'மடியவே' என்பவற்றிலுள்ள ஏகார மிரண்டும் முறையே தேற்றமும் அசையு மாம். விழைந்திடுவோர் என்பது,

(தொல்காப்பியம் - சொல் - உசக)

"செயப்படு பொருளைச் செய்தது போலத்
தொழிற்படக் கிளத்தலும் வழக்கியன் மரபே."

என்ற சூத்திர விதியால் படு விகுதியும், வாழ்வென்புழி, இழித்தற் பொருள் பயக்கும் இகரச் சுட்டும் தொக்கன. 'கண்டும்' என்புழி, உம்மை - இழிவு சிறப்பு; மடிதலின் இழிவால். கழல் அரவின் படம்போ லமைந்து கொக்கிபோன் றிருத்தலின் துவக்குங் கருவி யாயிற்று. வார் கழல்-கச்சா லிறுக்கப்படும் கழலுமாம். இளமைப் பருவ நிலையன்றெனக் கருதி விரைவில் துறக்கவேண்டு மென் பது கருத்து. 'திணர்ந்திகழாநின்ற வடித்த வேலையுடைய காளைப் பருவத்தை யுடையவனே' என்று மங்கையரா லிச்சிக்கப்படுவோர் குணம் வேறுபட்ட தளிரைப்போலக் கெட்டுப்போகவுங் கண்டு கொடியேனுகிய யான் இச் சிற்றின்ப வாழ்வை (நிலையுள்ளதென) இதுகாறும் விரும்பி யிருந்தேன் இஃதென் என்பதாம்.

77. மாந்தளிர் கவற்று மணிச்சிலம் படிகள்
வடுவகிர் பொருவும்வா ணெடுங்கண்
காந்தளி னிமைக்கு மங்கையென் றவலக்
கன்னியர்ப் புகழ்வினை யறுமோ
பூந்திரை சுருட்டுங் கடல்கடை குநரொண்
பொறியர வின்றிமா தவர்க்குச்
சாந்துய ரகற்று மருந்தருள் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) பூ திரை சுருட்டும் கடல் - பொலிவு பெற்ற அலைகளை மடக்கி வீசுஞ் சமுத்திரத்தில், கடைகுநர் - அதனில் மத்திட்டுக் கடைகுநகரும், ஒள் பொறி அரவு இன்றி-அழகமைந்த பொறிகளையுடைய பாம்பும் (ஆகிய இவைகள்) இல்லாமலே, மாதவர்க்கு - தம்மை யடைந்த தவத்தினருக்கு, சாம் துயர் - மரணத்துன்பத்தை, அகற்றும் மருந்து - ஒழிக்கும் மருந்தினை, அருள் சோணசைலனே கைலைநாயகனே - தந்தருளுகின்ற சோணசைலரே! கைலைநாயகரே!, மணி சிலம்பு அடிகள் - மணிகள் பதித்த சிலம்பணிந்த கால்கள், மாந்தளிர் கவற்றும் என்று - தேமாந்தளிரினையும் கவலச் செய்யு மெனவும், வாள் நெடு கண் - ஒளி பெற்ற நீண்ட கண்கள், வடு வகிர் பொருவும் என்று - மாம் பிஞ்சின் பிளப்பினை நிகர்க்கு மெனவும், அம் கை காந்தளின் இமைக்கும் என்று - அகங்கை காந்தள் மலர்களைப் போலப் பிரகாசிக்கு மெனவும், அவலம் கன்னியர் புகழ் வினை அறுமோ - வீணே மங்கையரை வியந்து திரியும் தீவினை தமியேனை விட்டொழியுமோ? (அறியேன்); (எ - று.)

(வி - ரை) மேற் கூறியது போலக் குணந் திரிந்து வேறுபடும் அங்கங்களைப்பற்றிக் கன்னியர்களைப் புகழ்வினையறுமோ வெனவே, என்றும் ஓரியல்பினதாகிய நித்தியாநந்த சுகத்தைப்

பாவிக்கும் தேவரீரைப் புகழும் நல்வினை யுறுமோ என வேண்டி னமை தானே போதரும். அகங்கை-அங்கை யென்றாயது; "அக முனர்ச் செவிகை வரினிடை யனகெடும்" என்றமையான். கன்னி யர்ப் புகழ்வினை - இயல்பின் விகாரம். இரண்டாம் வேற்றுமைத் தொகையாதலான். உபகரணங்களால் தேவர்க்கு அமுதீந்த மந்தரம் போலாது மாதவர்க்குத் தானே தனித்து அதனைத் தரும் இச் சோணசைலம் அதனின் மேம்பாடுடைய தெனக் கூறியவாறு. மிர்தத்தை யொழிப்பது யாதேனும் அது அமிர்தமா மென்பார், 'சாந்துய ரகற்று மருந்து' என்றார். 'என்று' என்பது மேலிடங் களினுங் கூட்டப்பட்டது. பொறி - பாம்பின் படப்பொறி; இத னைத் துத்தி என்பர்.

78. சிந்தனை கலங்கி யிணைவிழி யிருண்டு
செவிகளுஞ் செவிடுபட் டைம்மே
லுந்திட வுயிர்போம் பொழுதுநின் வடிவ
முளங்கொளும் பரிசெனக் கருளாய்
மந்தர சைலந் தருவிடங் களத்து
வைத்திடத் தினிலிம சைலந்
தந்திடு மமுதை வைத்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) மந்தரம் சைலம் - மந்தரமலை, தரு விடம் - தந்த விடத்தை, களத்து வைத்து - கண்டத்தி லமைத்து, இமம் சை லம் - இமாசல வரசன், தந்திடும்-பெற்ற, அமுதை - அம்பிகையா ரென்னும் அமுதை, இடத்தினில் வைத்திடும் - வாமபாகத்தினி லமைத்தருளும், சோணசைலனே கைலைநாயகனே - சோண சைலரே! கைலைநாயகரே!, சிந்தனை கலங்கி - சித்தம் பேதித்து, இணை விழி இருண்டு - இரண்டு விழிகளும் பஞ்சடைந்து, செவிக ளும் செவிடுபட்டு - காதுக ளிரண்டும் செவிடாகி, ஐமேல்

உந்திட-கோழை மேலேறி வாயாற் பாய, உயிர் போம்பொழுது-உயிர் இவ் வுடலினின்றும் நீங்குங்காலத்தில், நின் வடிவம்-தேவரீருடைய திருவுருவத்தை, உளம் கொளும் பரிசு எனக்கு அருளாய்-மனத்திற் றியானிக்குந் தன்மையை என்றனக்கு அருள்வீராக; (எ - று.)

(வி-ரை) உடலினை உயிர் துறக்குங் காலத்து இந்திரியாதிகளின் றொழில்களெல்லாம் மங்கு மென்பதை,

(ஆளுடைய பிள்ளையார் தேவாரம்-திருவையாறு-ச)

"புலனைந்தும் பொறிகலங்கி நெறிமயங்கி
யறிவழிந்திட் டைம்மே லுந்தி
யலமந்த போதாக வஞ்சேலென் றருள்செய்வான்" எனவும்,

(ஆளுடையவரசு தேவாரம்-திருப்புகலூர்-க)

"ஒண்ணுளே யொன்பது வாசல் வைத்தா
யொக்க வடைக்கும்போ துணர மாட்டேன்"

எனவும் வருவனவற்றானும், சிவகிருபையால் இக் காலத்திற் பயின்றுவந்த பழக்கத்தாலல்லது இறுதிக் காலத்திலே சிவத்தியான வுணர்ச்சி நிகழாதாகலின் அப் பயிற்சி நிலைபெறுமாறு ஆன்றோ ரெல்லாம் பலகாலும் பெருமானைப் பிரார்த்தித்து வேண்டிக்கோட லியல்பென்பதனை,

(ஆளுடைய வரசு தேவாரம்-பொது-அ)

"அங்கத்தை மண்ணுக் காக்கி யார்வத்தை யுனக்கே தந்து
பங்கத்தைப் போக மாற்றிப் பாவித்தேன் பரமா நின்னைச்
சங்கொத்த மேனிச் செல்வா சாதனா ளென்னை
யெங்குற்றா யென்ற போதா விங்குற்றே னென்கண் டாயே."

என்பதனானும் அறிக.

இருமலைகள் தந்த விடத்தையும் அமுதத்தையும் தம்பாற் கொண்டுள்ள ஒருமலை யுருவரெனச் சாதுரியநயந் தோன்றநிக் கிரகாநுக்கிரக முடைமை குறிப்பித்தபடி. மரணகாலத்தில் ஒரு மயக்கமுமின்றி நின்னைத் தியானிக்க வேண்டுமென்பது கருத்து.

79. நயங்கொளு மலரா னின்றிரு வடியை
நாடொறு முயிருணுங் கூற்றம்
பயங்கொள வகலா தருச்சனை புரிந்து
பரகதி யடையுநா ளுளதோ
வயங்கொளும் விடயப் பெரும்பகை கடந்து
வானநா டாண்டிட மதிப்போர்
சயங்கொள வடைதற் கரணமாஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) வயம் கொளும் - (இதுகாறும் தம்மை) வெற்றி கொண்ட, விடயம் பெரு பகை-விடயங்களாகிய பெரும் பகை களை, கடந்து - வென்று, வானம் நாடு ஆண்ட - முத்தி நாட்டினை ஆள, மதிப்போர் - விரும்பும் ஞானிகள், சயம் கொள - (அப் பகையினை) வெல்வான், அடைதற்கு - அடைதற்குரிய, அரணம் ஆம்-காவலிடமாகிய, சோணசைலனே கைலைநாயகனே - சோண சைலரே! கைலைநாயகரே!, உயிர் உணும் கூற்றம் - (காலவரை யறை நோக்கி) உயிர் கவரும் இயமன், பயம் கொள - (என்னைக் கவர்தற்கு) அஞ்சும்படி, நாடொறும் - தினமும், அகலாது-விட்டு நீங்காமல், நின் திருவடியை-நினது திருவடிகளை, நயம் கொளும் மலரால் - நல்ல புஷ்பங்களால், அருச்சனை புரிந்து - அருச்சித்து, பரகதி - திருவடிப் பேறாகிய மேம்பட்ட முத்தியை, அடையும் நாள் உளதோ-பெறுங் காலமும் உண்டோ? (அறியேன்); (எ-று.)

(வி-ரை) நயமாவது புழுக்கடி மயிர்சிக்கல் முடங்கல் பழமை யாதல் வாடல் முதலிய குற்றங் கலவாது மணமுடைத்தாய் அப்

பொழுது அலர்தலுடைமை. பரகதி திருவடிக்கீழ்ப் புக்கிருத்த லென்பதை * "உன்னடிக்கே போதுகின்றேன்" என்ற அருட் பாவா லறிக. பகை கடிந்து நாடாள வெஃகினார்க்கு மலையாணும் வேண்மோகலின் விடயப் பகை கடப்பார்க்கு அரணாக்கினார்.

சிவபெருமானை இடைவிடாது அருச்சனை செய்பவர்பால் யமன் வருதற்கு அஞ்சுவன் என்பதும், அங்ஙனம் அருச்சிப்பவர் முத்திப்பயன் அடைவதற்கு ஐயமின்று என்பதும் தோன்ற, 'நயங்கொளு மலரா னின்றிரு வடியை நாடொறு முயிருணுங் கூற்றம், பயங்கொள வகலா தருச்சனை புரிந்து பரகதி யடையுநா ளுளதோ' என்றார்.

80· பிரம்பொரு கரங்கொண் டடிப்பநந் திசர்
 பெருங்கல்வீழ் பாசியி னிமையோர்
சிரம்பொர வொதுங்கி நெருங்குநின் னவையிற்
 றீயனே னணையுநா ளுளதோ
வரம்பொர வகன்ற விலங்கிலை நெடுவே
 லமர்த்தகட் கிரிமக ளிணைக்குஞ்
சரம்பொர விருந்து விளங்குறுஞ் சோண
 சைலனே கைலைநா யகனே

(ப - ரை) அரம் பொர - அரத்தாற் றேய்த்தலால், அகன்ற- விசாலித்த, இலங்கு இலை நெடு வேல் - விளங்கும் இலைவடிவு வாய்ந்த நீண்ட வேலினையும், அமர்த்த - பேரிட்டு வென்ற, கண்- திருக்கண்களையுடைய, கிரி மகள் - பர்வதவர்த்தனி யம்மையின், இணை குஞ்சரம் - இரண்டு தனங்களாகிய யானைகள், பொர இருந்து - தாக்கப்பெற்று, விளங்குறும் சோணசைலனே கைலை நாயகனே-விளங்கும் சோணசைலரே! கைலைநாயகரே!, நந்தீசர் -

* ஆளுடையவாசு தேவாரம் - திருப்புகலூர்

நந்திகேசர், பிரம்பு-பொற்பிரம்பினை, ஒருகரம் கொண்டு-ஒருகரத்திற் றாங்கி, இமையோர் சிரம்-தேவர்களது மணிமுடியில், பொரதாக்குமாறு, அடிப்ப - மோத, பெரு கல் வீழ் - பெரிய கல் தன்னிடையில் வீழப்பெற்ற, பாசியின் - பாசியைப்போல, ஒதுங்கி - இடைந்து, நெருங்கும் - உடனே கூடிக்கொள்ளத்தக்க, நின் அவையில் - தேவரீரது அத்தாணி மண்டபச் சபையிலே, நீயனேன் - தீவினையேனும், அணையும் நாள் - வரப்பெறும் நாளும், உளதோ - உண்டோ? (அறியேன்); (எ - று.)

(வி - ரை) சிரம்பொர வொதுங்கல் முடியொடு முடி தாக்க விலகல் என்னலு மொன்று. 'அகன்ற' என்னும் பெயரெச்சம் 'வேல்' என்னும் பெயரைக் கொண்டது. அமர்த்தல் அதன் காரியமாகிய வெற்றியை யுணர்த்திநின்றது. குஞ்சரம் - உவமையாகு பெயராய்த் தனத்தை யுணர்த்திற்று. குஞ்சரக்கோட்டினைக் குஞ்சர மென்றார் எனினு மமையும்.

நந்தியெம்பெருமான் பிரம்பினால் அடிக்குந்தோறும், பெருங் கல் வீழ்ந்த நீரிலுள்ள பாசி விலகிப் பின்னும் நெருங்கல்போல, அமரர்கள் சிரம் ஒன்றோடொன்று அடிபட விலகிப் பின்னும் நெருங்குகின்றார் என்பது தோன்ற, 'அடிப்பநந் தீசர் பெருங்கல் வீழ் பாசியி னிமையோர், சிரம்பொர வொதுங்கி நெருங்குநின் னவை' என்றார்.

81. காமமை முனிந்த முனிவரர் புகுமெய்க்
கதியிடைப் புகவிடுத் திடினும்
பாமர னிவனென் றிருளினுய்ப் பினுநின்
பதமல ரன்றிவே றுளதோ
வாமமை பொருந்து முலகுள குவட்டு
மலைகள்போ லாதுணெ மூலையாக்,

தாமரை பொருந்து மானுள்வாழ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) வரம் மரை - தாவிச்செல்லும் மானினங்களை, பொருந்தும் - தம்பா லுறையப்பெற்ற, உலகு உள - உலகின்க ணுள்ள, குவடு மலைகள் போலாது - மற்றைச் சிகரங்களையுடைய மலைகளைப் போலாது, உண்ணுமலை ஆம் தாமரை பொருந்தும் - பிடித் துண்ணப்படாத தனமாகிய தாமரை யரும்புகளையுடைய, மான் உள் வாழ்-(உமாதேவியா ரென்கின்ற) மானுள்ளே வாழா நின்ற, சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, காமனை முனிந்த-மன்மதனை வென்றுகொண்டு, முனிவர் புகும்-முனிவர்க ளடையும், மெய் கதியிடை - உண்மை யாகிய முத்தி யுலகத்தில், புகவிடுத்தினும்-சேர்ப்பினும் (அன்றி), இவன் பாமரன் என்று - இவன் அஞ்ஞானி யென்று, இருளின் உய்ப்பினும் - நரகத்திற் செலுத்தினும், நின் பதம் மலர் அன்றி உமது திருவடித் தாமரைகளையே யல்லாது, வேறு உளதோ வேறு கதி யுண்டோ? (இல்லை என்றபடி); (எ - று.)

(வி - ரை) "நரகம்புகினு மெள்ளேன் றிருவருளாலே யிருக்கப் பெறின்" என் றருளினர் மணிவாசகப்பெருமானும் ஆகலின், உடையானை யல்லது அடிமைக்கு உறுதுணை யின்மை யால் தேவரீர் திருவுள்ள முவந்து நிறுவிய கதியே சிறியேற்கு உயர்கதி யாவதென்பார், 'கதியிடைப் புகவிடுத்திடினும் இருளி னுய்ப்பினும் பதமலரன்றி வேறுளதோ' என்றார். மான்களைப் புறத்தே கொண்டுள்ள ஏனை மலைக்கு மாறுபட நிற்பதொன் றென் பார், 'மானுள்வாழ்' என்றார். மானுள் வாழ்தலாவது சிவபெரு மான் மலை வடிவெடுத்த காலத்தில் அர்த்தநாரீச கோலத்தோடு மறைந்தமையாம். எவராலும் வெலற்கரிய னென்னும் பெருமை தோன்றக் காம னென்னாது, 'காமர்' என்றார். எனவே, அவனை

யும் வென்ற முனிவர் பெருமை கூறல்வேண்டாதாயிற்று. 'காமர்' என்புழி, 'அர்' இழிவுபொருட்டு என்பாரு முளர். அப்பொருட்கு "நமனார்", "மாரீசனார்" என்பனபோல நிற்றல்வேண்டும். துறக்க முதலிய பொய்க் கதிகளை விலக்குதற்கு, 'மெய்க்கதி' என விசேடிக்கப்பட்டது.

(சங்கர நாராயணர் கோயிற் புராணம்)

"ஒருமுலை சுரந்த தீம்பா லுண்புழி மழலைத் தீஞ்சொன்
முருகனுக் கென்றே யீன்ற முதல்விவைத் திருந்த மற்றைத்
திருமுலை வருடு வான்போற் றிரள்புழைக் கரத்தா லுண்ணும்
வரிநுதற் களிற்றின் செந்தா மரையடி வணங்கு வாமே."

எனவும்,

(சீகாளத்திப் புராணம் - பாயிரம்)

"பன்னிரு கமலக் கையும் பற்பல தொழில்வி ளைப்பத்
தன்னமர் தாய்மு லைப்பா லுண்கவா னிருந்துண் ணுங்கால்."

எனவும் கவிகள் வர்ணிக்கினும், வள்ளத்திற் கறந்தளித்தன ரென் பதே புராணசித்தமாகலின், 'உண்ணாமுலை'யெனப்பட்டன என்க.

மரை-ஒருவகை மான். தனங்க ளென்னும் தாமரை யரும்பு களைக் கொண்ட மான் என்றது விளங்கவைத்தல். தாமரை பொருந்து மா னென்பது தாவும் மரைகள் பொருந்திய தொரு மா னெனப் பிறிதொரு நயந் தோன்ற நின்றது. தேவியாரை மா னெனல் மலையில் வளர்ந்தமையி னென்க.

(திருத்தணிகைப் புராணம் - களவுப் படலம் - சஉ)

"திருமுகங் கமல மிணைவிழி கமலஞ்
செய்யவாய் கமலநித் திலந்தாழ்
வருமுலை கமலந் துணைக்கரங் கமலம்
வலம்புரி யுந்திபொற் கமலம்

பெருகிய வல்குன் மணித்தடங் கமலம்
பிடிநடைத் தாள்களுங் கமல
முருவவட் கவ்வா ருதலி னன்றே
யுயர்ந்தது பூவினுட் கமலம்.''

என்பவாகலின் உறுப்புக்களாகப் பத்துத் தாமரைகளையுடைய உண்ணுமுலை யென்னும் மாஜெனனினும் பொருந்தும். சிவபெருமானையன்றி வேறு கதி யின்றென்பது கருத்து என்க.

82. தொடுக்குமா கமங்க ளெலாஞ்சொலைந் தெழுத்துந்
துணிந்தநெந் சிருக்கையாற் பகையைப்
படைக்கைதா னிருந்து மஞ்சுறு மவர்போற்
பகட்டுமா மறலியை வெருவேன்
மடக்குவார் கலாப மயிறுயி லெழுந்து
மருவலர் வேங்கைமீ தகவத்
தடக்கைவா ரணங்கள் பிளிறிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) மடக்கு - வளைக்கத்தக்க, வார் - நீண்ட, கலாபம் - தோகையினையுடைய, மயில் - மயில்கள், துயில் எழுந்து - நித்திரை தெளிந்து, மரு அலர் - வாசனை பொருந்திய மலர்களையுடைய, வேங்கைமீது - வேங்கை மரங்களின்மீது (இவர்ந்து), அகவ - (அஞ்சிக்) கூவும்படி, தட கை வாரணங்கள் - பெருமை வாய்ந்த துதிக்கையையுடைய யானைகள், பிளிறிடும் - பெருமுழக்கஞ் செய்யும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, தொடுக்கும்-தேவரீரா லருளிச்செய்யப் பட்டுள்ள, ஆகமங்கள் எல்லாம் - வேதாகமாதி கலைகளனைத்தும், சொல் - புகழ்ந்து கூறும், ஐந்து எழுத்தும் - ஸ்ரீ பஞ்சக்கரங்களை

யும், துணிந்த - தெளிந்துள்ள, நெஞ்சு இருக்கையால் - மனமென்னுங் கருவி அடியேனிடத்திருத்தலால், படை-தக்க ஆயுதங்கள், கை இருந்தும் - கரத்தி லிருந்தும், பகையை-சத்துருக்களை, அஞ்சுறும் அவர் போல் - அஞ்சுவார்போல, பகடு மா மறலியை - எருமைக்கிடாய் வாகனனாகிய கரிய இயமனை, வெருவேன் - அஞ்சேன்; (எ - று.)

(வி-ரை) (உண்மை விளக்கம் - ௪௪)

"அஞ்செழுத்தே யாகமமு மண்ணலருமறை
மஞ்செழுத்தே யாதிபுரா ணம்மனைத்து—மஞ்செழுத்தே
யானந்த தாண்டவமு மாறுறுக் கப்பாலா
மோனந் தவாமுத்தி யும்."

என்பது நூற்றுணிபாகவின், பஞ்சாக்ஷரம்: சிவம் சத்தி ஆன்மா திரோதம் மலம் என்னும் ஐம்பொரு ளியல்பை விளக்குவனவாய் எவற்றிற்கும் மூலமெனப்படு மென்பார், 'ஆகமங்க ளெல்லாஞ் செசா லந்தெழுத்து' என்றார்.

(உண்மை விளக்கம் - ௪௨)

"அண்ணன் முதலா மழகா வெழுத்தஞ்சு
மெண்ணி லிராப்பகலற் றின்பத்தே—நண்ணு
வருளா னதுசிவத்தை யாக்கு மணுவை
யிருளா னவைதீர வின்று."

எனத் துணிந்து முறைப்படி இனிதோதுவாரை அணுகுவதற்கும் இயமனும் அவன் தூதரும் அஞ்சுவாராக அத்தகைய இயமனை யான் அஞ்சுவன்கொலோ என்பார், 'மறலியை யஞ்சேன்' என்றார். வேதம் ஆகமம் புராண முதலிய கலைகளனைத்தையுமே ஆகமப் பிரமாண மென வழங்கலானும்,

(ஆளுடைய பிள்ளையார் தேவாரம்
நமச்சிவாயத் திருப்பதிகம் - க)

"வேத நான்கினு மெய்ப்பொரு ளாவது
நாத னாம நமச்சி வாயவே"

என்றற் றொடக்கத்துச் சுருதியுடைமையானும், ஆகம மென்பது வேதாகமாதிகளாக ளனைத்தையுஞ் சுட்டி நின்றது. தொடுத்தல்-சொல்லும் பொருளு மமையச் செறித்தல்; தொடையென்னும் பெயருடைமையானு முணர்க. ஐந்தெழுத்து மென்பதில், உம்மை இனைத்தென் றறிபொருளில் வந்த முற்றும்மை.

"அச்சக் கிளவிக் கைந்து மிரண்டு
மெச்ச மிலவே பொருள்வயி னான."

என்பது ஒத்தாகலின் உருபு விரித்துழியும் பகையை மறலியை என இரண்டனுருபே விரித்தார். படை-படுத்தற்கருவி; அது கையி னின்றும் ஏவப்படுதலின் அஸ்திரமென்றும், கையிலேயே நிலை பெறுதலின் சஸ்திரமென்றும் இருதிறப்படும். (படுத்தல் - கொல் லுதல்.)

பகட்டல் - வெருட்டல்; மா - தேகப்பருமை எனலுமாம். தான் - அசை. மின்னற் கோடுடைமை மழைமதமுடைமை யாதியவற்றால் யானை மேகம் போலுதலின், அத னொலியை மேகமுழக்கெனக் கருதி மயில்கள் ஒலித்து ஆடும்படி அது பிளி றும் எனினும் ஒன்றும். 'தட' என்பது பெருமை யுணர்த்தும் உரிச்சொல் லாதலை,

(தொல்காப்பியம்-சொல்லதிகாரம்-க00)
"தடவுங் கயவு நளியும் பெருமை"

என்பதனானும், இயமனும் தூதரு மஞ்சுதலை,

(நமச்சிவாயத் திருப்பதிகம் - ௪)

"இயமன் றூதரு மஞ்சுவ ரின்சொலா
னயம்வந் தோதவல் லார்தமை நண்ணினால்."

என்பதனாலும் அறிக.

83. நிந்தியா துடல முழுதுநீ றணிய
 நேசியா தமலவைந் தெழுத்துஞ்
சிந்தியா துழலு மெனைக்கொடுங் கூற்றென்
 செய்யுமோ வறிந்திலேன் றமியேன்
வந்தியா வரவ மன்றிடைக் கண்ட
 மலர்சிலம் படியைமண் ணுணிபோய்ச்
சந்தியா தயர வொளித்திடுஞ் சோண
 சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) அரவம் வந்தியா - பதஞ்சலிமுனிவர் வந்தித்து (வழிபட்டு), மன்றிடை கண்ட - சிற்றம்பலத்திலே தரிசிக்கப் பெற்ற, மலர் சிலம்பு அடியை - வியாபகமான சிலம்பணி யணிந்த திருவடிகளை, மண் உணி-உலகையுண்ட திருமால், போய் - வராக வடிவாய்த் தேடிச் சென்று, சந்தியாது அயர - காணப்பெறாது சோர்வடையும்படி, ஒளித்திடும் - மறைத்தருளிய, சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, உடலம் நிந்தியாது - சரீரத்தை இகழ்ந்து விடாமலும், (உடலம்) முழுதும் - அச் சரீர முற்றும், நீறு அணிய-திருநீற்றினைப் பூச, நேசியாது - அன்புறாமலும், அமலம் - மலநீக்கம் பெறுதற்கு ஏதுவாகிய, ஐந்து எழுத்தும் - பஞ்சாக்கரங்களையும், சிந்தியாது - தியானியாமலும், உழலும் எனை-வாளா அலையுந் தீயேனை, கொடும் கூற்று-கொடிய இயமன், என் செய்யுமோ - என் செய்வானோ?, தமியேன் அறிந்திலேன் - யான் அறிந்திலேன்; (எ-று.)

(வி - ரை) உடலம் மலபாண்டமாய் நிலைபேறின்றி அழிதல் கண்டும் அதனைப் பேணுதலில் அவா அற்றிலேன் என்பார், 'நிந்தியா துடலம்' என்றார். அவ் வியல்புடை அவ் வுடலம் நீங்குமுன்னரே முத்திக்கு முதற் சாதனமாகிய திருநீற்றை அன்புற் றணியப் பெற்றிலேன் என்பார், 'உடலமுழுது நீறணிய நேசியாது' என்றார்.

"நல்லவர் தீய ரெனாது நச்சினர்
செல்லல் கெடச்சிவ முத்தி காட்டுவ"

என்ப தறிந்தும் உச்சரித்திலேன் என்பார், 'அமலவைந் தெழுத்துஞ் சிந்தியாது' என்றார். இவ் வியல்புடையாரை இயமன் தனது தூதரை யேவித் தண்டித்தல் ஒருதலை யென்பார், 'கூற்று என் செய்யுமோ' என்றார். திருமால் கற்பாந்தத்திலே எவ்வுலகங்களையும் உயிரையும் தமது உதரத்துட் பொதிந்து, பாலகன்போல் அறிதுயிலமர்வ ரென்பது புராணசித்த மென்பார், 'மண்ணுண்ணி' என்றார். இத்தகைப் பெருந்தகைமை வாய்ந்தும், இவர் சயனமாகிய ஆதிசேஷாவதார மெனப்படும் பதஞ்சலி முனிவரது வழிபாடு நோக்கித் தந்திருவடிகளைத் தரிசிப்பித்தருளிச் செருக்குற் றமையால் இவர்க்கு மறைத்தருளின ரென்பார், 'சந்தியாதயா வொளிந்திடும்' என்றார். உடலம் தாப்பிசையாய் நின்றது; தாப்பிசை - ஊசல் போல இருமருங்குஞ் செல்வதொரு சொல். அவமதியாது திரு நீற்றை உடலமுழுது மணிய வென ஒரு முடிபாக் கலுமாம். அமலம் பெறுதற் கேதுவாகிய ஐந்தெழுத்தை அமலவைந்தெழுத் தென்றது காரியத்தைக் காரணமாக வுபசரித்தல். வந்தியா - வினையெச்சம். மலர் அடி - வினைத்தொகை. சிலம்பு - இடைப்பிறவரல். மண்ணுண்ணி - வினைப்பெயர் (திருமால்.) அரவங் கண்ட வடியை மண்ணுண்ணி யென்னும் ஒரு செந்து காணா தயா வெனப் பிறிதொரு பொருள் தோன்றிற்று. மண்-ஈண்டு உலகின் மேற்று. மண்ணுண்ணி - நாகப்பூச்சி. உடல் முழுதும் அன்போடு

திருநீ றணிந்து, பஞ்சாக்கரத்தையும் இடைவிடாது சிந்திப்பா ராயின் இயமனைக் கடந்து முத்தி யடைதல் எளிதென்பதாம்.

84. மங்கையர் பாரக் கொங்கையங் குவட்டி
 மதர்விழிக் கடலி னுமளகக்
கங்குலி னூடுஞ் சென்றவென் மனத்தைக்
 கதியிடை நடத்துமா றெளிதோ
செங்கதிர் காலை மாலையுந் தங்கச்
 சிலம்புள வெனக்கடும் பகலிற்
றங்குற நீடி நின்றிடுஞ் சோண
 சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) காலையும் மாலையும் - காலைப்போதும் மாலைப்போதும், செம் கதிர் தங்க-சிவந்த கிரணங்களையுடைய சூரியன் அமர்வதற்கு, சிலம்பு உள என - உதயகிரி அத்தகிரி யென்னும் மலைகளிருக்கின்றன எனத் திருவுளங்கொண்டு, கடு பகலில் - உச்சிப் போதில், தங்குற - உறைவதற்கே, நீடி நின்றிடும் - உயர்ந்து நின்ற, சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, மங்கையர் - பெண்களுடைய, பாரம்-கனத்த, கொங்கை அம் குவட்டும் - தனங்களாகிய அழகிய மலைகளிடத்தும், மதர் விழி கடலினும்-களிப்பு வாய்ந்த விழிகளாகிய கடல்களின்மாட்டும், அளகம் கங்குலின் ஊடும் - கூந்தலாகிய இருளினகத்தும், சென்ற என் மனத்தை - ஓடி யுழலப்பெற்ற எனது மனத்தினை, கதியிடை-முத்தி நெறியில், நடத்தும், ஆறு-செலுத்துவது, எளிதோ - எளிதாமோ? (எளிதன்று.) (எ - று.)

(வி - ரை) சாயாத்தகைமையினாலும் பருமையினாலும் மலை முலைக்கும், குளிர்ச்சியினாலும் பரப்பினாலும் கடல் கண்களுக்கும், கருமையினாலும் பரவியிருத்தலினாலும் இருள் கூந்தலுக்கும் உவ

மையாதலால், அங்ஙனமே உருவகித்தனர். கவளமிருக்கவும் கழை களிக்கும் யானைபோலக் கதியிருக்கவும் மலையிலும் கடலிலும் இருளிலும் கண்மூடி ஓடியுழலும் என் மனத்தைநன்னெறிப் படர் வித்தல் அருமையே யென்பார், 'எளிதோ' என்றார். ஊடு-ஏழ னுருபு. இம் மலை சூரிய மண்டலம்வரையில் ஓங்கி யுயர்ந்திருத்த லின்,உச்சிப்போதிற் றங்குற நீடி நின்றதாகக் கூறிய படி.

85. கண்டிகைக் கலனே கலனென விழைந்து
காயமே லணிந்துவெண் ணீற்றுப்
புண்டரக் குறிசேர் நுதலொடு நினையான்
பூசனை புரியுமா றருளாய்
முண்டகச் செழும்பூ வெனவிளக் கெரியு
முடிமிசை முத்துமேற் கட்டித்
தண்டிரைக் கங்கை யாறுசேர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) செழு முண்டகம் பூ என - செழுவிய செந்தாமரைமலர்போல, விளக்கு எரியும்-கார்த்திகைத் தீபம் பிரகாசிக்கும், முடிமிசை - திருமுடிமேல், தண் திரை கங்கையாறு - தண்ணிய அலைகளையுடைய ஆகாய கங்காநதியானது, முத்து மேற் கட்டி சேர் - முத்தால் அலங்கரித்த விதானம்போலச் சேர்ந்து விளங்கும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, கண்டிகை கலனே - உருத்திராக்க வடத்தையே, கலன் என - ஆபரணமென, விழைந்து - விரும்பி, காயமேல் அணிந்து - உடலி லணிந்து, வெள் திருநீறு-வெள்ளிய விபூதியா லணியப்பெற்ற, புண்டரம் குறி சேர் நுதலொடு - திரிபுண்டரக் குறியையுடைய நெற்றியினோடு, நினை - தேவரீரை, யான் - அடியேன், பூசனை புரியுமாறு - பூசனை செய்யும்படி, அருளாய் - திருவருள் பாலிப்பீராக; (எ-று.)

(வி - ரை) சிவவழிபாடுடையார்க்கு இன்றியமையாச் சாதனமாயுள்ளது விபூதி யென்பார் ஒளவையாரும், "நீறில்லா நெற்றி பாழ்" என்றாராகலின், நீறணியப்பட்டே நெற்றி திகழவேண்டு மென்பது தோன்ற, 'நீற்றுப், புண்டரக் குறிசேர் நுதலொடு' என்றார். உடற் பொறையாய் முடியும் மற்றை ஆபரணங்கள் போலாது உருத்திராக்கவடம் தன்னைப் புனைந்தோராது வினை யகற்றுவதாயும், சிவாராதனஞ் செய்வோர்க்குச் சிவபத மளிப்பதாயும், வெயர்வை யாதியவற்றால் விபூதி அகலுங்காலத்தும் தானிலவிப் புனைந்தோரது சிவபக்தி மிகுதியை விளக்குவதாயும், இருப்பதென்பது தோன்ற, 'கண்டிகைக் கலனே கலனென வணிந்து' என்றார். ஏகாரம் பிரிநிலை; தேற்றமுமாம். புண்டரமாவது பிறைபோல மூன்று இரேகைப்பட அணிவது. மேற்கட்டி முத்து முதலியவற்றா லமைத்து நீழல் செய்யுமாறு மேலே கட்டப்படுவது. இதில் உவம வுருபு தொக்கு நின்றது. கண்டிகைக்கலன் வினையகற்றுவதாய்ச் சிவபத மளித்தலை,

[சீகாளத்திப் புராணம் - கன்னியர் சருக்கம் - ருள]

"ஆயிரங் கலனுடம் பனைத்துந் தாங்கினும்
மாயிரும் பொறையலால் வருவ துண்டுகொல்
நாயகன் விழிமணி யொன்றொர் நாளுடல்
மீயணிந் திடில்வினை யாவும் வீயுமே."

என வரும் செய்யுளானு முணர்க.

(உருத்திராக்க விசிட்டம் - அச)

"பூணுமற் கண்டியினைப் பூசைபுரி வார்பலத்தைக்
காணு ரெனவே கழறுமறை— நாணுதே
பூண்டுசிவ பூசைபுரி வார்புகுந்து மேற்புரத்துக்
காண்டிருப்ப ரீசன் கழல்."

என வரும் செய்யுளானு முணர்க.

86. நாவினெ ழுத்து மந்திர மலாத
நவிற்றுவோர் தமையுநீ யிருப்பப்
பாவினங் கொடுபுன் மனிதரைப் புகழும்
பாமரர் தமையுமென் றொழிவேன்
கோவினம் புரப்பக் குன்றமன் றெடுத்த
குன்றமம் பாடகக் குன்றந்
தாவினஞ் சிலையென் றெடுத்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) அன்று - (இந்திரன் கன்மழை பெய்வித்த) அன்று, கோ இனம் - பசு நிரைகளை, புரப்ப - காக்குமாறு, குன்றம் எடுத்த குன்றம் - கோவர்த்தன மலையைக் குடையாக எடுத்தருளிய நீலமலை போன்ற கண்ணனாகிய திருமாலையே, அம்பு (என்று)-நமது கணை யென்றும், ஆடகம் குன்றம் - சொர்ணமய மாகிய மேருவே, தா இல்-கெடுதலற்ற, நம் சிலை என்று - நமது வில்லென்றும், எடுத்திடும் - தாங்கியருளிய, சோணசைலனே கைலைநாயகனே-சோணசைலரே! கைலைநாயகரே!, ஐந்து எழுத்து மந்திரம் (இருப்ப)-(சிறந்த) ஸ்ரீ பஞ்சாக்கர மந்திரம் இருக்கவும் (அதனை யுச்சரியாது), அல்லாத - அஃதல்லாத பிற மந்திரங்களை, நாவின் நவிற்றுவோர்தமையும் - நாவினால் உச்சரிக்கும் வீணரை யும், நீ இருப்ப-(பாடலை யேற்றுப் பலனைத் தரத்)தேவரீர் இருக்கவும், பா இனம் கொடு-பாக்களும் பாவினங்களுமாகிய இவற்றால், புன் மனிதரை-புல்லிய மனிதரை, புகழும் பாமரர்தமையும்-வாளா புகழும் அறிவிலிகளையும், என்று ஒழிவேன்-என்று நீங்கி (உமது அடியவர் கூட்டத்துட் புக்கிருப்பேனோ) அறியேன்?; (எ - று)

(வி - ரை) சிவபத்தி விசிட்டமில்லார் தம்மையே யன்றித் தம்மை யடைந்தாரையும் கெடுக்கவல்ல ராகலின், அத் தகையரை அஞ்சாநிற்பது ஆன்றோ ரியல்பு.

(திருவாசகம் - அச்சப்பத்து - ௧௦)

''கோணிலா வாளி யஞ்சேன் கூற்றுவன் சீற்ற மஞ்சேன்
நீணிலா வணியி னானை நினைந்துநைந் துருகி நெக்கு
வாணிலாங் கண்கள் சோர வாழ்த்திநின் றேத்த மாட்டா
ஆணலா தவரைக் கண்டா லம்மநா மஞ்சு மாறே.''

என் றருளினர் திருவாதவூரடிகளும். இருப்ப என்பது மூன்னுங் கூட்டப்பட்டது. பா-வெண்பா, ஆசிரியப்பா, கலிப்பா, வஞ்சிப்பா வென நால்வகைப்படும். இனம் இந் நான்கன் விகற்பமாய்க் குறள் வெண்பா முதற் பல திறப்படும் என்க. ஒழிதல்-ஈண்டு அதனோடு அதன் காரியமாகிய அடியவர் கூட்டஞ் சேர்தலையும் உணர்த்தி நின்றது. திரிபுரதகன காலத்தில் அம்பு திருமாலும், அதனது ஈர்க்கு வாயுவும், அதனுனி அக்கினியுமா யமையினும் சொரூபம் திருமாலே யாதல்பற்றி அவரையே, 'அம்பு' என்றார். 'புன் மனிதர்' என்பதற்குப் புல்லிய இதயத்தையுடைய மனிதர் எனினுமாம்.

87. திங்களுங் கதிரு மிலங்கிய மானுந்
திகழ்பெரும் பூதமோ ரைந்துங்
கங்குலும் பகலுங் கடந்தநின் வடிவங்
கண்டுகண் களிக்குநா ளென்றோ
பொங்குகுங் கிலியக் கலயவா ரழலிற்
புகையெனச் சரோருக வல்லி
தங்குவண் டெழுபூம் பொய்கைசூழ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) பொங்கு குங்குலியம் கலயம்-பொலிவுற்ற குங்குலியக் கலயத்தில், ஆர் அழலில் புகை என - அமைந்த அக்கினியி லெழும் புகைபோல, சரோருகம் அல்லி - செந்தாமரை மலரின்

அகவிதழில், தங்கு வண்டு எழு - வதியும் கருவண்டுகள் கிளம்பி மேற் செல்லும்படியான, பூ பொய்கை சூழ் - மலர்க் குளங்கள் நெருங்கப்பெற்ற, சோணசைலனே கைலைநாயகனே - சோண சைலரே! கைலைநாயகரே!, திங்களும் கதிரும் இலங்கு இயமா னும் - சோமனும் சூரியனும் துலங்கும் ஆன்மாவும், திகழ் பெரும் பூதம் ஓர் ஐந்தும் - யாவும் தோற்றுதற்குக் காரணமாகிய பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாய மென்னும் மா பூதங்க ளைந்தும், கங்கு லும் பகலும் கடந்த - இரவும் பகலும் ஆகிய இப் பகுப்பினைக் கடந்து விளங்கிய, நின் வடிவம் கண்டு - தேவரீருடைய நிஷ்கள அகண்டாகார வடிவத்தினைச் சேவித்து, கண் களிக்கும் நாள் உள தோ-எனது கண்கள் மகிழ்வுறும் காலமும் உளதாங்கொலோ? (அறியேன்); (எ - று.)

(வி - ரை பிரபஞ்சப்பொரு ளனைத்தையும் ஈண்டுக் கூறிய திங்களாதிய எண்வகைப் பொருள்களுளடக்கி அவ் வெண்வகையை யும் அங்கமாகக் கொண்டது பெருமானுடைய சகளரூப மென வும், அவ் வெண்வகையும், அவற்றால் இரவு பகலாய்க் கூறுபடும் காலதத்துவமாதியவற்றையும் கடந்து நிற்பது நிஷ்களரூப மென வும் கூறுவது நூற்றுணிபாகலின், அந்த நிஷ்களரூப தரிசனை யை வேண்டிப் பிரார்த்தித்தபடி திங்களாதிய அங்கமாதலை,

(திருவாசகம் - திருத்தோணோக்கம் - ரு)

"நிலநீர் நெருப்புயிர் நீள்விசும்பு நிலாப்பகலோன்
புலனாய மைந்தனோ டெண்வகையாய்ப் புணர்ந்துநின்றான்"

என்பதனானு மறிக.

இயமானனு மென்புழி, னகரம் தொக்கு நின்றது. யாவுந் திகழ்தற்குக் காரணமாகிய மா பூதங்களைத் திகழ்பெரும் பூத மென்றது, காரியத்தைக் காரணமாக உபசரித்தலாம். திகழ்தல்..

சண்டுத் தோற்றுதல். யாவு மென்பது அவாய்நிலையால் வந்தது; (அவாய் நிலை - ஒருசொல் மற்றொரு சொல்லை அவாவி நிற்றல்.) குங்குலியக் கலயம் தாமரைமலர்களுக்கும், ஆரழல் அகவிதழ்களுக் கும், புகை வண்டுகளுக்கும் உவமித்தபடி.

88. பொறியெனப் புலன்க ளெனக்கர ணங்கள்
பூதங்க ளெனவிலா தடங்க
வறிவெனத் தமியேற் கொருமொழி யுதவி
யருவினைக் குறும்பற வெறியாய்
செறிமுலைக் கரியுஞ் சிற்றிடை யரியுஞ்
சேரமா துமைதினங் கட்டுந்
தறியெனக் கவின்பெற் றிலங்குறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) செறி முலை கரியும்-நெருங்கிய தனங்களாகிய யானை களையும், சிறு இடை அரியும்-சிறிய இடையையுடைய சிங்கத்தை யும்,சேர-சேரும்படி, உமை மாது-உமாதேவியார், தினம்-நாடோ றும், கட்டும் தறி என-பிணிக்கப்பெறும் தாணு வென்னும்படி, கவின் பெற்று - அழகமைந்து, இலங்குறும் - திகழும், சோண சைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, பொறி என-பொறிகளைந்தும், புலன்கள் என - தன்மாத்திரைக ளைந்தும், கரணங்கள் (என)-அந்தக்கரணங்கள் நான்கும், பூதங்கள் என இலாது-பூதங்களைந்துமாகிய இவற்றின் வேற்றுமையில்லாது, அடங்க அறிவு என-முற்றும் ஞான சொரூபமாகவே (தோற்றும் படி), ஒரு மொழி - ஒரு உண்மை வாக்கியத்தை, தமியேற்கு உதவி-துணையற்ற எளியேனுக்கு உபதேசித்து, அரு வினை குறு ம்பு - கொடிய வினைகளால் விளையும் தீமைகளை, அற எறியாய் - முற்றும் சேதித் தருள்வீராக; (எ - று.)

(வி-ரை) 'அடங்க', 'அற' என்பன முழுதுமென்னும் பொருளன. 'என' மூன்றும் எண்ணிடைச்சொற்கள். இது காரணமென்புழியும் கூட்டப்பட்டது. இனி, இந்திரியாதிகளே ஆன்மாவென மயங்குத லில்லாது அச் சிந்தனை கெட்டொழிய, ஆன்மா அறிவு சொரூப மெனத் துணியுமாறு ஒரு மொழியுதவி யெனினும் பொருந்தும். யானை யாதிய விலங்குக ளிணையப்பெறும் மற்றை மலைகள் போலாது அம்பிகையி னவயவங்கள் அனுதினமும் அணையப்பெறுவ தென்பார், 'முலைக்கரியும் இடையரியும் கா' டுங் கரி' என உருவகித்துக் கூறினர். யானைக் கோட்டினையும் சிங்கவிடையினையும் இணையாக வுவமிக்கப்படும் முலையையும் இடையையும் யானை சிங்கங்க ளென்றது இலக்கணை. அறிவே பொருளெனக் காணினல்லது இருவினைகளின் பயனாகிய சனனத் துன்பம் நீங்கா என்பதாம்.

89\. பொன்னிடத் தடைந்த மணியென வடைந்து
புண்ணியர்க் கருளுநின் பதங்க
ளென்னிடத் திரும்பி னடைந்தசெம் மணிபோ
லெய்திய தம்மவோ வியப்பே
மன்னிடக் கடலு ளடங்கும்வெற் பன்றி
மலைதரு மருட்பெருங் கடலைத்
தன்னிடத் தடக்கு மலையெனுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) மன்னிட - நிலைபெற, கடலுள் அடங்கும் - சமுத்திரத்தினுள்ளே ஒடுங்கிய, வெற்பு அன்றி - பிறமலைகளை நிகர்க்காது, மலை தரும்-இமையமலை தந்த, அருள் பெரு கடலை-பெரிய கிருபைக் கடலாகிய உமாதேவியாரை, தன் இடத்து அடக்கும் - தன்னிடப்பக்கத்தி லொடுக்கிக்கொள்ளும், மலை எனும்-மலையென வியக்கப்படும், சோணசைலனே கைலைநாயகனே-சோணசைலரே!

கைலைநாயகரே!, பொன் இடத்து - பொன்னினிடத்தில், அடைந்த-சேர்ந்த, செம் மணி என-செவ்விய அரதனம் ஒப்ப, புண்ணியர்க்கு - தருமவிருத்தி யுடையவரிடத்து, அடைந்து - சார்ந்து, அருளும் நின் பதங்கள் - (அவர்க்குக்) கிருபை பாலிக்கும் தேவரீருடைய திருவடிகள், இரும்பின் அடைந்த - இரும்பினிடத்துச் சேர்ந்த, செம்மணி போல்-செவ்விய அரதனம் ஒப்ப, என் இடத்து எய்தியது-அடியேனிடத்து அணுகியது, அம்ம ஓ வியப்பே-வியப்பினும் வியப்பே; (எ - று.)

(வி - ரை) பொன்னிடத்துப் பதித்தற்குரிய செம்மணி இரும்பிடத்துப் பதியாவாறுபோலப் புண்ணியரிடத்து அடைதற்குரிய திருவடிகள் என்னிடத்து அடைவனவல்லவாகவும், அருட்பெருக்கா லடைந்தமை வியப்பினும் வியப் பென்பதாம். 'அம்ம, ஓ' என அடுக்கிய இடைச்சொற்கள் வியப்பின் மிகுதிப் பொருள்பட நின்றன.

எம் மலையும் கடலின் உள்ளிடத் தடங்குவனவாக, இம் மலை கடலைத் தன்னிடத் தடக்குவது என்றமை மூரணணி. இவ் வணி இந் நூலில் மிக்கிருத்தலின் இவ்வாறு முன்னும் பின்னும் முரணைத் தொடுத்தன வெல்லாம் கொள்க. எல்லை யிறந்த கருணைப் பெருக்கின ரென்பார், தேவியாரை, 'அருட்பெருங் கடல்' என்றார். 'பெரு அருட்கடல் என மாற்றுக. சாதுக்கள் இதய மிளகுமென்பதும், தன்னிதயம் கடின மென்பதும் தோன்றப், 'பொன்' என்றும், 'இரும்பு' என்றும் கூறினார். புண்ணியர்க்கு-வேற்றுமை மயக்கம். அம்ம-கேட்பாயாக. எனினுமாம். "அம்ம கேட்பிக்கும்" என்பது - (தொல் - உரிச்)

90. நீங்கிய நேயத் தவர்க்கறி வரிய
நெடியவ னெஞ்சகன் றிடாத
தேங்கிய சோதி மன்றுளா டுவவென்
சிந்தையு ளடப்பநின் பதங்க.

ளோங்கிய மூங்கிற் றலைமிசை மலர்வீழ்ந்
துழுமளி புரியிறுன் மருவித்
தாங்கிய வால வட்டநேர் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) மலர் வீழ்ந்து - (தேனைக் கவர) மலரின்கட் படிந்து, உழும்-கிண்டும், அளி புரி இறால்-வண்டினங்கள் அமைத்த தேனடை, ஓங்கிய மூங்கில் தலைமிசை - உயர்ந்து வளர்ந்த மூங்கிலின் உச்சியிலே, மருவி - பொருந்தி, தாங்கிய ஆலவட்டம் நேர் - (அடியவர்கள்) ஏந்திய ஆலவட்டத்தை ஒத்திருக்கப் பெறும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, நேயத்து நீங்கிய அவர்க்கு - அன்பி னீங்கிய அறிவிலிகட்கு, அறிவு அரிய-அறிதற்கு அருமை யுடையனவும், நெடியவன் நெஞ்சு அகன்றிடாத - திருமாலின் உள்ளக் கமலத்தில் விலகாதனவும், சோதி தேங்கிய மன்றுள் ஆடுவ - ஒளி யதிகரித்த திருச்சிற்றம்பலத்தில் திருத்தம் புரிவனவுமாகிய, நின் பதங்கள் - தேவரீருடைய திருவடிகள், என் சிந்தையுள்-அடியேனது மனத்திலே, நடப்ப - சஞ்சரிப்பன (ஆதல் வேண்டும்.); (எ - று.)

(வி - ரை) ஆதல் வேண்டும் என்பது இசையெச்சம். திருவடிகள் அறிவரியனவும் அகன்றிடாதனவும் ஆடுவனவும் நடப்பனவுமாகி யிருக்கின்றன வெனலும் ஒன்று. முந்திய பொருட்கு அறிவரியன முதலிவை வினைப்பெயர்; பிந்திய பொருட்கு முற்றுருக்கி எச்சம் வருவிக்க. இறால் ஆலவட்டத்திற்கும், மூங்கில் காம்புக்கும் உவமை. ஆலவட்டம் - ஆலிலைவடிவா யமைத்தவொரு உபசாரக் கருவி. 'ஆல' இதில அகரம் சாரியை.

**91.** எழுபசும் புல்லும் புனலுமேவ் விடத்து
மிருந்திட நினைத்தவவ் விடத்தே
விழைவொடு வந்து தோன்றுநீ யிருப்ப
வீணின்மா னுடர்பிறந் துழல்வார்

மொழிதரு கருணை மலையெனும் பெயரன்
மொழியொரீஇ வேற்றுமைத் தொகையைத்
தழுவுற நின்று வளர்ந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) மொழிதரு - (அன்பர்களால்) விதந்து கூறும், கருணை மலை எனும் பெயர் - கருணைமலை யெனப்படும் (தேவரீருக்குரிய) திருப்பெயரானது, அன்மொழி ஒரீஇ - அன்மொழித் தொகை யென்னும் இலக்கணத்தை விட்டு, வேற்றுமைத் தொகையை தழுவுற - வேற்றுமைத் தொகை யென்னும் இலக்கணத்தைத் தழுவும்படி, நின்று வளர்ந்திடும் - நிலைபெற்று வளர்ந்தோங்கிய, சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, புனலும் - நீரும், எழு பசும் புல்லும் - (வளர்ப்பாரின்றித் தானே) எழுகின்ற பசிய அறுகும், எவ்விடத்தும் இருந்திட - எவ்வெவ் விடங்களினும் (எளிதிற் கிடைக்க) இருக்கவும், நினைத்த அவ்விடத்தே - நியாணித்த அவ்வவ்விடங்கடோறும், விழைவொடு - காதலோடு, வந்து தோன்றும் - எழுந்தருளி வந்து காட்சி தரும், நீ இருப்ப - தேவரீர் இருக்கவும், மானுடர் - மனிதர்கள், (அவற்றைக் கொண்டு அபிடேகித்தும் அர்ச்சித்தும் தேவரீரை யடையாமல்), வீணில் பிறந்து உழல்வார் - வாளா (இறந்தும்) பிறந்தும் உழல்கின்றனர்! (இஃதென்ன அறியாமையோ? அறியேன்.); (எ - று).

(வி - ரை) எவ்விடத்து மிருந்திட நினைத்த வவ்விடத்தே விழைவொடு வந்து தோன்று நீ இருப்ப என்பன விரும்பில் பெறற் கெளிமை தோன்ற நின்றன.

'பிறந்துழல்வார்' என்றமையின் அதன் றொடர்ச்சியாகிய இறத்தலும் உபலக்ஷணத்தாற் கொள்ளப்படும். கொள்ளவே வழிபா

டுடையார் இயமவாதனைக் குரியராகி இறந்து பிறந்துழலா ரென் பது தானே போதரும். இக் கருத்துப்பற்றியே வாகீசமூர்த்திக ளும்,

(ஆளுடையவரசு தேவாரம் - பொது திருக்குறுந்தொகை-கூ)

"கற்றுக் கொள்வன வாயுள நாவுள
விட்டுக் கொள்வன பூவுள நீருள
கற்றைச் செஞ்சடை யானுள னுழுளோ
மெற்றுக் கோநம னைமனி வண்பகே."

என்றருளாறு மறிக. உழலவார் என்பது கால மயக்கம்; வகர விடைநிலை தன்மை குறித்த தெனினு மமையும். சிவபெருமானைச் சுட்டி வழங்கும் கருணைமலை என்னும் பெயர் இம் மலை வடிவம் ஆவதன் முன்னர்க் கருணையாகிய மலையையுடையவன் என்றும், மொழி மாறி மலைபோலும் கருணையை யுடையவன் என்றும், முறையே பண்புத்தொகைப் புறத்தும் உவமைத்தொகைப்புறத் தும் பிறந்த அன்மொழித் தொகையதாய் நின்று, மலைவடிவமைந்த பின்னர்க் கருணையையுடைய மலையென இரண்டனுருபும் பொரு ளும் தொக்கதாய் வேற்றுமைத் தொகையைத் தழுவிற்று என்ற படி. 'மொழிதரு' என்பதில், மொழிதா-பகுதி. 'ஒருவி' என்பது ஈறு கெட்டு இடையுகர மிகரமாய் அளபெடுத்தது; இது சொல் லிசை யளபெடை. வெருவி என்பது வெரீஇ என்றாயவாறு போல; எவரும் எளிதிற் கிடைக்கும் புல்லும் புனலும் கொண்டு பூசிக்கு மிடத்துச் சர்வ பரிபூரணமான சிவம் பிரகாசிக்கும் என்பது கருத்து.

92. வேணவா வகன்று நின்றிரு வடியின்
மெய்ம்மையன் படைந்துபொய்ப் பிறவி
நாணுவா ரினங்கண் டுறும்படி தூய
ஞானநாட் டம்பெற வருளாய்

சேணுலா மதியந் தவழ்பெருங் குடுமிச்
சிலம்புகள் சிறுதுரும் பாகத்
தாணுவா யெழுந்து வளர்ந்திடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) சேண் உலாம் மதியம்-ஆகாயத்தி லுலாவும் சந்திரன், தவழ் பெரு குடுமி - ஊர்ந்து செல்லப்பெற்ற பெரிய சிகரங்களையுடைய, சிலம்புகள் - மலைகள் எல்லாம், சிறு துரும்பு ஆக - சிறிய திரணமென்று மதிப்பன வாகும்படி, தாணுவாய் - அக்கினி ஸ்தம்பாகாரமாக, எழுந்து வளர்ந்திடும் - ஓங்கி யுயர்ந்த, சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, வேணவா அகன்று - (பிரபஞ்சத்தைப் பற்றி யெழும்) வேட்கைப் பெருக்கத்தி னீங்கி, நின் திருவடியில்-தேவரீரது திருவடிகளில், மெய்ம்மை அன்பு அடைந்து - உண்மை நேயம் பொருந்தி, பொய் பிறவி நாணுவார் இனம்-நிலையே றில்லாத செனனத்தை யடைதலில் நாணி வருந்தும் அன்பர் கூட்டத்தை, கண்டு உறும்படி - அறிந்து அவருடன் மருவி வாழும்படி, தூய ஞானம் நாட்டம் - பரிசுத்தமான ஞானக் கண்களை, பெற அருளாய் அடியேன் பெறுமாறு தந்தளிப்பீராக; (எ - று.)

(வி-ரை) "செய்யுண் மருங்கின் வேட்கை யென்னும்
ஐயெ னிறுதி யவாமுன் வரினே
மெய்யொடுங் கெடுத லென்மனார் புலவர்
டகார ணகார மாதல் வேண்டும்."

என்பது சூத்திரமாதலால், வேட்கை அவா என்பன, 'வேணவா என்றாகி வேட்கைப் பெருக்கத்தை யுணர்த்துவதோர் மொழியாய் நின்றன. வேட்கை - பொருண்மேற் றோன்றும் பற்றுள்ளம் அவா - அப்பொருளைப் பெறவேண்டுமென்று மேன்மே னிகழு

ஆசை. வேட்கையும், அவாவும் என உம்மைத்தொகையாகவும், வேட்கையா லுண்டாகிய அவாவென மூன்றனுருபும் பயனும் உடன்றொக்க தொகையாகவும் கொள்வர்.

காணுதல் - கண்டு அறிதலின் மேற்று. ஞான நாட்டம் பெற்றாலல்லது, உலகிற்கஞ்சி இலைமறை காய்போல் மறைந்துள்ள சிவஞானியரைக் காண்டலும் அவர் குறிப்பறிந்து ஒழுகலும் முடியாவாகலின் ஞான நாட்டம் விரும்பினர் என்க.

93\. நின்னையே நோக்கி விடாதகட் புலனு
நின்னையே நினைக்குநெஞ் சகமு
நின்னையே துதிக்கு நாவுமென் றருளி
நின்றிரு வடியின்வைத் தருள்வாய்
தன்னையே றினர்க்குச் சகமெலாங் காட்டுந்
தரணியோ டிகலிமே வினர்க்குத்
தன்னையே காட்டு மலையெனுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) தன்னை ஏறினர்க்கு - தன் மேல் இவர்ந்தார்க்கு, சகம் எலாம் காட்டும்-உலகையும் அதன்கட் டோன்றும் பொருள் களையுமே காட்டுகின்ற, தரணியோடு இகலி - மலைகளோடு மாறுபட்டு, மேவினர்க்கு - தன்கண்ணடைந்தார்க்கு, தன்னையே காட்டும் - (புறப்பொரு ளொன்றனையும் காட்டாது) தன்னிலை யொன்றுமே காட்டியருளும், மலை எனும் - மலை என்று அடியவர்கள் துதிக்கும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, நின்னையே - தேவரீரையே, நோக்கி - தரிசித்துக்கொண்டு, விடாத - அதில் விலகாதுள்ள, கண் புலனும் - கண்ணிந்திரியமும், நின்னையே - தேவரீரையே, நினைக்கும் - தியானிக்கும், நெஞ்சகமும் - மனமும், நின்னையே -

தேவரீரையே, துதிக்கும் - வாழ்த்தும், நாவும்-வாக்கும், என்று அருளி - எக் காலம் அளித்தருளி, நின் திருவடியின் - உமது திருவடியின்கண், வைத்து அருள்வாய் - சேர்த்தருள்வீரோ? (அறியேன்); (எ - று.)

(வி - ரை) ஏகாரம நான்கும் பிரிநிலையோடு தேற்றம். 'கட்புலன்' என்பது கண்ணிற் குரிய விஷயத்தை யுணர்த்தாது ஈண்டுக் கண்ணிந்திரியத்தையே உணர்த்திற்று. இம்மையில் திரிகரணங்களையும் உம்முடைய வாக்கி, மறுமையில் திருவடிப்பேறு பாலித்தல் வேண்டுமென்பது கருத்து. திருவடிப்பேறே பரமுத்தியாதல் பற்றி வாகீச மூர்த்திகளும்,

(தேவாரம் - திருவங்கமாலை-கரு)

"சிறுமா னேந்திதன் சேவடிக் கீழ்ச்சென் றங்
கிறுமாந் திருப்பன் கொலோ."

என் றருளினர்.

தாணி - மலை. தன்னையே காட்டலாவது பசுநிலை யுணர்வை உண்டாக்கிப் பதிநிலையை அறிவித்தல். திரிகரணங்களுஞ் சிவகாணமாயினல்லது திருவடி கிடையாது என்பது எனக் கொள்ளினு மமையும்.

94. மின்வணங் கவருஞ் செஞ்சடா டவியும்
விளங்கொளி மார்பும்வா னுலக
மன்வணங் குறுநின் பதாம்புய மலரு
மனங்குடி யிருக்குநா ளுளதோ
பொன்வணம் புரியுங் கநகமொன் றினைப்பொற்
பொருப்பென வடைபொரு ளனைத்துந்
தன்வண்ணம் புரியும் பொருப்பெனுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) பொன் பொருப்பு-மேருமலையானது, காகம் ஒன்றினை-(தன்னை யடைந்த) காக்கைப் புள்ளொன்றினையே, பொன் வண்ணம் புரியும் என - பொன்னிறமாகச் செய்யும் (இஃதொரு வியப்போ? வியப்பன்று) என்று, அடை பொருள் அனைத்தும் - (தன்னை) அடைந்த பொருளனைத்தினையும், தன் வண்ணம் புரியும்-தன் மயமாக்கும், பொருப்பு எனும் - மலை யீதென்று அன்பர்கள் கொண்டாடப்பெறும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, மின் வண்ணம் கவரும்-மின்னலின் நிறமும் மிக விரும்பும், செம் சடாடவியும்-செவ்விய சடைக்காடும், விளங்கு ஒளி மார்பும்-பிரகாசிக்கின்ற காந்தி பெற்ற திருமார்பும்,வான் உலகம்-விண்ணுலகத்தவராலும், மன் வணங்குறும்-மிகவும் வழிபடப்பெறும், நின் பதாம்புயம் மலரும் - தேவரீருடைய திருவடித் தாமரை மலர்களும், மனம் குடி இருக்கும் நாள்-அடியேனது உளத்தில் அமர்ந்துறையும் காலமும், உளதோ - உண்டோ? (அறியேன்); (எ - று.)

(வி - ரை) கவர்தல்-வேட்கைப் பெருக்கம். மின்னொளியையும் தன்வய மாக்கும் எனலுமாம். மின்வணம், வானுலக மென் புழி, உயர்வு சிறப்பும்மைகள் தொக்கன. உலகம்-இடவாகு பெயர். மன் - மிகுதிப் பொருள் தருவதோ ரிடைச்சொல். உம்மைகள் எண்ணின்க ணின்ற உயர்வு சிறப்பின. எதிரது தழீஇயவெனவினைத் திருவுறுப்புக்களையும் கோடலும் ஒன்று.வண்ணம் மூன்றும் இடைக் குறைந்தன. சடாடவி, பாதாம்புயம் வடமொழிச் சந்தி. பொன்னிறத்தவும் கருநிறத்தவுமாகிய பறவைகள் தன்பாலெய்தின் மேருவானது தன்னிறப் பறவைகளை வேற்றுமைப்படுத்தும் ஆற்றலின்றிக் கருநிறக் காக்கை யொன்றையே தன்னிறத்ததாக்கும்; சிவசொரூபமாகிய இச் சோணசைலமோ தன்மயத்த பொருள் ஒன்று ,மின்மையின், அடைந்த உயிர்ப்பொருள் அனைத்

தையும் தன்மய மாக்கும் ஆற்றலுடைய தென்பார், 'அடை பொரு ளனைத்துந் தன்வணம் புரியும்' என்றார். இங்ஙனமே பிறரும்,

(சிதம்பர மும்மணிக்கோவை-௪)

"பொன்னிறப் புறவுங் கருநிறக் காக்கையு
மன்னுமா லிமைய வரைப்புறஞ் சேர்ந்துழி
யிருநிறப் பறவைக்கு மொருநிற னல்லதை
நிறம்வேறு தெரிப்ப துண்டோ"

என விதந்திருப்ப துணர்க. அன்றியும்,

(யாப்பருங்கலக் காரிகை, அவையடக்கம்-௨)

"சுருக்கமில் கேள்வித் துகடீர் புலவர்முன் யான்மொழிந்த
பருப்பொருடானும்விழுப்பொருளாம்பனிமாலிமயப் [னிறமாய்
பொருப்பகஞ் சேர்ந்தபோல் லாக்கருங் காக்கையும் பொன்
இருக்குமென் றிவ்வா றுரைக்குமன் றேயிவ் விருநிலமே."

என வரும் செய்யுளானு முணர்க.

காக மொன்றினை யென்பது காகமுதலியவற்றையே யல்லது எவற்றையும் வேற்றுமை செய்யு மாற்றல் உளதன்றென இழித்தற் பொருள்பட நின்றது. 'அனைத்தும்' என்பதில் உம்மை முற்றும்மை. தன்வணம் புரிதல் - தற்சொரூப மாக்கல்.

95. குருமணி மகுடம் புனைந்துல காளுங்
கொற்றவ ராதலி னென்கட்
கருமணி யெனுநின் றொண்டர்குற் றேவல்
கருதியாட் பட்டிட லினிதே
பெருமணி விசும்பி னுச்சியி னெழுந்த
பிள்ளையங் கதிரென வரவந்
தருமணி யொளிவெண் மதியுறுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) பெரு மணி விசும்பின் - பெரிய கருமையுடைய ஆகாயத்தின், உச்சியின் எழுந்த - உச்சியிற் றோன்றிய, அம்பிள்ளை கதிர் என - அழகிய இளஞ் சூரியனென்று உலகினர் கூறும்படி, அரவம் தரும் மணி ஒளி - பாம்புக ளுமிழ்ந்த செம் மணிகளின் காந்திகள், வெள் மதி உறும் - வெள்ளிய சந்திரனிற் படியப்பெறும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைல ரே! கைலைநாயகரே!, குருமணி மகுடம் புனைந்து - நிற மமைந்த அரதனங்கள் பதித்த கிரீடத்தை யணிந்து, உலகு ஆளும் - உலகினை ஆட்சி புரியும், கொற்றவர் ஆதலின் - அரசராயிருத்தலினும், என் கண் - எனது கண்களின், கருமணி எனும் - கருமணி போலும் (அருமை வாய்ந்த), நின் தொண்டர் குற்றேவல் - தேவரீருடைய அடியவர்களின் சிற்றேவலையே, கருதி - (பொருளென) எண்ணி, ஆள் பட்டிடல் இனிதே - (அவ் வடியவர்கட்கு) அடிமைப்பட்டு வாழ்தல் இன்பம் பயத்தலுடையதே; (எ - று.)

(வி-ரை) கண்ணிற் கருமணி இது நல்லது இது தீயது எனப் பொருள்களை விளக்குமாறு போல, இது பொய்ப்பொருள் இது மெய்ப்பொருள் எனத் தெளிவித்தலின், தொண்டரைக், 'கண்ணின் கருமணி' யென்றார். பெருந் துன்பிற் கேதுவான அடியார் ஏவலையே பொருளெனக் கொள்ளுதல் இனிமையுடைத் தென்பதனை,

(கோயினான்மணிமாலை - உ)

“துடைகொண் டிவ்வைய மெலாங்குளிர் வித்தெரி
பொற் றிகிரிப்
படைகொண் டிகலெறும் பார்த்திவ ராவதிற்
பைம்பொற் கொன்றைத்
தொடைகொண்ட வார்சடை யம்பலத் தான்றொண்டர்க்
கேவல் செய்து

கடைகொண்ட பிச்சைகொண் டிங்கு வாழ்தல்
களிப்பு டைத்தே.''

என்பதனு மறிக.

அரவச் செம்மணியொளி பாய்தலின் சந்திரன் சிவந்து இளஞ்சூரியனென விளங்காநிற்பன் என்பது. கொற்றவர் - வெற்றியை யுடையவர். கொற்றம் - வெற்றி; தொழிலடியாகப் பிறந்த பெயர்; இதனைப் பண்படியாகப் பிறந்த பெயர் என்பர். அது பொருந்தாது பகுதியை நோக்கின்.

96. சிம்புளாய் மடங்க லெறுழ்வலி கவர்ந்த
திறலுமுப் புரஞ்சுடு விறலு
மம்புயா தனத்தன் முடிகளோர் திட்ட
வடலுமேத் தினர்க்கிட ருளதோ
வும்பர்மா மதியி லங்கையி லிருந்த
வுழைகுதித் திருப்பவா ரழல்வான்
றம்பமா யெழுந்து நின்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) அம் கையில் இருந்த - தேவரீர் திருக்கரத்தி லிருந்த, உழை-மான்கன்றானது, உம்பர் மா மதியில்-ஆகாயத்தி லிருந்த பூரண சந்திரனிடத்து, குதித்து இருப்ப - தாவித் தங்கும் படி, வான் ஆர்-வானளவும் நிரம்பிய, அழல் தம்பம் ஆய் - அக்கி னித் தம்பாகாரமாய், எழுந்து நின்றிடும் - ஓங்கி நிலைபெறும், சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலை நாயகரே! சிம்புளாய் - சரபப்புள் வடிவாய், மடங்கல்-நாரசிங்கத் தின், எறுழ் வலி - மிக்க வலிமையை, கவர்ந்த திறலும்-போக்கிய வெற்றியையும்; முப்புரம் - திரிபுரத்தை, சுடு விறலும் - தகித்த வெற்றியையும், அம்புய ஆதனத்தன் - தாமரை ஆசனத்தராகிய

பிரமதேவராது, முடி களைந்திட்ட அடலும் - நடுமுடியைக் கிள்ளிய வெற்றியையும், ஏத்தினர்க்கு - (அன்போடு) துதித்த தொண்டர்கட்கு, இடர் உளதோ - துன்பம் உளதாங்கொலோ? (முக்காலத்தும் உளதாகாது) ; (எ - று.)

(வி - ரை) சிவபெருமான் கொண்ட இருபத்தைந்து மூர்த்தங்களுள் கோரமூர்த்தங்களை இடையொழிவிற்கும், மிசிரமூர்த்தங்களைச் சித்தியெய்தற்கும், சாந்தமூர்த்தங்களைச் சாந்தியெய்தற்கும், வழிபடவேண்டுமென்பது நூற்றுணிபாகலின், ஈண்டுக் கூறிய உக்கிர மூர்த்தங்களின் வெற்றிகளைத் துதிக்கின் இடரெய்தா வென்பார், 'இடருளதோ' என்றார். இதனை,

(வாயுசங்கிதை - ஞானயோகமுதலிய வுரைத்த
அத்தியாயம் - ருஉ)

"கோரமுடன் மிச்சிரஞ் சாந்தமென
மூவகையாக் குலவு மண்ணல்
பேர்பெறுமூர்த் தங்களிவற் றெய்தியவெம்
பாவநோ யிரிக்க வேண்டிற்
சீர்மருவுங் கோரத்தைச் சித்தியெய்த
வேண்டிடின்மிச் சிரத்தைச் செவ்வே
யார்தருசாந் தியைவேண்டிற் சாந்தத்தைப்
பூசனைநன் காற்ற வேண்டும்."

என்பதனானு மறிக.

மிசிரம் - கோரமும் சாந்தமும் கலந்தன. சந்திரனிடத்துள்ள களங்கத்தை முயலென்றும் மானென்றும் கூறுவது கவிமரபாதலால் சிவபெருமான் தமது கரத்துள்ள மான் தாம் கொள்ளும் அழல் வடிவிற்கஞ்சிச் சந்திரனிடத்தமா அவ் வழலுருக்கொண்டதாக வர்ணித்தன ரென்க. "எறழ்வலி யாகும்" என்பது

சூத்திரமாகலின், எறுழ்வலி என அடுக்கிய இரண்டும் ஒருபொருட் பன்மொழியாம். இதனை இருபெயரொட்டு எனவே சால் புடைத்து; என்னை,

"ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழா"

என்பது ஒத்தாதலின், அங்ஙனம் சிறப்பிக்காமையின், 'காம்பசி, உடும்' என்பன போலத் தொல்லாசிரியர், மீமிசைச் சொல் எனவும் இருபெயரொட்டெனவும் கூறுப. 'மடங்க லெறுழ்வலி' என்பதற்கு மடங்கலினது மிக்க வன்மை எனப் பொருள் கூறி ஆறும் வேற்றுமைப் பண்புத்தற்கிழமை என இலக்கணங் கூறுக. "சில முடிபில் தொழிற்பெயரே பகுதியாதலு முண்டாகலின் இருப்ப என்பதில் இருப்பு பகுதி யென்க" என்பர். அங்ஙனம் வருதல் தொழிலடியாகப் பிறந்த பெயர்க்கே யன்றிக் காரியப் பொருட்டாகிய வினையெச்சத்திற்கு ஏலாதென்க.

97. அஞ்சலென் றவலக் கொடியனேன் றனைநின்
னடியரிற் கூட்டுக வுலகி
னஞ்சமுண் டருண்ட கண்டமென் றுனது
நற்களை மிகழ்பவ ருளரோ
வஞ்சமைங் கரன்கொண் டிளவலோ டிகலி
வலங்கொள்வா தின்னும்வந் துறினுந்
தஞ்சமென் றிடாது நின்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) ஐங்கரன் - விநாயகக்கடவுள், இளவலோடு - இளையபிள்ளையாருடன், இகலி - மாறுபட்டு, வஞ்சம் கொண்டு - உள்ளே கபடத்தைக் கொண்டு, வலம் கொள் வாது-பிரதக்ஷிணஞ் செய்யத் துணியும் வாதம், இன்னும் வந்து உறினும்-இன்னமும் ஒருமுறை நேரிடினும், தஞ்சம் என்றிடாது-(வலம் வருதல் முன்

போல) எளியதாகு மென்றதபடி, நின்றிடும் - அகன்று பருத்துள்ள, சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, உனது நல் களம் - தேவரீருடைய செவ்விய திருக்கழுத்தை, நஞ்சம் உண்டு இருண்ட கண்டம் என்று - விஷத்தை யருந்திக் கறுத்த கழுத்து (ஈதென்று), உலகில் இகழ்பவர் உளரோ - உலகத்தில் இகழ்ச்சி கூறுவாரும் உண்டோ? இல்லை; (அதுபோலவே அடியேனது சேர்க்கையுடைமை பற்றி அடியவரை இகழ்தல் செய்யாராகலின்), அவலம் கொடியனேன் றனை அஞ்சல் என்று நின் அடியாரில் கூட்டுக்-பயனற்றவனாகிய தீயேனையும் பயப்படாதே யென்று உமது திருத்தொண்டர் குழாத்துள்ளே சேர்த்தருள்வீராக; (எ - று.)

(வி - ரை) கொடிய விடமுடைமை நோக்கி உமது செவ்விய களத்தை இகழாது, உலகிற்கு அவ் விடத்தினு லெய்தும் இடுக்கணகல அதனை அடக்கி ஆண்டமைபற்றிப் புகழுமாறுபோல, கொடியேனை யுடைமை நோக்கி உமது செவ்விய அடியவரை இகழாது, இக் கொடியேனால் உலகிற்கு விளையும் இடுக்கணகல அடக்கி ஆண்டமைபற்றிப் புகழ்வராகலின், அடியவரிற் கூட்டுக வென்றா ரென்பது திரண்ட பொருள். "உலகை வலம்வந்து முன்ன ரெய்தினார்க்கே கரத்திற் கொண்ட இக் கனி யளிப்ப" மெனப் பெருமானுரைத்தருளலும், அங்ஙனமே முருகக்கடவுள் செல்லுந் தருணத்தில், "பெருமானை வலம் வரின் உலகை வலம் வந்ததாம்" என விநாயகக் கடவுள் மதித்து வலம் வந்து கனி பெற முன்னர்த் துணிந்தா ராகலின், 'வஞ்சங் கொண்டு' என்றும், மலையுருவாகிய இப் பெருமானை வலம் வருதற்குள் அம் முருகக்கடவுள் மயிலிவர்ந்து உலகையே வலமாய் வந்துவிடுவா ராதலால், அவ் வஞ்சம் இனிப் பலியாதாகலின், 'தஞ்சமென்றிடாது நின்றிடும்' என்றுங் கூறினர். வஞ்சம் - கபடம். தஞ்சம் - எளிமை. இதனை,

(தொல் - இடைச் - கஎ)

'தஞ்சக் கிளவி யெண்மைப் பொருட்டே" என்பதனு லுணர்க.

98. அணிந்திடு கலனுஞ் சாந்துமொண் டுகிலு
மரிவையர் போகமும் பெறுவான்
துணிந்திடு மனமென் றுனைப்பொரு ளாகத்
துணியுமோ வறிந்திலேன் றமியேன்
பணிந்திடு மயன்மால் பெருமைக ளனைத்தும்
பறவைகொண் டெழுதலாய் முடிந்து
தணிந்திட நிமிர்ந்து நின்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப-ரை) பணிந்திடும் - (பரத்துவ முடையரெனப் பலரால்) வணங்கப்பெறும், அயன் மால்-பிரம விட்டுணு மூர்த்திகளுடைய, பெருமைகள் அனைத்தும்-பெருமைகளெல்லாம், பறவை கொண்டு எழுதல் ஆய்-அன்னமும் கருடனும் ஏறிச் செல்ல அமர்பவராகி, முடிந்து தணிந்திட - முடிவு பெறுதலால் குறைவெய்த, நிமிர்ந்து நின்றிடும்-(அங்ஙனம் ஏறிச் செல்ல வொண்ணாமல்) ஓங்கி நிலை பெற்ற, சோணசைலனே கைலைநாயகனே - சோணசைலரே! கைலைநாயகரே!, அணிந்திடும் கலனும் - புனைதற்குரிய ஆபரணமும், சாந்தும் - கலவையும், ஒள் துகிலும் - அழகிய ஆடையும், அரிவையர் போகமும் - மங்கையர் போகமும், பெறுவான் - பெற விரும்பி, துணிந்திடும் மனம் - அவற்றையே பொருளாக நிச்சயித்துள்ள என் மனமானது, உனை பொருளாக-தேவரீரையே பொருளாக, என்று துணியுமோ-எக் காலத்தில் தெளியுமோ!, தமியேன் அறிந்திலேன் - யான் உணர்ந்திலேன்; (எ-று.)

(வி-ரை) பொய்ப் பொருள்களை மெய்ப் பொருள்களாகத் துணிந்த என் மனம் அத் துணிவகன்று மெய்ப்பொருளாகிய நும்மையே மெய்ப் பொருளாகத் துணியும் நாளும் உளதோ! என்பார், 'என்று துணியுமோ' என்றார். பிரம விட்டுணு மூர்த்திகள் ஏறிய பறவைகளால் வந்தப் பெறுதலின் அவர் பெருமை குறைவெய்

றினவாக அங்ஙனம் தம் பெருமை குறைவெய்தாதபடி எத்தகைய பொருள்களாலும் எந்நுத கரியதாய் அண்டமுற்றும் ஊடுருவி நின்ற மலை யுருவாயினை யென்பார், 'நிமிர்ந்து நின்றிடும் சோண சைலன்' என்றார். அன்றியும், சிவபெருமான் திருவுருக்கொண்ட காலத்தும் வாகனமாக ஏனையவற்றைக் கொள்ளாது தரும தேவதையையே கொண்டு விளங்கும் சிறப்புடைமை தோன்ற,

(பழமலையந்தாதி-கரு)

"மாலைக் கலுழனெய் யோனெனத் தாங்க வயங்குமரு
ணூலைக் கலுழ வொழியென மேற்றிவர் நோன்மையன்."

எனப் பிறரும் இவ் வாசிரியர் விதந்திருப்பதும் உணர்க.

முடிந்து - முடிதலால்; வினையெச்சத் திரிபு. பெருமைக ளனைத்தும் தணிந்திட என இயையும்.

99. பூவுறு தடமு மதியுறு விசும்பும்
பூணுறு முறுப்புநின் றலகாள்
கோவுறு நகரு மென்னவெ மனநின்
குரைகழன் மருவுநா ளுளதோ
வோவுறு மனைசெய் பவர்கொள மரந்தாங்
கோங்கல்க ணணவுன் னினர்க்குத்
தாவுறு முயர்வீ டளித்தருள் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) ஓவுறும் மனை - (பந்தத்திற்கு ஏதுவாதல்பற்றி அறிஞரால் வெறுத்து) அகற்றப்படும் வீட்டினை, செய்பவர் கொள- கட்டுவோர் கொள்ளுமாறு, மரம் தாங்கு - பல மரங்களைத் தம் மிடங் கொண்ட, ஓங்கல்கள் நாண - மலைகள் வெட்க முறும்படி, உன்னினர்க்கு - தன்னைத் தியானித்தவர்க்கு, தாவுறும் - (எல்லா

ராலும்) விரும்பப்படும், உயர் வீடு - உயர்ந்த முத்தி வீட்டினை, அளித்தருள்-பாலித்தருளும், சோணசைலனே கைலைநாயகனே-சோணசைலரே! கைலைநாயகரே!, பூ உறு தடமும் - மலர்களையுடைய நிறை குளமும், மதி உறு விசும்பும் - சந்திரனையுடைய ஆகாயமும், பூண் உறும் உறுப்பும் - அணிகளணிந்துள்ள அவயவங்களும், நின்று - (நீதிநிலை) நின்று, உலகு ஆள் - உலகினை ஆட்சி செய்யும், கோ உறு - அரசினையுடைய, நகரும் என்ன - நகரமும் போலப் (பொலிவுறுமாறும்), என் மனம் - அடியேனது மனம், நின் குரை கழல்-தேவரீருடைய ஒலி பெற்ற கழலணிந்த திருவடியை, மருவும் நாள் உளதோ - பெற்று வாழும் காலமும் உண்டாங் கொல்லோ? (அறியேன்); (எ - று.)

(வி - ரை) தடமும் விசும்பும் உறுப்பும் நகரும் முறையே, பூவும் மதியும் அணியும் கோவும் பெற்றாலன்றிப் பயன் பெறுவாறு போல, என் மனம் தேவரீர் திருவடிகளைப் பெற்றாலன்றிப் பயனுறாதென்பதூஉம், மற்றை யோகங்கள் இழிந்த மனையையளிக்கும் ஆற்றலும் தமக்கின்மையால், அதற்குரிய கருவிகள் பலவற்றுள் மரமொன்றையும் வேண்டியோர் கொள்ளத் தாங்கிநிற்ப, இச் சோணசைலம் தன்னைச் சிந்தித்த துணையானே உயர்ந்த வீட்டையே யளித்தல் காண்டலின், தாம் நாணுவ ஆயின வென்பதூஉம் கருத்தாகக் கொள்க.

கழல் - தானியாகுபெயர். 'ஒவுறும்' 'தாவுறும்' என்பன செயப்பாட்டு வினைப்பொருளுணர்த்தும் படு விகுதிகள் தொக்கு நின்றன. ஒவுறு மனை - அழியும் மனை எனவுமாம். தாவுறும் வீடு-யாவராலும் விரும்பப்படும் முத்தி வீடு என்க. பற்றுக்கோடாகாது சின்னாளி லழிந்தொழியும் மலையெனவும், பற்றுக்கோடாய் எந்நாளும் நிலைபெறும் வீடெனவும், இவற்றிற்குப் பொருள் கோடலும் ஒன்று; இங்ஙனம் கொள்ளுங்கால், தாவு - பற்றுக்கோடென்க.

100. சீரணி புகழுங் கல்வியுஞ் சிறந்த
செல்வமு மில்லில்வாழ் பவர்க்குப்
பேரணி கலமென் புதல்வருங் கதியும்
பெறத்துதிப் பவர்க்கருள் பவனீ
நேரணி கதியை மறந்தவர் கண்டு
நினைந்துற மிக்கபே ரருளாற்
றூரணி முழுதுந் தோன்றிடுஞ் சோண
சைலனே கைலைநா யகனே.

(ப - ரை) அணி கதியை மறந்தவர் - சிறப்பமைந்த முத்தி யென்பது (ஒன்றுண் டென்னும் சிந்தனையு மில்லாது) அதனை மறந்தவரும், நேர் கண்டு நினைந்து உற - எதிர் கண்டவுடனே அச் சிந்தனையுடையராய் தியானித்து அம் முத்தியை யடையும் படி, மிக்க பெரு அருளால்-மிக வோங்கிய திருவருள் விசேடத் தால், தாரணி முழுதும் - உலகமுற்றும் (காண), தோன்றிடும் - விளங்காநிற்கும், சோணசைலனே கைலைநாயகனே - சோண சைலரே! கைலைநாயகரே!, சீர் அணி புகழும் - மேன்மை யமை ந்த கீர்த்தியும், கல்வியும் - வித்தையும், சிறந்த செல்வமும் - (அர சுரிமை முதலிய) மிக்க ஐசுவரியமும், இல்லில் வாழ்பவர்க்கு - இல்லற வாழ்க்கையுடையார்க்கு, பெரு அணிகலம் என் - பெரிய தொரு ஆபரணமாகுமெனஅறிஞரால் விதந்து கூறப்படும், புதல்வ ரும் கதியும் பெற - புத்திரப் பேறும் முத்தியும் எய்தும்படி, துதிப்பவர்க்கு-(உம்மைத்) தோத்திரஞ் செய்பவர்களுக்கு, அருள்ப வன் நீ-தந்தளிப்பவர் தேவரீர்; (எ - று.)

(வி-ரை) ஆகவே, † "வேண்டுவார் வேண்டுவதே ஈவான்"

---

† அருளுடையவரசு தேவாரம் - திருமறைக்காடு - திருத்தாண்டகம் - க

என்றபடி வேண்டியவற்றை அளிக்கத் தேவரீர் சித்தமாக விருந் தும் உம்மைத் துதித்து இத்தகைய பேறுகளை எய்தாமை எம் போலியர் குற்றமன்றி உமது குற்றமாங்கொலோ என்பது இசையெச்சம்.

(திருக்குறள் - ௬௰)

"மங்கல மென்ப மனைமாட்சி மற்றத
னன்கல நன்மக்கட் பேறு."

என்றார் தெய்வப் புலவருமாகலின், புத்திரப்பேறின்றியக்கால் இல்லறம் பயன்படா தென்பது தோன்ற, 'அணிகலமென் புதல் வர்' எனக் கூறினார் எனவும்,

(திருவிளையாடற் புராணம் - கலவிசேடப் படலம் - ௨)

"இகபரந் தந்நுல வாவீடு தருவான்"

எனப் பேறுகளை இம்மை மறுமை வீடென மூவகைப் படுத்த லுண்டேனும், மறுமை எனப்படும் சுவர்க்காதி யின்பங்களும் இம்மை யின்பம்போலவே நிலையற்றதாகலின் அதனை யொழித்து முத்தி யின்பத்தையே மறுமையெனக் கொண்டு இரண்டென்ன லும் நூற்றுணி பென்பது தோன்ற, சுவர்க்காதி யின்பத்தை வேறு விதவாராயின ரெனவும், முத்திவேட்கை யில்லாரும் காட்சி மாத்திரத்தானே அவ் வேட்கை யுடையராய்த் தியானித்து அத னைப் பெறுமாறு நினைக்க முத்தி தருவதாய் நெடுந் தூரத்தார் கண்களுக்கும் தோற்றக் கொண்ட அருளுருவம் இச் சோண சைல மெனவும் கொள்க. இகபரங்களை கொண்டமையை,

(ஷ. திருநகரப் படலம் - ௮௬)

"எங்கு மீசனைப் பூசைசெய் திகபர மடைவார்"

என்பதனாலும், பேறெய்தாமை ஆன்மாக்கள் குறையென்பதனை,

(திருவிடைமருதூர் மும்மணிக்கோவை - கக)

"நின்னது குற்ற முளதோ நின்னைக்
தென்னருங் கோடி யிடர்ப்பகை களைந்து
கண்ணுறு சிற்றத்துக் காலனை வதையா
விறப்பையும் பிறப்பையு மிகந்து சிறப்பொடு
தேவ ராவின் கன்றெனத் திரியாப்
பாவிக டமதே பாவம்"

என்பதனானு மறிக. முத்தியையும் சுவர்க்காதிகளையும் சுட்டப் பொதுப்படக் கதியென்று ரென்னலும் ஒன்று.

மறந்தவரும் என்னும் உயர்வு சிறப்பும்மை தொக்கது. கதி மறந்தவர் நினைந்து கதியுறவென முடிக்க. கதியு மென்பதில் உம்மை உயர்வு சிறப்பு. ஏனையவை எண்ணுப் பொருளன.

சோணசைலமாலை மூலமும் விருத்தியுரையும்
முற்றுப்பெற்றன.

---

"சிவப்பிர காசந் திருவடி போற்றத்
தவப்பிர காசந் தானே வருமே."

சீகாளத்தி புராணம்

"புனையெழில் வடிவி னோர் பொதுமகட் கண்ட மைந்தர்
மனைமெனப் புலவர் நெஞ்ச மருளுமின் றமிழ்ப்பா மாலை
[illegible] யவற்கே சாத்துஞ் சிவப்பிர காச னென்னு
முனைவனெம் மடிகள் பாத முளரிகள் சென்னி சேர்ப்பாம்.

சிவப்பிரகாச சுவாமிகள் திருவடி வாழ்க.

FIRST EDITION] [1000 COPIES